யுவ ஆவணி
திருவள்ளுவராண்டு 2026
1995 ஆவணி

ஆறு பகுதிகள் கொண்ட ஒரு
தொகுதியின் விலை.

இலங்கையில் : ரூபா 2700|-
இந்தியாவில்: ரூபா 1200|-
பிறநாடுகளில் அமெரிக்க டாலர் 60|-

பாட்டு முதற் குறிப்பு அகராதி
பாட்டுடைக் கோவில் அகராதி
பாட்டுத் தலைப்பு அகராதி
ஆசிரியர் அகராதி
என்பன
பன்னிரண்டாம் பகுதியில்
இறுதிப் பக்கங்களாக உள.
தொகுப்பின் பொருளடக்கம்
முழுமையும் எல்லாப் பகுதிகளிலும்
முன் பக்கங்களில் உள.

ஒளிஅச்சுக்கோப்பு, அச்சிடல்:
சாந்தனகம், 4, முதல்மாடி, 834, அண்ணாசாலை,
சென்னை-600 002. தொலைபேசி: 834505, 8250050.














# நூலாக்கம்

**பதிப்பாசிரியர்:** சித்தாந்தச் செம்மல், சைவசித்தாந்த மாமணி வித்துவான் இரா. அம்பை சங்கரனார் ஆசிரியர், ''சித்தாந்தம்'' சென்னை. **இணைப் பதிப்பாசிரியர்:** கலாநிதி நா. சுப்பிரமணியன் முதல்நிலை, மூத்தவிரிவுரையாளர், தமிழ்த் துறை, யாழ்ப்பாணப் பல் கலைக் கழகம், யாழ்ப்பாணம்; **நூல் தொகுப்பு சேகரிப்பில் உதவி, ஆலோசனை:** மயிலங் கூடலூர் பி. நடராசன், யாழ்ப்பாணம்; க. முத்துக் குமார சுவாமி, சைவசித்தாந்த நூற் பதிப்புக் கழகம், சென்னை; புலவர் வி. அண்ணாமலை முதலியார், பெங்களூர்; புலவர் த. கனகரத்தினம், வெள்ளவத்தை, கொழும்பு; எம்மெஸ். சுந்தரேச ஐயர், திண்டிவனம்; ரெ. ராமசாமி, அலோஸ்டார், மலேஷியா; ஐ. குலவீரசிங்கம், கோலாலம் பூர், மலேஷியா; மகாவித்துவான் சி. அருணைவடிவேலு முதலியார், காஞ்சிபுரம்; திருப்பழனஅடிகள், (பழனிசாமி படையாச்சி), ரோஸ் ஹில், மொரிசியசு; வித்துவான். வே.ரா. தெய்வ சிகாமணிக் கவுண்டர், வேலம் பாளையம்; ஐ. தி. சம்பந்தன், இலண்டன்; கவிஞர். ந. கந்தசாமி, மல்ல சமுத்திரம்; முனைவர் ஆ. கந்தையா, சிட்னி, ஆஸ்திரேலியா; மு. சு. சங்கர், திருநெல்வேலி; முனைவர் பொ. பூலோகசிங்கம், கொழும்பு; திருமதி சந்தனா நல்லலிங்கம், கொழும்பு; சுப. ஆவுடையப்ப தேசிகர், அம்பா சமுத்திரம்; டாக்டர் பழனிச்சாமிக் கவுண்டர், பிஜித் தீவு; பீக்கே நாயுடு, தென் இந்திய சன்மார்க்க சங்கம், நந்தி பிஜித்தீவு; கவிஞர் கலைவாணன், திருவானைக்கா; ஈ. வி. சிங்கன், சிங்கப்பூர்; வே. பேரம்பலம், மிச்சிகன், அமெரிக்கா; வி. எஸ். குமாரசாமி, இசுக்கார்பரோ, கனடா; ந. ஐயராமன், மேலமாம்பலம், சென்னை; **நூலாக்கம், அகராதி, மெய்ப்பு,' மேற் பார்வை:** புலவர். வெற்றியழகன், நங்கநல்லூர், சென்னை; கௌசல்யா சுப்பிரமணியன், மயிலாப்பூர், சென்னை; த. பஞ்சநாதன், பெசண்ட்நகர், சென்னை; அம்பை ச. பரமசிவம், மாம்பலம், சென்னை; **ஒளிஅச்சுக் கோப்பு, கணிப்பொறிப் பணி:** க. இரவி, க. சாந்தி, கோ. பார்த்த சாரதி, ம. இராசப்பா, மூவை ந. சுந்தரராசன், அ. ஜெயராஜசிங்கம், நா. உஷா, ச. செந்தில்குமார், சி. சண்முகம், சென்னை; **பக்கமாக்கல்:** ஓவியர்கள் அ. சந்திரஹாசன், ஜெ. பூவரசு, லோ. பாலமுருகன்; **வண்ண ஓவியங்கள்:** இரா. சிவக்கொழுந்து, வண்ணாரப்பேட்டை, சென்னை; **படச்சுருள் எதிர்மறை:** சக்தி வண்ண ஆய்வகம், சிந்தாதிரிப்பேட்டை, சென்னை; **அச்சிடல், கட்டு வேலை:** உதயம் ஆப்செட், சிந்தாதிரிப் பேட்டை, சென்னை; **தங்க அச்சு:** விநாயகா டைஸ்டாம்பு ராயப் பேட்டை சென்னை; கிருஷ்ணன் கட்டாளரகம், வன்னியதேனாம்பேட்டை; செந்தில் கட்டாளரகம், திருவல்லிக்கேணி, சென்னை; **அலுவலக உதவி:** செ. ரா. ஷோபனா, ச. பரமசிவம், கி. சரவணன், ச. முருகவேள், சென்னை; **நிதிக்கட்டுப்பாடு:** தெ. அருணாசலம், சென்னை; **பொதுத் தொடர்பு, இணைப்பு, மேற்பார்வை:** தெ. ஈஸ்வரன், கொழும்பு. **தயாரிப்பு:** க. சச்சிதானந்தன், மறவன்புலவு, சாவகச்சேரி.

# பொருளடக்கம்

## பத்தாம்பகுதி



## பதினோராம் பகுதி



## பன்னிரண்டாம் பகுதி

உ

# மயூரகிரிச் சண்முகநாதர் பிள்ளைத்தமிழ்

## மழவராயனேந்தல் ஸ்ரீ சுப்பிரமணிய பாரதியார்

## 1. காப்புப் பருவம்

### விநாயகர் துதி

பூங்கமல வாவி புடைசூழ் மயூரகிரிக்
காங்கெயன்மேற் பிள்ளைக் கவிபாடத்-தேங்கி
நடக்குஞ் சரமுகத்தான் னாட்கலையைத் தாங்குங்
கடக்குஞ் சரமுகத்தான் காப்பு. 1

### சுப்பிரமணியர் துதி

பூமேவு தடங்கடல்சூழ் புவியாகி யகண்ட
பூரணமாய்க் காரணமா யாரணமு மாகிக்
காமேவு நறும்பொழில்சூழ் மாயூர கிரிவாழ்
கடவுளே நின்கவிக்குக் காப்பெவரை
யுரைப்பேம்
நாமேவு கலைவாணி நாதனுக்கு மரற்கு
நளினமலர் விழியாற்கு நாகநாட் டிறைக்குந்
தேமேவு வானவர்க்கு மசுரர்பகை தடிந்த
செல்வனீ யதனானின் கவிக்குநீ காப்பே. 2

வேறு

## சிவன்

வடபொலன் கிரியெனு முலைக்கண் கறாதொளிரு
மதிமுகம் வெளுத்திடாது
மண்ணருந் தாதகடு பூரித்தி டாதுநெடு
மணிவயி றுளைந்திடாது
குடவலைகள் குமுறவரு சரவணையி னிலவுபொழி
கோடிசூ ரியகிரணமோர்
குலவுதிரு வுருவெடுத் தென்னவரு குன்றாக்
குடிக்குமர னைப்புரக்க
தடவரை யெனுங்கயிலை வேர்விழுந் தென்னவிடை
தவளவே திகையினாப்பண்
டனித்தங் குரித்துத் தழைத்து வெங்கட்செவித்
தறுகட்ப ணாடவிக்கார்
விடவரவ மெனுநெடிய விழுதிலக விபுதநதி
வெண்கொடி துலங்கமலர்பொன்
மிளிர்பிறை விளங்கமெய்ஞ் ஞானப் பலன்தரும்
வெண்ணிறக் கற்பதருவே. 3

## தேவி

விண்ணவர்கள் பொன்னாடு மேவவிபு தர்க்கரசு
விருதுசெங் கோனடாத்த
மின்கொடி யெனத்திகழ் புலோமசை மணிக்குழையில்
மேவுதா டங்கமிலகக்
கண்ணனிரு கண்மலர் முகிழ்ப்பநான் முகன்மலர்க்
கமலத்தில் வீற்றிருப்பக்
கார்த்திகை களிப்பவளர் சரவணப் பொய்கைவரு
கந்தனைத் தனிபுரக்க
தண்ணறுங் கமலமுங் கதலியுந் தந்துவட
தருவிளந் தளிர்தளிர்த்துத்
தண்சுரும் புலவுமாக் கோங்கரும் பிச்செவ்வி
தண்காந்தண் மலர்தந்துதேன்
எண்ணறுங் கிஞ்சுகம் பூத்துநற் சண்பகமு
மீன்றுகுவ லயமலரவே



யிமயா சலத்தெழுந் திமையோர் தொழப்படர்ந்
திசையுமர கதவல்லியே. 4

## திருமால்

மூரித் தடக்கையான் முசலஞ்சு ழற்றிமத
மும்மதம் பெருகவெகுளி
முகபடாங் கொண்டுபய நிகளந் தெறித்தடரு
முனைமனப் பாகெறிந்து
கூரித்த வெண்கோடு கொடுமோதி வாழையின்
குலையின்வா னவரைவாட்டுங்
குஞ்சரத் துயிர்கொண்ட மாயூர கிரியில்வரு
குருபரன் றமிழ்புரக்க
வேரிச் செழுங்கமல மலர்குவிய மலரினிடை
விளரிவண் டினமொடுங்க
மேவுபர காயமுறு யோகியென மறுகூட்டில்
வீறுபுள் ளினமடங்கப்
பாரிற் படர்ந்திலகு கவளமென வெழுதிமிர
படலமுழு தும்விழுங்கப்
பரிதிமண் டலமறைய வோராழி தொடநின்ற
பச்சைப் பசுங்கொண்டலே. 5

வேறு

## விநாயகர்

போரேறு கடகளிறு கொண்டலொத் தார்த்தெழ
வானேறு பரிதிரண மண்டலத் தூட்குடை
போலேறு கடுவெயில் மறைந்திடப் போர்க்கெழு
பூபாலர் தொடுசிலை வளைந்திடப் பார்த்திபர்
தேரோடு புரவிகண் மடிந்திடக் காக்கைகள்
போயேறு குருதியி லளைந்திடப் பூப்பொலி
யேரேறு துளபமுகில் பஞ்சவர்க் காப்பொர
மூவாறு தினமமரு மண்டிசைப் போர்க்கதை
யேடாக வடவரை யிலங்குபொற் கோட்டினி
லேழ்பூமி தொழமுக மிசைந்தநற் கோட்டினை
நாராச மெனவெழுது குஞ்சரத் தாட்டுணை
யேநாளு மனதினிடை யஞ்சலித் தேத்துதும்

நேரேறு நவமணிசெய் பந்தரிற் கார்த்திகை
மானாரொ டரமகளிர் மங்களத் தாற்பொரி
நீடாழி மணிசிதற முண்டகப் பூப்பொதி
நீர்வேதன் விதிமுறை சடங்கிடப் பாட்டிசை
மாறாது தரவமர துந்துமிக் காட்டொலி
நீடூழி யுருமென முழங்கிடப் பூட்டிய
வாரேறு களபமுலை குங்குமச் சேற்றுடன்
மார்பூடு வரமுக மிலங்கிடப் போர்த்தொழின்
மாறாது விழியிணை புயங்களைப் பார்த்திட
வானாட னருளமர குஞ்சரிப் பேட்டுடன்
நாணோடு தலைவளைய வுந்திருப் பூட்டிய
மாயூர கிரியில்வரு கந்தனைக் காக்கவே. 6

வேறு

## இலக்குமி

கண்டேறு சொற்கண்டு தத்தையடை யத்தனங்
கண்டகம லம்பயமுறக்
கலகவிழி யிணைகண்டு வரிவண்டு மதுவுண்டு
கருகியுடல் பதறவடிவு
கொண்டேறு பச்சைப் பசுந்தோகை சிறையினொடு
கொடியவன மடையவந்தக்
குறமயின் மணம்புணர் மயூரகிரி முருகனைக்
கூறுமென் றமிழ்புரக்க
வண்டேறு சுரிகுழற் கற்பகந் தனைநல்க
வதனமதி யத்தையருள
மார்பிடங் கொண்டுவட வரையைச் சினந்ததன
மதவார ணத்தையுதவப்
பண்டேறு கிஞ்சுகப் பூங்குமுத வாய்நறும்
பவளமமு தினையளிக்கப்
பாததூள் பலகோடி யரமகளி ரைத்தரப்
பாற்கட லுதித்தமயிலே. 7

## பிரமன்

விண்டலத் துடுவினம் பொலுபொலென் றுதிரவுரு
மேறெனக் கெர்ச்சித்துநீள்
வெடிவால் விதிர்த்துவெம் பகுவாய்தி றந்துகடு
விழியினற் பொறிகள்சிதற



அண்டலர்க ளெனவந்த வானவர்கள் கடகளிறி.
தாமெனக் கவின்மடங்க
வாருயிர் கவர்ந்தருண் மயூரகிரி வாழுமென்
னையன்முத் தமிழ்புரக்க
பண்டிதழ்கள் குவியாது வண்டுகள் புகாதுநீள்
பங்கப்ப டாதுநாளும்
பரிமளம் வாடாது வருமாய னுந்தியம்
பங்கேரு கத்துதித்து
மண்டலமு மண்டபகி ரண்டநவ கண்டமும்
மறிகடலு மொருநொடியிலே
மனத்திடை நினைத்துப் படைத்துக் களித்துநான்
மறைதொழ வருங்கடவுளே. 8

வேறு

## கலைமகள்

சேற்றுக் கமலத் திடைபுகுந்து
செழும்பா சடையின் குருத்தருந்தித்
தெண்ணீ ருழக்கி நீர்விடுத்துத்
தெறிக்கு முலைப்பாற் புனிற்றெருமை
தாற்றுக் கதலிக் குருத்தொடித்துத்
தனித்துக் கறித்துச் சண்பகத்திற்
றனிக்கண் வளர்மா யூரகிரித்
தலைவன் மீதிற் றமிழ்புரக்க
போற்றற் கரிய புரந்தரனும்
புணர்மின் கொடியாம் புலோமசையும்
புகழ்வா னவரு மரம்பையரும்
பொருந்தாச் சிறையிற் போகாமற்
கூற்றுக் கிணையாய் வடிவெடுத்த
குடக்காத னுக்கு விழிகடுயில்
கூர வரந்தா வெனநாவிற்
குடிகொண் டிருந்த குலமயிலே. 9

வேறு

## பலதேவர்

வீடாறு பெறுமுதல்வன் மற்றொப் பிலாத
வேதாவை யொருபிரண வத்துக் குநீயும்
மேலான பொருளுரை யெனக்குட் டுநேம

நாடாள னிதமயி னடத்திக் குலாவு
மாயூர கிரிவரு குறத்திப் பெணேய
னாடோறு மனமகிழ் கவிக்குச் சகாயர்
வாடாத திதியுதர கர்ப்பத் தினூடு
போயேக வடிவெழு மருத்துக் களாக
மாறாடு குலிசனுயர் சொர்க்கத்தில் வாசர்
நீடாழி பெருகுதிசை யெட்டுக்கு நாதர்
மேனாளி லதிதிமுறை யிற்பெற்ற பாலர்
நேராக வருமமரர் முப்பத்து மூவரே. 10

வேறு

## இதுவுமது

குதிக்குந் தரங்கத் திரள்கொழிக்குங்
குளிர்மா மணிவெண் ணிலவீனக்
குலவுங் குமுத முகையவிழக்
கோல வரிவண் டினந்தொடரக்
கதிக்குந் தேனா றெனப்பெருகிக்
கழனி தோறும் பயிர்விளைக்குங்
கனஞ்சேர் துங்க மலையில்வளர்
கதிர்வேன் முருகன் கவிபுரக்க
உதிர்க்குங் கிரணன் றிரணமென
வொளியே பரப்பி யிறுங்காலத்
துருமே றென்ன வுருத்தெழுந்தங்
கொருமா மரத்தி னுடல்பிளந்து
துதிக்கும் வேலுந் திகழ்மயிலுந்
துடிசேர் சேவற் கொடியுநிதந்
துலக்கு நவவீ ரருமடுபோர்
தொடங்குந் திடஞ்சே ரிடும்பனுமே. 11

## 2. செங்கீரைப்பருவம்

வரையிட்ட சக்ரகிரி சங்ககிரி யுயர்சக்ர
வாளகிரி மலைய கிரிநீள்
வடபொலன் கிரிகைலை யங்கிரிவ ராககிரி
மறுகுமந் தரகி ரிமகா



தரையிட்ட வுதயகிரி யத்தகிரி யிந்த்ரகிரி
சந்த்ரகிரி விந்த கிரியோர்
சத்யகிரி ரத்நகிரி சிரகிரி விசாலகிரி
சையகிரி யிமய கிரிவா
னிரையிட்ட ராமகிரி சோமகிரி யேமகிரி
நீலகிரி சிகர கிரிசேர்
நிடதகிரி கந்தமா தனகிரிக டோரகிரி
நீலமா யூர கிரியுந்
திரையிட்ட மலர்வாவி சூழவிளை யாடுமுகில்
செங்கீரை யாடி யருளே
திங்கட்கு வட்டிலெழு துங்கக்கி ரிக்கிறைவ
செங்கீரை யாடி யருளே. 12

கூனாரி ளம்பிறைக் குஞ்சரக் கோட்டினெழு
குளிர்மணித் தரள மள்ளிக்
குமுறுகண் டீரவக் குருளைவெரு ளச்செழிய
குங்குமச் சினையொ டித்து
மானாக முட்கொண்டு வடகுவடெ னுங்கடிய
மலைவிட் டிறங்கி வலமும்
வாரிச் சுழித்துச் செழித்துநிரை கொண்டுநுரை
மண்டிவலை கொண்டெ மும்பி
மேனாடு செவிடிட முழங்கித் திரண்டுகரை
மேவுகா லானி றைப்ப
வேரிச் செழுங்கமல வாவித் தடம்பெருகி
வீசுசல ராசி தேடித்
தேனாறு புடைபெருகு மாயூர கிரிமுருக
செங்கீரை யாடி யருளே
திங்கட்கு வட்டிலெழு துங்கக்கி ரிக்கிறைவ
செங்கீரை யாடி யருளே. 13

பொன்னிறத் தூவிகொண் டணைத்துவெள்
ளோதிமம்
பொற்பிளம் பார்ப்பி னுக்குப்
புணர்முலைப் பாலொடு கலந்துசெங் கமலப்
பொகுட்டுறை நறவெ டுத்துத்
துன்னிதழ்ச் சங்கொடு புகட்டிவத னத்திடை
சுழற்றிக் குறங்கு தட்டித்

துய்யபங் கேருக மணித்தொட்டி லிட்டுத்
துதைத்துதா லாட்டி யிரவின்
மன்னுசெங் குமுதப் பசுந்தேற லூட்டிமலர்
வாய்வளைய மாறி யுண்டு
மணிவயிறு தேக்கிட்டி ரதிகேளி விளையாடி
மார்பினிடை துயில்கூ ரவே
தென்னிடுங் களிவண்டு சூழ்நேம நாடனே
செங்கீரை யாடி யருளே
திங்கட்கு வட்டிலெழு துங்கக்கி ரிக்கிறைவ
செங்கீரை யாடி யருளே. 14

மன்றலந் தெரிவையர் குழாமெதிர் செலக்காள
மாவிளங் குயில்கள் கூவ
வன்கமுகி ளம்பாளை சாமரையி ரட்டமுகை
மல்லிகைச் சங்கொ லிக்க
இன்றுதின நன்றென விளந்தெங்கு தலையசைத்
திளநீர் குலுங்க வரிவண்
டிசைபாட வனசமுகை மலரமலர் வாய்திறந்
தெதிர்மொழி தரக்கிஞ் சுகம்
துன்றுசெங் காந்தளங் கைகுவிய நறுமலர்கள்
சொரிகடம் பலர்வி ரிக்கத்
தும்பைமலர் நறவொழுகு மன்னரா சிகளெனத்
தொடைவேள் விருந்த ருந்தத்
தென்றலங் குலவிவரு குன்றையம் பதிமுருக
செங்கீரை யாடி யருளே
திங்கட்கு வட்டிலெழு துங்கக்கி ரிக்கிறைவ
செங்கீரை யாடி யருளே. 15

கடலகடு கிழியவரு மலைசுவற நெடியவட
கனககிரி நிலைபெ யரநீள்
கறையொழுகு படவரவு திசைகள்பட விசையினொடு
கடகளிறு பிளிற நெடுமால்
வடதருவின் மறையமறை புகலுமய னகல்வனச
மலரில்விழ வமர ரிரிய
மதிபருதி தனதுநிலை விடவுடுவி வுலகினிடை
மலர்சொரிவ தெனவு திரநீள்
புடவிகிடு கிடெனவுமை யவளுமெம தரனுமிது
புதுமையென வுடல்ப தறியே



புயல்கள் சளசளெனவிழு மழைசொரிய வினவசுரர்
பொருமனது பறைய றையவே
திடதுடின மொடுகடின நடனமிடு மயின்முருக
செங்கீரை யாடி யருளே
திங்கட்கு வட்டிலெழு துங்கக்கி ரிக்கிறைவ
செங்கீரை யாடி யருளே. 16

## வேறு

காதலு டன்குற மாதுபு ணர்ந்தவ னாடுக செங்கீரை
கங்கைந திக்கு ளெழுந்தம தக்களி றாடுக செங்கீரை
கோதறு சந்த்ரக லாதிரி தந்தவ னாடுக செங்கீரை
குஞ்சரி மெய்ப்புற மஞ்சரி யிட்டவ னாடுக செங்கீரை

மோதக முண்டபி ரானொடு வந்தவ னாடுக செங்கீரை
முண்டக னைப்பெரு வன்சிறை வைத்தவ னாடுக செங்கீரை
யாதியொ டந்தமி லாதசெ ழுஞ்சுட ராடுக செங்கீரை
யங்கசன் மைத்துன துங்கம லைக்குக னாடுக செங்கீரை. 17

நாரண னுந்திரு மாதும கிழ்ந்திட வாடுக செங்கீரை
நஞ்சுமி டற்றினர் கெஞ்சும றைப்பொரு ளாடுக செங்கீரை
வாரண மொன்றட ரானன பஞ்சக னாடுக செங்கீரை
மந்தர வெற்பினு யர்ந்த திரட்புய னாடுக செங்கீரை

பூரண சந்த்ரசு பானன ரஞ்சித னாடுக செங்கீரை
பொங்குதி ரைக்கட லுண்டவன் மெய்க்குரு வாடுக செங்கீரை
யாரண முந்திசை மாமுக னுந்தொழ வாடுக செங்கீரை
யங்கசன் மைத்துன துங்கம லைக்குக னாடுக செங்கீரை. 18

கூர்கொண்ட வேலையுங் கைப்படுத் திப்பகழி
கோடியொரு தூணி யாக்கிக்
குரைகடலை முனிவாய்ம டுத்துமா னிரிதரக்
குவளையை வனம்பு குத்தி
வேர்கொண்ட கமலத்தை முட்டாளெ னத்துறி
மீனையிமை யாதி ருத்தி

வெங்கட்கொ டுங்கூற்றை யந்தகனெ னத்தள்ளி
வெவ்விடம் பயிலிட் டுமைக்
கார்கொண்டு விளரியிரு கடைசிவந் தையரி
கலந்துமை யெழுதி வள்ளைக்
காதளவு செல்லுங் கருங்கட் குறத்தியிரு
கனதனமு மொய்ம்பு தோயச்
சீர்கொண்டு முன்னின்ற மதவார ணத்திளவல்
செங்கீரை யாடி யருளே
திங்கட்கு வட்டிலெழு துங்கக்கி ரிக்கிறைவ
செங்கீரை யாடி யருளே. 19

வண்டிசை பெற்ற கடம்பம லர்ப்புய செங்கோ செங்கீரை
மன்நன் மிகப்பொலி குன்றை நகர்க்கிறை செங்கோ செங்கீரை
யெண்டிசை மெச்சுசி கண்டி மலைத்துரை செங்கோ செங்கீரை
யெங்கள் குறப்பெண் மணம்புணர் வித்தக செங்கோ செங்கீரை

யண்டினர் துக்க மடங்க வொழித்தவ செங்கோ செங்கீரை
யந்தரி பெற்றருள் சுந்தர விக்ரக செங்கோ செங்கீரை
தெண்டிரை வற்ற வெறிந்தவ யிற்கர செங்கோ செங்கீரை
சிங்கம டர்த்தவ துங்கம லைக்குக செங்கோ செங்கீரை. 20

ஐந்து முகத்தினர் தந்தசு புத்திர செங்கோ செங்கீரை
யன்றிலெ னத்தகை குன்று துளைத்தவ செங்கோ செங்கீரை
யிந்து முகத்தில குந்தில தத்தொரு செங்கோ செங்கீரை
யெங்கும துப்பொலி கின்றந திக்கிறை செங்கோ செங்கீரை

முந்துத மிழ்க்கவி ஞான்சிறை விட்டவ செங்கோ செங்கீரை
மொய்ம்பரு ணைப்புல வன்கவி யிட்டவ செங்கோ செங்கீரை,
சிந்துரவெற்பைய டர்ந்ததி ரட்புய செங்கோ செங்கீரை
சிங்கம டர்த்தவ துங்கம லைக்குக செங்கோ செங்கீரை. 21



## 3. தாலப்பருவம்

உலவை தழையக் குதித்துவரு
முருமே றென்னக் குமுறியெழுந்
தோடிப் பாய்ந்து சினைகிளைக
ளுதிரத் தாவி யுறுமிநெடும்
பலவின் குடக்காய் பறித்தொடித்துப்
பசுந்தே னருந்திக் குறுஞ்சுளைகள்
பகட்டிக் குழவிக் கருத்திமுலைப்
பாலுங் கொடுத்துக் குறங்கினில்வைத்
திலகுங் கரத்தாற் றலைவகிர்ந்தங்
கெடுத்து மார்போ டணைத்துமர
மேறி முழங்கும் முகில்பார்த்தங்
கிறங்கிக் கலங்குங் கவியினங்கள்
குலவு நேம வளநாட்டுக்
கோவே தாலோ தாலேலோ
குன்றாக் குடியில் வீற்றிருக்குங்
குமரா தாலோ தாலேலோ. 22

பயிலுங் கிளியின் பார்ப்பினங்கள்
பச்சென் றிளகி யிறுமாந்து
படர்நெட் டிலையின் குருத்தெழுந்த
பசுங்காய்க் கதலிக் கனிகோதித்
துயிலும் பொழிலி னிடையகலாச்
சுரும்புங் கரும்பு தனைவளைக்கச்
சூதத் தரும்புந் தளவரும்புஞ்
சேர்கந் தரும சோகமுடன்
வெயிலி னிளங்காற் கதிரெறிக்கும்
வேரிக் கமல முகையுமுகை
விள்ளுங் குமுதப் போதுமுறை
விளங்குந் தூணி புகக்கூவும்
குயில்சேர் நேம வளநாட்டுக்
கோவே தாலோ தாலேலோ
குன்றாக் குடியில் வீற்றிருக்குங்
குமரா தாலோ தாலேலோ. 23

கதிக்கத் தளிர்கள் பளபளெனக்
ககன முகட்டில் விளங்கநெடுங்

கப்பு வளரத் திசைமுழுதுங்
கவர்ந்து பரப்பி நேர்பருவந்
துதிக்கு மேலாய் மலர்சொரியச்
சுரும்பு விரும்பச் சுரந்துதலை
தூங்கு குலைக்கா யிலக்காகத்
துருவ னுலகிற்றோன்றமுளைத்
துதிக்குந் தனிமா மரமெனவே
யோங்கு மசுர னுடன்மடிய
வொருவேல் பிளக்க விருபிளவி
னொருபா தியினின் றுலகதிரக்
குதிக்குந் தோகைப் பிடரேறுங்
கோவே தாலோ தாலேலோ
குன்றாக்குடியில் வீற்றிருக்குங்
குமரா தாலோ தாலேலோ. 24

கோவுங் குதித்துக் கரைபுரண்டு
குமிழி யெழும்பி யலைசிதறக்
குடக்குங் குணக்குந் தெரியாது
குளிர்மா மதியுங் கோகனகத்
தேவு நடுங்கித் திசைமாறத்
திசைக்குஞ் சரமுஞ் செவிடுபடச்
செவியே கண்ணா மரசரெனச்
சிறக்கு மரவும் விழிபுதைப்ப
மேவ புறத்தண் டமும்வெடிப்ப
விபுதர்க் கரசுந் திசைமுகனும்
வெருள வடவைக் கனலடங்க
வெவ்வாய் திறந்து சிறகடித்துக்
கூவுஞ் சேவற் கொடியுடைய
கோவே தாலோ தாலேலோ
குன்றாக் குடியில் வீற்றிருக்குங்
குமரா தாலோ தாலேலோ. 25

த்ளிரு மொளிர்மின் கொடியநிறத்
தங்கத் தகடுந் துகிருமொன்றாச்
சமைத்த குறப்பெண் முகத்துறைசஞ்
சரிக மிரண்டுஞ் சஞ்சரிக்க
வொளிருங் ககனத் தரசுகந்த
வும்பர்க் கரச னுவந்தளித்த



வொருபெண் ணரசி னிருவிழிவண்
டொருபா னெருங்க வருமரம
களிரு முகத்தா மரையிலுறை
கருந்தே னிடச்செந் தேனருளிக்
கருணை குடிகொண் டருணகிரி
கவிமா லிகையுங் கலந்திருக்குங்
குளிருங் கடப்பந் தார்புனைந்த
கோவே தாலோ தாலேலோ
குன்றாக்-குடியில் வீற்றிருக்குங்
குமரா தாலோ தாலேலோ. 26

**வேறு**

செந்தா மரைமுக வேர்வோ டிலகத்
திலகம சைந்தாடத்
தெண்டிரை யொலிமலி தண்டை புலம்பு
சிலம்புக லந்தாடப்
பைந்தார் குழையொடு சுட்டியு டன்புனை
பட்டம சைந்தாடப்
பணிலத் தொடையடர் பவளத் தொடையொடு
பண்டிப சைந்தாடக்
கந்தா குமர குழந்தா யெனவறு
கார்த்திகை கொண்டாடக்
கங்கண மிட்டொளிர் வங்கண மிட்டொலி
கடகக் கையாடச்
சந்தா டவிதிகழ் குன்றைக் கதிபதி
தாலோ தாலேலோ
தங்கம லைக்குயர் துங்கம லைக்குக
தாலோ தாலேலோ 27

அங்கந் துளுவஞ் சீன மராட
விராடங் கல்யாணம்
ஆக ரைடில்லி கொழும்பு கலிங்க
மராளங் கேரளமா
வங்கங் கோசலை காசி கிராதக
மச்சமொ டச்சீன

மகதங் குகுத விதர்ப்பங் கருநட
மத்ரங் குருதேசங்
கொங்கங் கவுடம் பப்பர நிடதங்
குச்சர மச்சிநெடுங்
குடகந் திரவிடம் வடபாஞ் சாலங்
குளுவங் காந்தார
சங்கம் புகழுங் குன்றைக் கதிபதி
தாலோ தாலேலோ
தங்கம லைக்குயர் துங்கம லைக்குக
தாலோ தாலேலோ 28

திரள்சங் கெறிநிதி கங்கா நதிபுனல்
சிந்துஞ் சிந்துநதி
சீகர மாநதி நூபுர மாநதி
திருமணி முத்துநதி
விரளம் புனல்செறி யமுநா நதிகா
விரிநதி யொடுகோதா
விரிநதி நருமதை நதிசர சுதிநதி
விரசா நதிகரையிற்
புரளம் பழகிய கிஷ்ணா நதிதாம்
புரநதி சித்ரநதி
புயங்க மகாநதி வைகா நதியொடு
புவிநதி யும்புகழத்
தரளஞ் சிதறும் மதுநதி யுடையாய்
தாலோ தாலேலோ
தங்கம லைக்குயர் துங்கம லைக்குக
தாலோ தாலேலோ. 29

பொன்செறி கமலப் போதுறை வாவிப்
புனலூ டெழுமரசிற்
பொன்னிலை பாதிவி ழப்பகு வாயுறு
பூங்கய லாகநெடும்
வன்சிறை யுளபுள் ளினமா கக்கரை
வாயுறு பாதியுமே
வாலெயி றிலகு நிசாசர னைப்பொரு
மால்வடி வேபோல



மின்செறி யுலகத் ததிசய மிதுவென
விழியிமை யாதுமன
மெய்ப்புறு நற்கீ ரனையோ ரலகை
விரைந்து கவர்ந்திடுநா
டன்சிறை தீரத் தனிவேல் விடுகுக
தாலோ தாலேலோ
தங்கம லைக்குயர் துங்கம லைக்குக
தாலோ தாலேலோ. 30

வெங்கட் சுறவெறி மதுநதி யூடே
வெய்யோ னெழுபரிமேல்
வீசிய கசையென நெட்டிலை யோங்கி
விளங்கு கரும்பூடே
புங்கஞ் செறிகுண சாலியி தென்றெழு
புவியும் புகழ்தரலாற்
பூரித் திலகித் தலைகீ ழாய்விழு
பொலிவுறு கதிரூடே
வங்கஞ் செறியுஞ் சரவண வாவியின்
மாமறை யோர்மனைமேன்
மாட முகப்பிற் கோபுர மேனிலை
மணிமுதல் மறுகூடே
சங்கந் தவழுங் குன்றைக் கதிபதி
தாலோ தாலேலோ
தங்கம லைக்குயர் துங்கம லைக்குக
தாலோ தாலேலோ. 31

## 4. சப்பாணிப்பருவம்

நீராட்டி யாட்டுமண் ணீர்கொடு சுழற்றியெழு
நீணிலக் காப்புமிட்டு
நிலவொழுகு பட்டாடை கொண்டுட றுடைத்துவெண்
ணித்திலச் சுட்டிகட்டிச்
சீராட்டி மடியில்வைத் தீராறு கையுஞ்
செலுத்திக் குறங்குதட்டித்
தெள்ளமு தெடுத்துவெண் சங்கிடை குலுக்கிநற்
செவ்வா யுறப்புகட்டிப்

பாராட்டி யிருகவு ணெரித்துச் செறித்துவெம்
பணைமுலைப் பாலருத்திப்
பவளவாய் வைத்துண்ண வாய்க்கடங் காதபால்
பாற்கட லெனப்பெருக்கித்
தாராட்டி யிருமூவர் முத்தாடு முத்தைய
சப்பாணி கொட்டியருளே
தங்கமலை நிகரான துங்கமலை யாதிபதி
சப்பாணி கொட்டியருளே. 32

சீரிட்ட சூழியக் கொண்டையுந் தமனியத்
திடுபறையும் வெயிலுமாறாத்
திலகநுத லிலகவரு சுட்டியும் பட்டமுந்
திங்கண்மறு வனையபொட்டு
நேரிட்ட மகரகுண் டலமுமிடு கண்டசர
நித்திலக் கொத்துமணிவாய்
நினறொழுகு மழலைவா யமுதப் பெருக்குமணி
நீலவளை யுங்காப்புமேல்
வீரிட் டலம்புஞ் சிலம்புநிறை கிண்கிணியு
மேவுமரை வடமுமார்பின்
மேலிட்டு மாறாடு கொத்துச் சரப்பணியு
மேனியும் புழுதிதோயத்
தாரிட்ட வீரரொடு விளையாடு மதகளிறு
சப்பாணி கொட்டியருளே
தங்கமலை நிகரான துங்கமலை யாதிபதி
சப்பாணி கொட்டியருளே. 33

மதிகொண்ட வான்முக டளாவிவஞ் சனைகொண்ட
மாமரம டர்த்தகையால்
வாரணர்க் குமரிதா ளம்மிசை வைக்கவே
மலரடி யெடுத்தகையால்
துதிகொண்ட வள்ளிமண மாலையிட் டுப்பிறகு
தோண்மாலை யிட்டகையால்
சூழுலகு செவிடிடக் கூவுசே வற்கொடி
துலங்கி மணிக்கரத்தாற்
றிதிகொண்ட குறுமுனிக் குபதேச நாட்செய்த
சின்முத் திரைக்கரத்தால்
செந்தமி ழுகந்தநற் கீரனை யகோரமாஞ்
சிறைவிடுத் திடுகரத்தால்



குதிகொண்டு வருமயிற் பரிநடத்தி டுகையால்
கொட்டியருள் சப்பாணியே
கொண்டலம் புகழ்பருகு குன்றையம் பதிமுருக
கொட்டியருள் சப்பாணியே. 34

**வேறு**

மானா ரெனுமறு மீனார் தருபுலி
கொட்டுக சப்பாணி
மழலைக் கிளிபுகல் பழனிக் கதிபதி
கொட்டுக சப்பாணி
சேனா பதியென வானோர் பணிபத
கொட்டுக சப்பாணி
செந்தூர் வருகுக விந்தூ ரறுமுக
கொட்டுக சப்பாணி
நீநா னெனவெதி ரானோர் பொருபவ
கொட்டுக சப்பாணி
நேமத் தொடுகதிர் காமத் துதிமதி
கொட்டுக சப்பாணி
கோனா ரொடுவளர் தேனா டுடையவ
கொட்டுக சப்பாணி
குன்றைப் பதிவள ரண்டர்க் கதிபதி
கொட்டுக சப்பாணி. 35

**வேறு**

கரமொன்று பொன்வளை கலீரென்ன மாறாது
கங்கணத் தொனிபுலம்பக்
காந்தளம் போதெனக் கரதலஞ் சேப்பநற்
கணையாழி விரலழுந்தச்
சிரமுஞ்ச டாடவியு மசையவெண் ணிலவோடு
தெண்ணிலவு மூரல்காட்டிச்
சிவனுஞ்ச பாசென்ன வுமையவள் சரோருகச்
சித்தங் களிக்கவேதன்
னுரமுந்தி டுக்கென்ன வாணிநெஞ் சஞ்சவா
னும்பர்கோ னூழிகாலத்
துருமேறி தாமென்ன விண்ணவர் நடுங்கவே
யொருதரத் தீரண்டு
தரமுங்க ணீரிடக் குட்டுமொரு செங்கையாற்
சப்பாணி கொட்டியருளே

தங்கமலை நிகரான துங்கமலை யாதிபதி
சப்பாணி கொட்டியருளே. 36

மீன்கொண் டிரங்குந் தரங்கஞ் செறிந்தமணி
வேலையினில் வேலையிட்ட
மெல்விரற் கையாற் க்ரவுஞ்சகிரி தூளிபட
வேலெறிந் திடுகரத்தால்
வான்கொண்ட தேவர்மா ரகனான தாரகனை
மறலிக் களித்தகையால்
வாரணத் தொகுதிகட வாரணத் தூற்றுமத
வாரணம் பொருகரத்தா
லான்கொண்ட தேவுக்கு மீன்கொண்ட தேவுக்கு
மபயங் கொடுத்தகையால்
ஐயான னத்தெவ்வை யாறான னங்கொண்
டடர்த்திடு மணிக்கரத்தால்
கூன்கொண்ட பிறையெயிற் றசுரனைத் தெறுகையால்
கொட்டியருள் சப்பாணியே
கொண்டலம் புகழ்பருகு குன்றையம் பதிமுருக
கொட்டியருள் சப்பாணியே. 37

**வேறு**

ஏல மலர்க்குழல் வான்மதி பெற்றவ
கொட்டுக சப்பாணி
யேரக மேவிய தாரக மாரக
கொட்டுக சப்பாணி
சோலை மலைப்பதி மேவிய வித்தக
கொட்டுக சப்பாணி
சுந்தர வள்ளி மணந்தரு ணாயக
கொட்டுக சப்பாணி
ஞால மளித்தவன் மேல்விரு திட்டவ
கொட்டுக சப்பாணி
நந்தமு லாவு பரங்கிரி வாழ்குக
கொட்டுக சப்பாணி
கோல மயிற்பரி மேல்வரு விக்ரக
கொட்டுக சப்பாணி
குன்றைப் பதிவள ரண்டர்க் கதிபதி
கொட்டுக சப்பாணி. 38



சிங்க மடர்ந்திடு துங்கம லைக்கிறை
கொட்டுக சப்பாணி
தேனா றுடையவ வரனா ரருள்பவ
கொட்டுக சப்பாணி
சங்கரி பெற்றருள் மங்கள விக்ரக
கொட்டுக சப்பாணி
தாமப் புயமலி நேமத் ததிபதி
கொட்டுக சப்பாணி
புங்கவ ராகிய சங்கர பாலக
கொட்டுக சப்பாணி
பொன்னா டெனவளர் நன்னா டுடையவ
கொட்டுக சப்பாணி
குங்கும வெற்பணி தங்கு திரட்புய
கொட்டுக சப்பாணி
குன்றைப் பதிவள ரண்டர்க் கதிபதி
கொட்டுக சப்பாணி. 39

இருமயில் மோகன வொருமயில் வாகன
கொட்டுக சப்பாணி
யெண்ணிய வேளையி னண்ணிய வாரண
கொட்டுக சப்பாணி
யரிமரு மகனென வருசர வணபவ
கொட்டுக சப்பாணி
யக்கர மாறுள குக்கிட கேதன
கொட்டுக சப்பாணி
முரசொலி தரவரு மமருல குடையவ
கொர்ட்டுக சப்பாணி
முருகு கடம்பலர் பெருகு தடம்புய
கொட்டுக சப்பாணி
குருபர னெனவுல கிணையடி பணிமுதல்
கொட்டுக சப்பாணி
குன்றைப் பதிவள ரண்டர்க் கதிபதி
கொட்டுக சப்பாணி. 40

**வேறு**

திங்கண்முக மடவார்க ளாரிரு செவிக்குமே
தேன்மழை சொரிந்ததென்னச்

செங்கண்மா லின்னமுஞ் செவிவேண்ட நான்முகத்
தேவுமென் செவிபுதைப்பச்
கங்கையணி வார்செவிகள் பத்துக்கு மேதேவ
கானவொலி கானவொலியாய்க்
கைக்கவா ரணமுகத் தரசுதழை செவிமதங்
கரைபுரண் டோட வெங்கட்
பொங்கரா வின்கண பணாடவிக் கட்செவி
புதைப்பவிமை யோருமகிழப்
போராட வருநிருதர் செவியெலாஞ் செவிடிடப்
புருகூத னஞ்சலிக்கச்
சங்கரி திருச்செவிக் கமுதமென வொலிதரச்
சப்பாணி கொட்டியருளே
தங்கமலை நிகரான துங்கமலை யாதிபதி
சப்பாணி கொட்டியருளே. 41

## 5. முத்தப்பருவம்

மந்தரஞ் சுழலாது வாசுகி யுடம்பெலா
மற்றுந் தழும்புறாது
வானவர்கள் கரதலங் குருதிசே ராதவுணர்
வன்கையுஞ் சேப்புறாது
சுந்தர மிகுந்திடு முகுந்தனர விந்தநிகர்
துணைவிழி பிதுங்கிடாது
சொரிதரள மெறிதிரை சுருட்டுபாற் கடலகடு
சுற்றுங் கலங்கிடாது
கந்தரத் தினிலெங்கள் கண்ணுதலை யின்னமுங்
காலவிஷ மேதொடாது
கையொன்றி லேயொன்று வளைதொட்ட வர்க்குவளை
கையிரண் டுந்தொடாது
செந்துவர்க் கனிவாயி னமுதம் பெருக்குநின்
றிருவாயின் முத்தமருளே
செங்கண்மான் மருகனே குன்றைவாழ் முருகனே
திருவாயின் முத்தமருளே. 42

சரணமென வந்தவர்க் காதார மானவிரு
சரணமுங் கூப்பிவேழச்
சருமமு முடுத்திவெம் புலியத ளுடுத்திமுன்
றானையு மொடுக்கிநாகா



பரணமுந் தாழா தெடுத்துச் சுருட்டியிரு
பங்கயக் கைகள்கட்டிப்
பரிவர்த்த னைக்கால மாமென்ன மான்மழுப்
பக்கத் திலங்கமூன்றாங்
கிரணவெண் பிறையுங் கடுக்கையு முழங்குபா
கீரதியும் வீழ்வதென்னக்
கிளர்தலை குனிந்தைந்து வாயும் புதைத்தமா
கேசன் றிருச்செவிக்குட்
டிரணமென வமுதெழும் ப்ரணவத்தி னுரைசொன்ன
திருவாயின் முத்தமருளே
செங்கண்மான் மருகனே குன்றைவாழ் முருகனே
திருவாயின் முத்தமருளே. 43

விண்டலத் துயர்விந்த கிரிதனை யடக்கியகை
விரலெல்லாந் தரையில்வைத்து
மேதினி வணங்கவே பொதியமா மலைதனின்
மிதித்தகால் விரலையூன்றி
மண்டலம் புனையாடை யென்னவளை கடலுண்ட
மணிவாயு மௌனமாக
மறையவர்க ளுயிர்கொண்ட வாதாவி யுயிருண்ட
வயிறெலாம் புழுதிதோயக்
குண்டலங் கீழ்விழச் செவிதாழ விருகரங்
கூப்பித் தரம்புரட்டிக்
குவடனைய விருபுயமு மார்புமலர் விழியுமே
குவலயத் தூடழுந்தத்
தெண்டனிடு குறுமுனிக் குபதேச மதுசொன்ன
திருவாயின் முத்தமருளே
செங்கண்மான் மருகனே குன்றைவாழ் முருகனே
திருவாயின் முத்தமருளே. 44

வானுண்டு கடலுண்டு திடருண்டு கரியுண்டு
மலையுண்டு திசையுண்டுமா
மண்டலமு மண்டபகி ரண்டநவ கண்டமும்
வாளரவு முண்டுமற்றுந்
தானுண்ட டங்காத கள்ளப் பசிக்கிபந்
தன்பசிக் கிட்டசோளந்
தானென்ன மானென்ன மீனென்ன மலர்விழித்
தையலித முண்ணவேண்டிக்

கானுண்டு மலையுண்டு மலையுண்டு மரிதென்று
கருதாது காமவலையிற்
கட்டுண்டு கிழவுருக் கொண்டுவயி றெக்கிமுன்
காட்டியவ் வள்ளியிட்ட
தேனுண்ட தினைமாவை யுண்டுதேக் கிட்டநின்
றிருவாயின் முத்தமருளே
செங்கண்மான் மருகனே குன்றைவாழ் முருகனே
திருவாயின் முத்தமருளே. 45

மன்னுதன் புனன்மூழ்க வருவோர்க டீங்கெலா
மாருதத் தூதர்விட்டே
வழிப்பறி பறித்துத் தரங்கக் கரங்களான்
மங்கல மெடுத்தெறிந்து
சந்நிதா னத்தில்வரு வோர்ஜன்ம நோய்க்கெலாந்
தண்டுளி மருந்தளித்துச்
சாலோக முந்தந்து சாமீப முந்தந்து
தண்புனல் படிந்தபேர்க்குப்
பன்னிரு கரங்களும் பன்னிரு புயங்களும்
பன்னிரு மலர்க்கண்களும்
பனிருவர் போன்மகர குண்டல மிலங்குகுழை
பனிரண்டு மூவிரண்டு
சென்னியுந் தருசரவ ணப்பொய்கை யாதிபா
திருவாயின் முத்தமருளே
செங்கண்மான் மருகனே குன்றைவாழ் முருகனே
திருவாயின் முத்தமருளே. 46

அவ்வென்று படருங் கதிர்க்கற்றை தோயவிண்
ணார்ந்துசூற் கொண்டகொண்மூ
வளித்தவெண் முத்துந் துளித்திவலை வேண்டியங்
காந்தநத் தீன்றமுத்துந்
தெவ்வென்று சிங்கத் திளங்கன் றெழும்பிச்
சினத்துத் தகர்த்தொடித்த
சிந்துரக் கோட்டிற் றெறித்தவெண் முத்தமுஞ்
செங்கரும் பீன்றமுத்துஞ்
சவ்வென்று துளையுண்டு விலையுண்டு கடையுண்டு
தட்டுண்டு திரியுமல்லால்
தண்டுளி பெருக்குநின் மழலைவாய் முத்தெனத்
தருமின்ப மருளவருமோ



செவ்வென்று மதுரித்து நறுமணம் பூரித்த
திருவாயின் முத்தமருளே
செங்கண்மான் மருகனே குன்றைவாழ் முருகனே
திருவாயின் முத்தமருளே. 47

முளைத்துக் கிளைத்திலைகள் பச்சப்ப சேரென்று
மூதண்ட முகடுமுட்ட
மூவுலக ளக்கவரு நெடியமா லெனவளரு
மூங்கிற்கு ழாத்தினின்பம்
விளைத்துப் பிறந்தவெண் முத்தமுஞ் சரசமும்
விரும்பிலோர் வெடிவுமாற
வேரிப்ப சும்பொற்செ ழுங்கமல நெட்டிதழ்
விரிந்தவெண் முத்துமேங்கிக்
களைத்துத்தி கைப்பநேர்ந் தஞ்செய்தொளி கான்றிடு
கையேற வகடுகிழியக்
கடன்முகட் டினிலெழுந் துலகமொரு மூன்றினு
கதிர்வீசு நன்முத்தமுந்
துளைத்துவிலை கட்டமிளிர் கட்டாணி முத்தமே
சுடர்வாயின் முத்தமருளே
சோதிமலை நிகரான தோகைமலை யாதிபா
சுடர்வாயின் முத்தமருளே. 48

## வேறு

அருகி ருக்கும் பரிந டத்தும்
அரசன் முத்தந் தருகவே
அரைவ டக்கிண் கிணியொ லிக்கும்
அழகன் முத்தந் தருகவே
ஒருகி ரிக்கங் கயில்வி டுக்கும்
உசிதன் முத்தந் தருகவே
உபய பத்மந் தருமெ னக்கும்
ஒருவன் முத்தந் தருகவே
தருக டப்பந் தொடைத ரிக்குஞ்
சரசன் முத்தந் தருகவே
தமிழு மைக்குஞ் சரந திக்குந்
தனையன் முத்தந் தருகவே
குருகி ரிக்குங் குறம யிற்குங்
குரிசின் முத்தந் தருகவே

குறைவ றக்குன் றையிலி ருக்குங்
குமரன் முத்தந் தருகவே. 49

**வேறு**

தாயென் றெடுத்துத் தடம்புயஞ் சேர்க்கவொரு
தவமதனை வன்னியுடைய
சன்னிதா னஞ்செய்து வேள்வியா குதியவன்
றன்பேரி லேகவர்ந்து
போயென்று மிருவென்று முனிவரிரு மூவரும்
புணருமட வாரையகலப்
பொற்கொடிக ளிருமூவ ரெமதுவடி வாயன்பு
பூண்டனம் வன்னியதனால்
ஆயென்று யாமுன்னை நம்பிவந்தோ மென்ன
வபயங்கொ டுத்துவானில்
ஆகண்ட லன்மகிழ வறுமீனெ னப்பதித்
தவர்முலைப் பாலுமுண்டு
சேயென்று மணிமார்பில் விளையாடு மொருபிள்ளை
திருவாயின் முத்தமருளே
செங்கண்மான் மருகனே குன்றைவாழ் முருகனே
திருவாயின் முத்தமருளே. 50

**வேறு**

சுடர்மு கக்குஞ் சரமு கத்தன்
றுணைவன் முத்தந் தருகவே
சுரர்ப திக்கன் றரச ளிக்குஞ்
சுகுணன் முத்தந் தருகவே
வடத ருக்கொம் புறைய ரிக்கும்
மருகன் முத்தந் தருகவே
வடகி ரிக்குன் றினிலி ருக்கும்
மதலை முத்தந் தருகவே
கடல டக்குங் கெடிசெ லுத்துங்
கடகன் முத்தந் தருகவே
கரத லக்கங் கணமொ லிக்குங்
கடகன் முத்தந் தருகவே
கொடியி ருக்குங் குறம யிற்குங்
குரிசின் முத்தந் தருகவே



குறைவ றக்குன் றையிலி ருக்குங்
குமரன் முத்தந் தருகவே. 51

## 6. வருகைப்பருவம்

ஞாலம் படியும் விரற் காழி
நல்க வருக மதகயம்போல்
நடந்து வருக வொருமாற்றம்
நவில வருக விளங்குதண்டைக்
காலன் வருக வெனதிருகண்
களிக்க வருக விழிக்குமலர்க்
கண்ணே வருக மணியரைஞாண்
கட்ட வருக வுமையவடன்
பாலன் வருக நடந்தநடை
பார்க்க வருக நுதற்றிலதம்
பதிக்க வருக மழலைமொழி
பகர வருக வெவர்க்குமனு
கூலன் வருக தேனாற்றுக்
குரிசில் வருக வருகவே
குன்றாக் குடியில் வீற்றிருக்குங்
குமரா வருக வருகவே. 52

தேனே வருக வமரர்தொழுந்
தேவே வருக முத்துவடஞ்
சேர்க்க வருக விழிகளின்மை
திருத்த வருக வரிக்குமரு
மானே வருக மயிலேறும்
வள்ளல் வருக வள்ளிமண
வாளன் வருக வானவர்கோன்
மருகன் வருக நடந்தோடித்
தானே வருக வேலெறிந்த
சமர்த்தன் வருக சூடாநடத்துஞ்
சதுரன் வருக வசுரர்பகை
தாண்ட வருக சிகண்டிமலைக்
கோனே வருக தேனாற்றுக்
குரிசில் வருக வருகவே
குன்றாக் குடியில் வீற்றிருக்குங்
குமரா வருக வருகவே. 53

பூவே வருக பூவினறைப்
பொலிவே வருகப் பொலிந்தமலர்ப்
புயவேள் வருக புயலொதுங்கும்
பொழிலே வருக பொழிலினிளங்·
காவே வருக காவினறுங்
கனியே வருகக் கனிந்தரசக்
கரும்பே வருக கரும்புருவக்
கண்ணே வருக கண்ணனுக்குந்
தேவே வருகத் தேவர்சிறை
தீர்த்தோன் வருக தீர்த்துகந்த
செவ்வேள் வருக செவ்விதழ்சேர்
சேயே வருக சிகண்டிமலைக்
கோவே வருக தேனாற்றுக்
குரிசில் வருக வருகவே
குன்றாக் குடியில் வீற்றிருக்குங்
குமரா வருக வருகவே. 54

மாமா னுதவு மொருமயிலை
மணஞ்சேர் மாலை யிடவருக
வானோர் சிறையின் மயங்காமன்
மதவா ரணத்தைப் போல்வருக
காமா நலஞ்சே ரிபமடந்தை
கரபங் கயத்தைத் தொடவருக
கவிக்கே யிரங்கி நற்கீரர்
கடிய சிறையை விடவருக
நாமான் கொழுந னறியாத
நலஞ்சேர் பொருளைத் தரவருக
நாட்டுக் குயர்ந்த வளர்நேம
நாடன் வருக சிகண்டிமலைக்
கோமான் வருக தேனாற்றுக்
குரிசில் வருக வருகவே
குன்றாக் குடியில் வீற்றிருக்குங்
குமரா வருக வருகவே. 55

வண்டல் படியுஞ் சுரநதிதன்
மதலை வருக மதம்பெருக்கு
மதவா ரணத்தி னிளவலென
வாய்த்த மயிற்சே வகன்வருக



அண்டர் பணிக்குக் குடமுயர்த்த
வதுலன் வருக வெனையாளும்
ஐயன் வருக மெய்யிலகும்
அண்ணல் வருக விண்ணுயர்கோ
தண்டன் வருக கடப்பமலர்த்
தாமன் வருக வறுகோணச்
சக்ரன் வருக வாறெழுத்துத்
தலைவன் வருக சிகண்டிமலைக்
கொண்டல் வருக தேனாற்றுக்
குரிசில் வருக வருகவே
குன்றாக் குடியில் வீற்றிருக்குங்
குமரா வருக வருகவே. 56

வேறு

மேனாள் வரும்பகைக் காற்றாத நெஞ்சமொடு
மிக்ககவு சிகனும் வெருள
விரிமலர்க் கோகநக மேவுநான் முகன்மகன்
விரும்பியே யருள்செய் குவான்
கூனாரி ளம்பிறை யெயிற்றரக் கனையாவி
கொல்லவர வடுப ழிக்குக்
குருகுலத் தவர்சரிதை குறுமுனி மகிழ்ந்துடன்
கூறிடக் கோப முனிவன்
வானாடு மகிழவே நிருதமா ரணவேள்வி
மற்றும் மியற்ற வங்கோர்
மறைமுனி தவிர்த்துவளர் கவுசிகன் மேல்விடவ
மறையவன் சரண மெனவே
தேனான மதுரமொழி சொல்லியஞ் சேலென்ற
தேவ நாயகன் வருகவே
திமிரதின கரன்வருக வமரர்தள பதிவருக
குமரகுரு பரன் வருகவே. 57

நிருதரிரி தரவருக வமரர்சிறை விடவருக
நிமலன்மன மகிழவருக
நிகிலமறை தொழவருக மறையவன்வெ நிடவருக
நினதுநடை பயிலவருக
வொருவன் முது கினில்வருக வரிசைமயின் மிசைவருக
வுமையவடன் மதலைவருக

வுலகமகிழ் தரவருக வரதன்மரு மகன்வருக
வுபநிடத முதல்வன்வருக
விருவிழிமை யிடவருக வரிவளைக டொடவருக
வினியமொழி பகரவருக
இலகுமறு முகன்வருக நுதல்வெயர்வு தரவருக
இபவதந னிளவல்வருக
குருகிரியி லரசுரிபுரி மதுநதிம னவன்வருக
குலதிலக முருகன்வருக
குடகர்கரு நடர்பரவு விகடமயின் மலைமருவு
குமரகுரு பரன்வருகவே. 58

அண்டர்மனை வியரணியு மங்கிலியம் வளரவளர்
ஐந்துமுகன் மதலை வருக
வன்றசுரர் பொருமணியி லிந்திரனு மபயமென
வஞ்சலெனு முருகன் வருக
மண்டலமு மெழுகடலு நின்றவட வரையுமொலி
மண்டுமெயின் முதல்வன் வருக
மங்கையர்க டொழுமமர குஞ்சரிமி னிடுகளப
மஞ்சரிகொள் கணவன் வருக
தண்டமிழி னிசைபழகு சங்கமதி லொருவனிசை
தந்ததமிழ் புனைய வருக
சந்தமிகு மருணகிரி செந்தமிழி னுடனிலகு
தங்கவட மணிய வருக
கொண்டல்படி தருநெடிய தென்றலொடு பொழிலிலகு
குன்றைநக ரதிபன் வருக
குடகர்கரு நடர்பரவு விகடமயின் மலைமருவு
குமரகுரு பரன் வருகவே. 59

தஞ்சமென மருவுகுற வஞ்சியிணை முலைமுனைக
டங்குபுய முருகன் வருக
தண்டையுட னொலிகுமுறு கிண்கிணியு மொளிபெருகு
தண்டரள மணிய வருக
வஞ்சமிடு மசுரர்படை நெஞ்சுபறை யறையவடு
வன்கையயி லெறிய வருக
மங்கையர்கண் மயறணிய நின்றவர்கண் மிடிதணிய
வந்துக்ருபை சொரிய வருக
விஞ்சையர்கள் புடைபெருகு துங்கமலை தனிலுலவு
வெங்களப மதலை வருக



விம்பவித முழகுசொரி கின்றதுளி பெருகிநிறை
மிஞ்சுநதி பெருக வருக
கொஞ்சுகிளி யொடுபழகு தண்டலைகள் புடைபெருகு
குன்றைநக ரதிபன் வருக
குடகர்கரு நடர்பரவு விகடமயின் மலைமருவு
குமரகுரு பரன் வருகவே. 60

திங்கண்முடி மருவுகிர வுஞ்சகிரி தகரவொரு
செங்கையயி லெறிய வருக
திரைகடலு மரவணையி லரியுமன மறுகியலை
சிதறவயி லெறிய வருக
வெங்கணிசி சரர்குருதி கங்கமொடு நரிபருக
விந்தையயி லெறிய வருக
விகடமிடு மலகையுட லகடுகிழி படவொருவன்
வினவுமயி லெறிய வருக
துங்கமலை பணிபவர்க டங்கள்வினை தணியவொரு
கொந்தவயி லெறிய வருக
சுரர்பணியு மரியையமர் பொருதுமனன் மடியவிசை
தொடருமயி லெறிய வருக
கொங்குபயில் நறுமலர்க டென்றலுட னசையவரு
குன்றைநக ரதிபன் வருக
குடகர்கரு நடர்பரவு விகடமயின் மலைமருவு
குமரகுரு பரன் வருகவே. 61

## 7. அம்புலிப்பருவம்

எண்டிசை விளங்கவே யத்திரிலோ சனமீதி
லெழுதலான் முழுது மலைவா
யிருந்துற் பவித்தலாற் புகர்முகத் தழைசெவி
யிபத்துடன் றோன்றி வரலான்
மண்டலந் தனிலெவரும் வந்துதொழு மகிமையால்
வளருமறு முகமுள் ளதால்
வானவவர்க் கமுதங் கொடுக்குந் திறத்தினான்
மருவுகுவ லயமகிழ் தலால்
ஒண்டிறற் கார்த்திகைப் பெண்கண்மன மகிழவே
யுவகைதர லாலவ னிமே
லொய்யார வல்லித னிடத்தின்பு செய்தலா
லொளியினா லிரவொழி தலால்

அண்டர்நா யகனுடன் சரிசொல்ல லாமுனையு
மம்புலீ யாட வாவே
அகண்டவடி வாகிய சிகண்டிமலை யாதிபனொ
டம்புலீ யாட வாவே. 62

பமரமிடு கடலகடு மறுகக் கலக்கும்
பணைப்பொற் றிருக்க ரத்தாற்
பாரகிரி யுங்கண்ட போதுடல முருகிப்
பயப்படச் செய்யும் வடிவால்
சமரமிடு சிங்கமுங் கீழ்ப்படக் கடகந்
தரிக்குந் திருச்சி றப்பால்
சக்ரவா ளக்கிரியும் வடவரையு மொருகணந்
தனிலே வலஞ்செய் கையால்
நமரனுட னுமையவளு மிதயமகிழ் தருசிரோ
ரத்னமென வேவ ருதலால்
நாடொறுங் கலையா னிரம்பலால் வாரமெந்
நாளுமக லாத வெழிலா
லமரர்நா யகனுடன் சரிசொல்ல லாமுனையு
மம்புலீ யாட வாவே
அகண்டவடி வாகிய சிகண்டிமலை யாதிபனொ
டம்புலீ யாட வாவே. 63

ஓகையா லிருசிறை யடித்துநெட் டுடலமங்
குதறியே பதறி வானாட்
டும்பருஞ் செவிடிடப் பகுவாய் திறந்துநெட்
டொலிகொண்ட குக்கு டப்பூந்
தோகையா டிடவுனது திருவீதி நீவந்து
தோன்றுவெண் பாற்க டலுமே
தூழப்பு லிங்கக் கடுங்கனற் பொறிசிந்து
சுடர்வேலு மிழ்ந்த தெண்ணீ
ரீகையா லுயர்குன் றெடுத்தருள் பரஞ்சுட
ரிளஞ்சடை யிவன்க ரத்தா
லிழுக்கவித் துருமத் திளங்கொடியி தாமென்ன
விலகுமொரு வாகு புரிவா
யாகையா லிவனன்பு வேண்டிமுத் தையனுட
னம்புலீ யாட வாவே
அகண்டவடி வாகிய சிகண்டிமலை யாதிபனொ
டம்புலீ யாட வாவே. 64



கனககிரி ரசிதகிரி நிகரான வுதயகிரி
கடினகிரி திரண கிரியாம்
கபடகிரி யாகிய க்ரவுஞ்சகிரி நிர்த்தூளி
கண்டதே சாட்சி யன்றோ
தனகனக வஸ்துவா கனபூஷ ணப்ரபல
சௌபாக்கிய மேநி றைந்து
தருசுதா மண்டலமும் விண்டல விமானமுந்
தண்டா துயர்ந்து பாரிற்
பனகனுட னெளிமயி லெனவடிவு பெறுசூர
பத்மனுள மகிழ வந்த
பாரமா மேருவெனும் வீரமா கேந்த்ரபுரி
பட்டபா டறியா ததோ
அனவரத மிவனுறவு வேண்டிமுத் தையனுட
னம்புலீ யாட வாவே
அகண்டவ டிவாகிய சிகண்டிமலை யாதிபனொ
டம்புலீ யாட வாவே. 65

பாதலா லயனான அசுரேந்த்ரன் மகளுதவு
பாலகன் சாள ரத்திற்
பதித்துக் கதிக்கின்ற கண்ணாடி யெனவைத்த
பாரவன் சிறைவி டுத்தான்
ஈதலான் மூவொன்ப தானமனை வியரிலோ
ரேந்திழை வனம்பு குதவே
இதயங்க லங்குநின் சஞ்சலந் தீரவே
யிருமூன்று மனைவி தந்தான்
காதலால் வளர்சிகா மணியென்று வைத்துனைக்
கதிரொளியி னான்ம ழுங்கிக்
கலைகண்ட கலைதன்னை நிலைகண்ட கலையெனக்
கருணாக டாட்சம் வைத்தான்
ஆதலா லிவனுறவு வேண்டிமுத் தையனுட
னம்புலீ யாட வாவே
அகண்டவ டிவாகிய சிகண்டிமலை யாதிபனொ
டம்புலீ யாட வாவே. 66

தொல்லைப் பெருங்கிரிகள் சுற்றியலை யாமலே
துருவபத முமளிப்பான்
சுந்தரமி குந்தவுடலந் தனிலிருந் ருந்திருள்
சுரந்தம றுவுந்தொ டைப்பான்

செல்லைப் புகழ்ந்திடுசி கண்டிக்கு நின்பகைச்
செம்பாம்பு பழிகொ டுப்பான்
தினமுமுன துடலருந் தாதுதே வர்க்குநகை
செய்துகிள் ளாக்கை யருள்வான்
எல்லைப் பொரும்படிக் குனதுகிர ணங்களுக்
கினிதான சுடர ளிப்பான்
இருபட்ச மும்வளரு மொருபட்ச மேபோல
இன்பமொடு பட்சம் வைப்பான்
அல்லைப் பொருங்குழலி வல்லிக்கு வாய்த்தவனொ
டம்புலீ யாட வாவே
அகண்டவடி வாகிய சிகண்டிமலை யாதிபனொ
டம்புலீ யாட வாவே. 67

கஞ்சமல ராகுமுன் னெஞ்சம் பகீரெனக்
கதிர்வேன் முனைக்க ளிப்பான்
கடியசே வற்கொடிக் குன்னைநவ நீதவெண்
கவளமென வேகொ டுப்பான்
கொஞ்சும யிலுக்குனது நெஞ்சம் பிளந்துயிர்
குடிக்கக் கொடுப்ப னதனாற்
கோரநவ வீரர்க்கு வீரவெண் டயமெனக்
குரைகழற் றாளி லணிவான்
வஞ்சியர்க ளபரஞ்சி மலையில்வளர் குறவஞ்சி
மணவாளன் வரவ ழைத்தால்
வந்துவிளை யாடாமல் வாராதி ருந்தவுன்
மதியென்ன மதிம தியமே
அஞ்சலென வபயங் கொடுக்குமென் னையனுடன்
அம்புலீ யாட வாவே
அகண்டிவடி வாகிய சிகண்டிமலை யாதிபனொ
டம்புலீ யாட வாவே. 68

கையின்வடி வேலுக்கு னுடலத்தை யேவெள்ளி
கட்டவே தகட டிப்பான்
காதிற்கு முருகுமுத் தாமென்று சேவலிற்
கட்டிவிளை யாட வருவான்
பையவே மயிலுக்கு மூக்குத்தி முத்தென்று
பார்த்துட லந்து ளைப்பான்
பாரவெங் கோட்டுக் கிடாய்க்குச் சிலம்பென்று
பாதத்தி லேய ணிகுவான்



மையலுடன் வருதெய்வ யானைக்கு மாலையிடு
மணவாளன் வரவ ழைத்தால்
வாராதி ருப்பதுவும் ஆச்சரிய மேயுனது
மதிமோச மதமல் லவோ
ஐயமில் லாமலென் னையனுட னேதினமு
மம்புலீ யாட வாவே
அகண்டவடி வாகிய சிகண்டிமலை யாதிபனொ
டம்புலீ யாட வாவே. 69

நிச்சயம தாகவே மித்திரன் மறைந்திட
நிலாக்களை விளங்க வந்தும்
நிரோகணிப் பெண்ணினாற் சயரோக முங்கொண்டு
நிசரோகி யாயி ருந்தும்
இச்சையொடு பிறர்மனை நயந்துகுடி லத்தோரு
மெந்நாளு மேவ ளர்ந்தும்
இதயபரி சுத்தமில் லாமலந் தக்கரண
மென்றுங் களங்க முற்றுஞ்
செச்சைப்பு யத்திளவல் விளையாட வாவென்று
திருவுளமு னக்க ளித்தால்
சென்றாடு தீர்த்தமது வந்தாடி னோமென்று
சென்னிகுவி யாத தென்னோ
அச்சப்ப டாமலென தையனுட னேதினமும்
அம்புலீ யாட வாவே
அகண்டவடி வாகிய சிகண்டிமலை யாதிபனொ
டம்புலீ யாட வாவே. 70

துங்கமலை மீதினி லிலங்குபொற் கோட்டினிடை
தோற்றலா மமுதூற் றலாந்
துய்யபாற் கடலென்ன வள்ர்சரவ ணப்பொய்கை
சூழவே விளையா டலாம்
பங்கமில் லாததே னாற்றினிரு கரையெலாம்
பழகிய நிலாவீ சலாம்
பாண்டிநன் னாடுபுகழ் நேமநாட்ட வரெலாம்
பார்க்கவே தீர்க்க முறலாம்
சங்கமெங் குங்குலவு கன்றாக்கு டிக்குள்வளர்
சாளரத் தினினு ழையலாம்
சண்முகக் கடவுளுடன் விளையாட லாநித்திய
சாம்ப்ராச்சிய முடன்வா ழலாம்

அங்கசன் மனமகிழ மேல்வட்ட மாகிவளர்
அம்புலீ யாட வாவே
அகண்டவடி வாகிய சிகண்டிமலை யாதிபனொ
டம்புலீ யாட வாவே. 71

## 8. சிற்றிற் பருவம்

கடவா ரணமா முகத்தவுணன்
கடும்போர் துளைத்துப் பொருதிரண
களத்திற் புகுந்து மருப்பிவரக்
கதிக்குந் தரளம் பிரித்தெடுத்து
மடவார் கூடி மனைவகுத்து
மலைய வரைச்சந் தனக்குறடு
வாய்த்த பனிநீர் வார்த்துரைத்து
வழித்து நிறைசந் தனக்குழம்பிற்
படவா ளரவின் முடிதாங்கும்
படிமேல் விளங்க நிலம்பூசி
பதுமத் தரசி யெனுமாதர்
பரிவாய்க் கூடி விளையாடுந்
திடவா ரணத்தி னுடன்பிறந்த
தேவே சிற்றிற் சிதையேலே
சிகண்டி மலைமேல் வீற்றிருக்குஞ்
செல்வா சிற்றிற் சிதையேலே. 72

தாங்கும் புவிக்கோ ராடையெனத்
தவமா முனிக்கு முணவாகத்
தயங்கும் பாரா வாரமுன்னாட்
டானே சுவற வேலெறிந்து
நீங்கும் புனலாற் குடவளைக
ணிலமே லொதுங்க மரகதத்தால்
நிரைத்த வடுப்பின் மிசையேற்றி
நினது நதித்தே னுலைவார்த்து
வாங்கும் வயிரப் பொடியதனை
மறுப்பார்த் தெடுத்துக் களைந்தரிசி
வாகாப் புகட்டி நின்னாட்டு
மடவார் கூடி விளையாடுந்
தேங்கும் புகழ்சேர் குன்றைநகர்த்
தேவே சிற்றிற் சிதையேலே



சிகண்டி மலைமேல் வீற்றிருக்குஞ்
செல்வா சிற்றிற் சிதையேலே. 73

கதறு மவுண ரிரிந்தோடக்
கலங்கு மாயா புரியழித்த
காலத் தவர்மா ளிகைப்பவளக்
காலே யவர்க்குத் தனமாகப்
பதறு மசுர மடமாதர்
பரிக்குந் திருமங் கலப்பூணிற்
பதிக்கு நடுநா யகமணியாம்
பகர்மா ணிக்க மிருட்பிழம்பை
உதறும் படிக்குக் ககனமணி
யொளிசேர் தூண்டா விளக்கெனவே
யுயிரோ வியம்போன் மடமாதர்
உனையே யடுத்து விளையாடும்
சிதறுந் தரங்கத் தேனாற்றுத்
தேவே சிற்றிற் சிதையேலே
சிகண்டி மலைமேல் வீற்றிருக்குஞ்
செல்வா சிற்றிற் சிதையேலே. 74

கூட்டுந் தரங்க மிரங்குதெண்ணீர்க்
குளிர்தே னாற்றி னீராடிக்
கூந்தல் விடுத்துத் திலதமிட்டுக்
குவளை விழிக்கஞ் சனமெழுதிப்
பூட்டு மணிகள் பலவணிந்து
பூம்பட் டாடை விரித்துடுத்துப்
புகலுங் களபங் கமகமெனப்
பூசித் தரள வடம்பூண்டு
சூட்டு மலர்மா லிகைதரித்துத்
துலங்குங் கழங்கம் மனையெறிந்து
சுரும்பா ரரும்பு கறிதிருத்திச்
சுடுசோ றாக்கி விளையாடுந்
தீட்டுந் திலத நுதற்குமரா
சிறியோர் சிற்றிற் சிதையேலே
சிகண்டி மலைமேல் வீற்றிருக்குஞ்
செல்வா சிற்றிற் சிதையேலே. 75

வருமோ கார கிரிசூழ
வலமாய் நடந்து பூங்காவின்

மலர்பூப் பறித்து மலையேறி
வனச மலர்த்தாண் மிசைசொரிந்தங்
குருமே றெனவே யெதிர்த்தடரு
மொருவேல் பாடி மயில்பாடி
யுபய மடமா னடிகடொழு
துனதா றெழுத்துங் கருத்தில்வைத்துத்
தருமே னியில்வெண் ணீறணிந்துன்
றனையே துதித்துச் சிறுசோறுன்
றனக்கே படைத்துத் தனித்தனியுன்
றாளே வணங்கி விளையாடுந்
திருமே னியிலும் புழுதிபடச்
சிறியோர் சிற்றிற் சிதையேலே
சிகண்டி மலைமேல் வீற்றிருக்குஞ்
செல்வா சிற்றிற் சிதையேலே. 76

வானத் தவுண ரெதிர்த்தடர
வரும்பா ளையமோ மலர்த்தாளில்
வணங்கா நிருதர் படைவீடோ
மாயா புரிக்கொத் தளமீதோ
கானக் குறவர் பசுங்குடிலோ
களிக்குங் குறத்தித் தினைப்புனத்தைக்
காக்கும் வேலித் திறமீதோ
கதிக்குங் க்ரவுஞ்ச கிரிதானோ
ஞானத் தவர்க டமைமயக்கி
நாளும் பிறப்புக் கிடமாக்கி
நலியும் வலிய வினைப்பயனோ
நளின மலர்த்தா ளாலழிக்க
ஆனைக் கொருகே சரியான
அரசே சிற்றி லழியேலே
அகிலம் பரவுந் துங்கமலைக்
கரசே சிற்றி லழியேலே. 77

நிலஞ்சேர் மாட்டுக் குளப்படியி
னீர்போ லிறைத்து விளையாடு
நீலக் கடலின் புனலிதுவோ
நினது மலர்த்தாள் வணங்காத
குலஞ்சேர் வீர மாகேந்த்ரக்
கொடிய நகரோ சிங்கமுகன்



கொலுவீற் றிருக்கு மண்டபத்தின்
கொடுங்கை யிலங்கு மணிமுகப்போ
பொலஞ்சேர் கிரியும் இமையவெற்பும்
பொருந்தும் படிக்குக் கழங்கெனவே
பூட்டித் தெறிக்கும் மலையிதுவோ
புகலும் பதத்தா னீயழிக்க
அலஞ்சேர் கரத்தான் மருகனெனு
மரசே சிற்றி லழியேலே
யகிலம் பரவுந் துங்கமலைக்
கரசே சிற்றி லழியேலே. 78

தரிக்கு மமரர் சிறையிருக்குஞ்
சாலை யிதுவோ நற்கீரன்
தமிழுக் கிரங்கிச் சிறைவிடுத்த
தலமா மலகைக் குகையிதுவோ
விரிக்கு மிலங்கா புரிக்கோட்டை
மேலை வாயிற் படியிதுவோ
வேலைக் கொருவே லியுமாக
விளங்கு மெழுதீ வோவருண
கிரிக்கு மனச்சஞ் சலந்தீர்த்துன்
கிருபை யளிக்கு முன்னாளிற்
கிளைக்கும் வினையோ வனசமெனக்
கிளரும் பதத்தா னீயழிக்க
அரிக்கு மருமை மருகனெனு
மரசே சிற்றி லழியேலே
அகிலம் பரவுந் துங்கமலைக்
கரசே சிற்றி லழியேலே. 79

சரண மெனவே வந்தடைந்த
தவஞ்சேர் முனியாங் கவுசிகன்மேற்
றானே நடத்து முனிவேள்வித்
தலமோ சமணர் குடியிருப்போ
வரண மெனவே யவர்விடுத்த
வனலோ மதுரைக் கரசன்மிசை
யங்கந் துளைக்குங் கொடுஞ்சுரமோ
வாற்றோ டேறி வரும்புனலோ

மரண மடையு மருமறையோன்
மங்கை யுயிரைக் கவர்ந்தெடுத்த
மறலி யுலகோ வனசமெனு
மலர்த்தாள் சிவக்க நீயழிக்கத்
திரண மெனவே மதித்தருள்செய்
தேவே சிற்றிற் சிதையேலே
சிகண்டி மலைமேல் வீற்றிருக்குஞ்
செல்வா சிற்றிற் சிதையேலே. 80

மோக்கக் குழையு மனிச்சமலர்
முனிவர் மனத்தி லுறநினைத்து
முயங்கக் குழையு முனதுபத
முளரிக் கிணையென் பாரறியார்
தாக்கச் சிவக்கு மலர்ப்பதத்திற்
றனித்தூள் பொதியு மணியழுத்துந்
தமியேன் மனது சஞ்சலிக்குஞ்
சகிக்க வறியே மெமைநாளுங்
காக்க வுனக்கே பாரமலாற்
கதிவே றுண்டோ காப்பவனே
காவ லழித்தாற் கணக்கேதுன்
கருணை யிலங்கக் காலமன்றோ
வாக்கம் பெருகுங் குன்றைநகர்க்
கரசே சிற்றி லழியேலே
யகிலம் பரவுந் துங்கமலைக்
கரசே சிற்றி லழியேலே. 81

## 9. சிறுபறைப்பருவம்

அந்தமுறு கற்பகா லத்திலுரு மேறென்ன
வமரர்துந் துமிமு ழுங்க
அஷ்டாத சத்தொனியு மெட்டான திகைமுட்ட
வழகுபல் லியமு ழுங்க
மந்தரஞ் சுழலுநாண் மறிகடன் முழக்கென்ன
வானவர்க ளொலிமு ழுங்க
மைக்கொண்ட லொலியென்ன விமையோர்கள் சிறுநாணின்
வலியவொலி மிகமு ழுங்கச்



சந்ததமும் வெந்நிடா வீராதி வீரர்குறி
சங்கநா தமுமு ழுங்கச்
சங்கிராம நாளிட்ட வேதனோ முனிவோர்கள்
சதுர்வேத வொலிமு ழுங்கச்
செந்திருவி ளங்குமணி ரதமேறு சிங்கமே
சிறுபறை முழக்கி யருளே
தேவர்க்கு மானுதவு தேவிக்கு நாயகன்
சிறுபறை முழக்கி யருளே. 82

நவகோடி வீரர்வரு மட்டகா சத்தினா
னாற்றிசைகள் கெடிக லங்க
ரதகசது ரங்கபத சதுரங்க வர்க்கத்தி
னாற்கருங் கடல்க லங்கத்
தவகோடி யால்வந்த செயகோடி சாயவே
தாரகன் மனங்க லங்கச்
சாயாத படையென மாயாபுரத் தவுணர்
தம்மிலே கண்க லங்க
அவகோடி பெருமவுணர் புணர்கோடி மடவார்க
ளரியகர்ப் பங்க லங்க
வருகோடி வருமசுர ருயிர்கோடி யலறவே
யந்தகன் றிசைக லங்க
சிவகோடி யவதார வடிவாக வருமுருக
சிறுபறை முழக்கி யருளே
தேவர்க்கு மானுதவு தேவிக்கு நாயகன்
சிறுபறை முழக்கி யருளே. 83

எண்டிசைக் குஞ்சரம் பொருபோ ரடங்கவே
யிபமுகன் போர டங்க
விமயாச லத்தில்வரு முனிவோர் தழைக்கவே
யீதிபா தைகள டங்க
வண்டிசையு நந்தாவ னஞ்செய்த வும்பர்கோன்
மணிவிரற் சேப்ப டங்க
வருபரங் குன்றின்முலை யிருபரங் குன்றான
வள்ளிக்கு மால டங்கத்
தண்டிசையு மொலிகண்டு செந்தூரி னலைசிதறு
தண்புனற் கடல டங்கத்
தானவர்கள் சூழச் சிறைக்கூட முறுசயந்
தன்மனப் பயம டங்கச்

செண்டிசையு மணிவிரற் காந்தளங் கையினாற்
சிறுபறை முழக்கி யருளே
தேவர்க்கு மானுதவு தேவிக்கு நாயகன்
சிறுபறை முழக்கி யருளே. 84

வானாடு தழையவே தூதுசென் றிடுவீர
வாகுநித மஞ்ச லிக்க
மலங்கா தெதிர்த்திடு மிலங்கா புரத்தசுரர்
வாதாடி வாய்ச லிக்க
நீநானெ னச்சென்று பானுகோ பனும்வந்து
நில்லாது சஞ்ச லிக்க
நின்றுமாழ் குறுமவுண ருயிர்கவர விடுபடைக
ணேரான கைச லிக்கக்
கானாறு சூழ்வீர மாகேந்த்ர புரமேவு
கண்டகன் மனஞ்ச லிக்க
கங்கமங் கங்குலவ வவர்மீதி லாடிய
கவந்தங்கள் வாய்ச லிக்கத்
தேனாறு புடைபெருகு மாயூர கிரிமுருக
சிறுபறை முழக்கி யருளே
தேவர்க்கு மானுதவு தேவிக்கு நாயகன்
சிறுபறை முழக்கி யருளே. 85

சகடமிட வருநிருத ருடல்கிழிய விளைகுருதி
சளசளென மலைய ருவிபோற்
றரணிநதி பெருகியிரு கரைபுரள மதகளிறு
தவழுமுடல் விடுப டகுபோல்
விகடமிடு மவுணர்பணி பயிலிரத மொடுமனதின்
மிசையுருள விருது கொடிதான்
விசையமகள் புனைதுகிலை நிகரொழுக வரிநுரைகண்
மிகுமலைகள் பலசி தறவே
யகடுகிழி படுபுரவி மகரமென விருகரையி
னருகுவர நிருதர் முகமே
அளிகள்விழு கமலமல ரெனவிசைய மகள்கொலுவி
னலகைசில வடிப ணியவே
திகடமத முகனிருத னுயிர்கவரு மதகளிறு
சிறுபறை முழக்கி யருளே
தேவர்க்கு மானுதவு தேவிக்கு நாயகன்
சிறுபறை முழக்கி யருளே. 86



சங்கமு முழங்கிட நடத்தெதிர் வரும்புரவி
தங்கியதி மிங்கி லமெனத்
தந்திகண் மிதந்துவரு வங்கமென நின்றொழுகு
சஞ்சலமி டுங்க வரியா
நங்குர மிசைந்திடு பெரும்பட கெனும்படி
நடந்திடிர தங்க ளிலக
நன்குறு படம்பெறு மரங்களென வெண்கொடி
நடுங்கொடிய கம்ப மிலகப்
பங்கமற நின்றுபொரு கின்றவர் பசுங்குருதி
பைம்புனலி னின்று வரவே
பண்டுநுரை கொண்டலை மிகுங்குமிழி கொண்டுயர்
பசுங்கிடையின் மண்டி வரவே
சிங்கமுக னின்றுபொர வன்றுயிர்க வர்ந்தகுக
சிறுபறை முழக்கி யருளே
தேவர்க்கு மானுதவு தேவிக்கு நாயகன்
சிறுபறை முழக்கி யருளே. 87

கயமன்று பொருகின்ற விரிகொம்பு நெரிகின்ற
கதிர்கொண்ட தரள மெல்லாம்
களிகொண்டு பொரிசிந்தி விழிகொண்ட கடைதந்த
கனல்கொண்டு சமிதை யாகப்
பயமின்றி யடர்கின்ற கணைசிந்தி வலம்வந்து
படிகின்ற குருதி நெய்யாய்ப்
பகைகொண்ட நிருதன்ற னுயிர்கொன்ற வவிதந்து
பழியென்ற முளைதெ ளித்தே
நியமங்க ளொழிகின்ற வவுணன்ற னகரின்கண்
நிலைகொண்ட கலைமி தித்தே
நிலமங்கை மலர்மங்கை கலைமங்கை மலைமங்கை
நிசமங்க ளம்பா டவே
செயமங்கை மணமன்று புரிகின்ற மதகளிறு
சிறுபறை முழக்கி யருளே
தேவர்க்கு மானுதவு தேவிக்கு நாயகன்
சிறுபறை முழக்கி யருளே. 88

கொட்டமிடு நெட்டவுணர் கட்கடையு தித்தகனல்
குத்துமொரு மத்த கயமே
கொட்டிய மருப்பிடை தெறித்தகன லச்சகடு
கொட்புற வுதித்த கனலுந்

தக்கமிடு முக்கனலி தர்ப்பைசர மச்சமிதை
சத்தியொடு வெட்டு நெடுவாட்
டைக்குமுட லிற்குருதி நெய்த்திரள தற்கவித
சைக்குவை யிசைக்கு மொலியே
யட்டமிடு விப்ரகுல வித்தகர் மறைத்தொனிய
தற்குவபை பத்ம னுடலே
யத்திறமி சைத்தபத முச்சகமு மிச்சகமு
மச்சகமு மெச்ச வரிதாஞ்
சிட்டர்தொழு பத்மபத பத்தரிடர் வெட்டுகுக
சிறுபறை முழக்கி யருளே
தேவர்க்கு மானுதவு தேவிக்கு நாயகன்
சிறுபறை முழக்கி யருளே. 89

இலகுகரு முகினிருத ரவர்கடொனி குமுறுமொலி
யிடிமுரசு மினலும் வடிவா
ளிகலுமொரு தனுவளைதன் மகபதித னினியதனு
வெழுகணைகள் சொரியுமழையே
சலசலென நதிபெருகு மலையருவி யவுணருட
றனின்மருவு குருதிய தன்மேற்
றனின்முழுகு கழுகுகொடி யினமலகை முழுகவரு
சனமதனில் விழுதல் புகழே
கலகமிடு மறலிபடை யுழவரவர் மகிடமுகி
கனபகடு கயிறு கயிறே
கழனிரண களமகுட நடவுமுடி யுவகைபெறு
கடியசமர் புரியு மயினேர்
திலகனுத லருள்சிறுவ குமரகுரு பரமுருக
சிறுபறை முழக்கி யருளே
தேவர்க்கு மானுதவு தேவிக்கு நாயகன்
சிறுபறை முழக்கி யருளே. 90

**வேறு**

கரையிட்ட குருதிக்குண் முழுகிக்கு லவையிட்ட
களமுற்ற கடிபெற்றமா
கனமொத்த முரசுக்கு ளுலையிட்டு நிணமிட்ட
கறிவைத்து வெறிபெற்றபேய்
நிரையிட்ட குருதிக்குள் வரிசைப்ப லரிசிக்கு
நிகரிட்ட ரியிலுற்றவாய்



நிலைபெற்ற விருதிட்ட கொடியுற்ற விறகிட்டு
நிமிடத்தி லெரியிட்டுமால்
வரையிட்ட குருதிக்குள் வடியிட்ட குடமூற்று
மதுவிட்டு விசையத்துமான்
மணிபெற்ற சரணத்தின் மலிவுற்ற பலியிட்டு
மகிழ்வுற்று லகமெய்க்கவே
திரையிட்ட புடவிக்குள் ளமரிட்ட திடசித்த
சிறுபறைமு ழக்கியருளே
தேவர்க்கு மானுதவு தேவிக்கு நாயகன்
சிறுபறைமு ழக்கியருளே. 91

## 10. சிறுதேர்ப்பருவம்

பண்டேறு கந்தருவர் விண்ணவர் குழாமெலாம்
படையாக வடமேருவே
பாரவில் லாகவா சுகியுமே நாணெனப்
பச்சைமால் கணையாகவே
மண்டேறு தேராக மறைநான்கு புரவியா
மலரயனும் வலவனாக
மதியமும் பருதியும் தேருருளை யாகநம்
வாசவன் தெண்டனிடவே
கண்டேறு தேன்பொழிப் பச்சைப் பசுங்கொடி
கலந்திடப் பாகம்வளரக்
கருதுதிரி புரநிருதர் நகையிலெழு சிகிரியெழக்
கண்டுநிர்த் தூளிபடவே
திண்டேரு ருட்டிவரு கயிலைநா யகன்மகன்
சிறுதேரு ருட்டியருளே
செங்கமலை யகலாத துங்கமலை யாதிபதி
சிறுதேரு ருட்டியருளே. 92

உருத்தேறு திசைமுகன் றலைபனங் காயென்ன
வுதிரவான் முகடுமட்டும்
உயர்கின்ற செய்குன்றி லுதவுமிள விசையமக
ளுவகையொடு விளையாடவே
கருத்தேறு மாமணிப் பந்தெறிந் தேயலகை
களிகொண்டு கூத்தாடவே

கழுகுக்கு ழூரங்கூடி யிருகாலி லெற்றிக்
கழங்கென் றுளங்குளிரவே
செருத்தமரி னிசிசர ரிரிந்தோட நிலமங்கை
செங்குருதி யுண்டுதேக்கத்
தென்றிசைக் கடவுள்படை முன்பகை தடிந்திடத்
தேவர்கோன் வரவிடுத்த
திருத்தேர் நடத்திவரு செங்கண்மான் மகிழ்மருக
சிறுதேரு ருட்டியருளே
செங்கமலை யகலாத துங்கமலை யாதிபதி
சிறுதேரு ருட்டியருளே. 93

காரேறு முகிலெனக் கடகளிறு வீரிடக்
கரடமத மூன்றுபெருகக்
கடலுடைத் தாலென்ன நிரைநிரைய தாகவே
கலினவாம் பரிநெருங்கப்
போரேறு மன்னவர்கள் வாய்மடித் தேகொடிய
புலிபோ லெதிர்த்துநிற்கப்
பொருதுமட் சோணிகண் மூவாறு மோரேழு
புணரியென வந்துசூழச்
சீரேறு முரககே தனன்வெகுள மறலியருள்
செல்வனு மகிழ்ந்துநிற்கச்
செங்கண்மா னாளிட்ட மூவாறி லேகுருச்
சேத்திரர்கள் களம்விளங்கத்
தேரேறு மரசர்கதை யெழுதுமிப முகனிளவல்
சிறுதேரு ருட்டியருளே
செங்கமலை யகலாத துங்கமலை யாதிபதி
சிறுதேரு ருட்டியருளே. 94

மன்றலந் தெரிவையர்கள் பரிவார மேசூழ
வட்டமதி குடைநிழற்ற
மதவார ணக்கங்கு லிரவிநில வென்னுமிரு
மணிகணீ ரெனநடக்கத்
துன்றுமேழ் கடன்முரச மிகவார்ப் பரிக்கச்
சுரும்பர்கள் கரும்புசேரச்
சோலைக்க ருங்குயில்கள் எக்காள மூதவிரு
தூணியு மரும்புநிறையக்



குன்றவில் லியையமூல வடதருவி லுறையுமெங்
கோவான ஞானமுதலைக்
கோதிலா மறைதேடு மெய்ப்பொருளை யுமையோடு
கூட்டுதற் கெளிதாகவே
தென்றலந் தேர்நடத் தியமாரன் மைத்துனன்
சிறுதேரு ருட்டியருளே
செங்கமலை யகலாத துங்கமலை யாதிபதி
சிறுதேரு ருட்டியருளே. 95

கனகவரை பளபளென வொலியையக லாதிடக்
கங்குலு மறைந்துநிற்கக்
கமலா கரத்தினி லரும்புகள் சுரும்பொடு
களிக்கவே சக்ரவாகம்
அனவரத முஞ்சோடு பிரியாம லின்பமுற
வந்தணர் கடன்கழிக்க
அருணனொடு பச்சைப் பசுங்குதிரை மேற்கசைய
யடித்திடப் பரிநடக்கப்
பனகனுடல் குலையவொரு பாசமென வேநின்ற
பாசமுந் தணியவுருளை
பரிவர்த்த னஞ்செய்ய வுயர்சக்ர வாளகிரி
பாரம்ப ரிக்கவானிற்
றினகரன் றேர்செல்ல விளையாடு மொருபிள்ளை
சிறுதேரு ருட்டியருளே
செங்கமலை யகலாத துங்கமலை யாதிபதி
சிறுதேரு ருட்டியருளே. 96

மூவர்களு நிலைகொண் டிருக்கவிண் ணவர்கள் பொன்
முடிமீன் சுமையுமாற
முனிவோர் சடாமுடி மதுக்குடந் தாங்கலு
முலைக்குட மிரண்டுதாங்கும்
பாவையர்கண் பூமுடிக டண்ணீர்க் குடங்கொண்ட
பாரமற வாயுநிருதன்
பைம்பொனரண் மனைவாயின் முன்றிலிற் றூளுதறு
பாவங்க டீரவருணன்
மேவுமரண் மனைதொறுஞ் சாணிநீர் தூற்றுவினை
மீண்டுவினை யகலவனலி

வேண்டுமொரு தூண்டா விளக்கென்ற துயர்நீங்க
வீறுபொன் னாடுனருளாற்
றேவர்கோன் பொற்றேர்ந டாத்தவரு சிறுபிள்ளை
சிறுதேரு ருட்டியருளே
செங்கமலை யகலாத துங்கமலை யாதிபதி
சிறுதேரு ருட்டியருளே. 97

கும்பத்த னங்கொண்ட விந்த்ராணி கடிதடக்
கோமளத் தேரேறவே
குலிசதரன் முனிவோர் மகம்பல வியற்றியே
கூறுபூந் தேரேறவே
கம்பக் கடக்களிற் றரசர்போ ராடவே
கடவுபொற் றேரேறவே
காசினி விளங்கவரு மாலயமெ லாந்தேவர்
கற்பகத் தேரேறவே
வம்புற்ற தனமாதர் தன்னெறி வழாமையான்
மண்டலத் தேரேறவே
மாதமும் மாரியும் வழங்கலாற் கடல்சூழும்
வையகத் தேரேறவே
செம்பொற் பெருந்தேரி லேறுமொரு சிறுபிள்ளை
சிறுதேரு ருட்டியருளே
செங்கமலை யகலாத துங்கமலை யாதிபதி
சிறுதேரு ருட்டியருளே. 98

ஒருநாலு வேதமும் விளங்கமறை யோர்குலமு
முலகத்தி லேவிளங்க
வும்பருட னும்பர்கோ மானும்வி ளங்கமக
மோயாம லேவிளங்க
வருநாடு காவலன் சசிவர்ண மகராசன்
மைந்தன்மிக வும்விளங்க
வானாடு போலவே நேமநா டெந்நாளு
மகிழ்வாக வேவிளங்கத்
தருநாவ லோர்தமிழ் விளங்கவளர் குன்றைநகர்
சந்ததமுமே விளங்கத்
தானமொடு பரிகலஞ் சந்திரா தித்தர்வரை
சந்ததிவி ளங்கநிதமும்
திருநாள் விளங்கவொரு தேரேறி வருமுருக
சிறுதேரு ருட்டியருளே



செங்கமலை யகலாத துங்கமலை யாதிபதி
சிறுதேரு ருட்டியருளே. 99

தங்கமலை நிகரான துங்கமலை வாழ்கவே
சரவணப் பொய்கைவாழ்க
சந்த்ரமண் டலமளவு மாயூர கிரிரசித
சைலமென நிதமும்வாழ்க
மங்களம் பெருகுதே னாறுவா னாறென்ன
மாறாது பெருகிவாழ்க
மதுநதீ சருமிலகு வாமபாகத் தில்வளர்
மரகதக் கொடியும்வாழ்க
வெங்களப முகன்முதற் றேவதா பரிவார
மேன்மேலு வாழ்கவுனது
விரைமலர்த் தாண்மீதி லன்புவைத் தவரெலாம்
வீறுபிறை போலவாழ்க
திங்கண்மும் மாரியொடு சகதலம் வாழ்கவே
சிறுதேரு ருட்டியருளே
செங்கமலை யகலாத துங்கமலை யாதிபதி
சிறுதேரு ருட்டியருளே. 100

பார்வாழி குக்குடக் கொடிவாழி பச்சைப்
பசுந்தோகை வாழியுனது
பரிவார கணம்வாழி நவவீர ரும்வாழி
பரிவாக வோங்கும்வடிவேற்
கூர்வாழி வள்ளியங் கொடிவாழி வளர்தெய்வ
குஞ்சரிம டந்தைவாழி
கூறுபிள் ளைத்தமிழ்க் கவிவாழி யரசர்செங்
கோல்வாழி யிலகுகுன்றை
யூர்வாழி தானமொடு பரிகலம் வாழிமறை
யோர்குல மிகுத்துவாழி
யுலகுபுகழ் மாயூர கிரிவாழி சந்நிதி
யுயர்ந்துமேன் மேலும்வாழி
சீர்வாழி யெழில்பெருகு குமரகுரு பரமுருக
சிறுதேரு ருட்டியருளே
செங்கமலை யகலாத துங்கமலை யாதிபதி
சிறுதேரு ருட்டியருளே. 101

**மயூரகிரிச் சண்முகநாதர் பிள்ளைத்தமிழ் முற்றிற்று**

உ

# வள்ளிமலை திருமுருகன் பிள்ளைத்தமிழ்

## புலவர் ச. சுந்தரேசன்

### காப்பு

திருமகிழ் மாலவன் திருமார்பு நூலவன்
திசைதொறுங் காக்குமமரர்
தேவாதி தேவர்கள் . தேடரும் சுடர்வணன்
செவியினைச் சாய்த்து நிற்கக்
குருவென விருந்துயர் பிரணவப் பொருளினைக்
குதலைமொழி யாலுரைக்கும்
குழவிமீ தன்பினால் பிள்ளைத் தமிழ்பாடக்
கொள்மதியில் நின்றருள்கவே
வெருவுமைம் பொறியெனும் வேடரை யடக்கியும்
வெவ்வினை யெனும்பொலாத
வேங்கையை விரட்டியும் விழைவெனும் அரக்கியை
வீட்டியும் அன்பினால்நின்
அருகுவந் தேத்திடும் அடியவ ரளித்திடும்
அருகுவந் தேற்றுவந்தே
அஞ்சலென் றருள்புரி யன்னையுமை மடியுறை
ஆனைமுகன் அடிசரணமே. 1



### சற்குரு வணக்கம்

உலகந் தழைக்க உயிர்க்கருணை
உயர்நன் னெறியாம் சன்மார்க்கம்
உளத்தில் சாதி பேதமிலா
ஒருமைப் பாடு வழிகாட்டிக்
கலகந் தவிர்த்தும் அருட்சோதி
கடவுள் ஒருவர் என்றுரைத்தும்
கந்தக் கோட்டச் சண்முகனைக்
கருத்திற் கொண்டு குருவாக
இலகும் அருள்பெற் றிறவாத
இன்ப மடைந்த வடலூர்வாழ்
இராம லிங்கப் பெருமானே
என்னுள் அமர்ந்த சற்குருவே
நிலவும் வள்ளி மலைமுருகன்
நிமலன் பிள்ளைக் கவிபாட
நெஞ்சில் வருவாய் தமிழ்தருவாய்
நின்றாள் சரணம் சரணமே. 2

### அவையடக்கம்

போதமெய்க் குருவினைப் புண்ணியர்க் கருளுதவிப்
புந்தியில் நிற்குமவனைப்
புவனங்கள் யாவையும் நொடியினில் தந்தவை
புரந்தழித் தாடுமரசை
வேதனறி யாதகுஞ் சிதபாத னுதற்சுடர்
விழியினில் வருவேலனை
வேண்டுமடி யார்பதம் விளங்கிட மயிலினில்
விரைந்திடு மாறுமுகனை
ஏதமுறு பிறவியா மாற்றினி லெழுகிலா
தியைபுழுவின் கடையடைவேன்
இனியசெந் தமிழினில் பிள்ளையந் தமிழ்பாடி
ஏத்துத லரிதானுமிங்
கோதமுறு மெழுகடலை யோரசகம் சுவரவே
உண்டிட முயலுமாபோல்
ஒன்றுமறி யாச்சிறுவன் ஞானிகள் நகைசெய
உரைத்தனன் பொறுக்குமாறே. 3

# 1. காப்புப் பருவம்

## திருமால்

மண்ணினை யுண்டவன் மண்ணினைக் கொண்டவன்
மண்மகள் தழுவுமார்பன்
மன்னுயி ரனைத்தையும் காப்பவன் மறையவன்
மகிழ்மல ருந்தியுடையான்
கண்ணனைக் கடிமலர் துளபமார் தாரினன்
கார்முகில் வண்ணமுடையான்
களிற்றினைக் காத்தருள் செய்குவான் தாமரைக்
கண்ணனின் கழல்பணிகுவாம்
பண்ணொடு மிசையினைப் பரப்பிவண் டார்த்திடப்
பனிமலர்ச் சோலைசூழும்
பகலவன் வலம்வரு முயர்வள்ளி மலையிடைப்
பரண்மிசை யேறிநின்றே
எண்ணரும் பைந்தமிழ் ஆலோலம் பாடிடும்
என்னனை வள்ளியம்மை
இன்குரல் கேட்டிடத் தேடிவரு குமரனை
ஏந்தலைக் காக்கவென்றே. 4

## பரசிவம்

### வேறு

பவமெனு முவரியிற் படுமிகு முயிர்த்திரள்
பதமிறப் பதமருள்வான்
பணியணி திசைப்புயன் பரையொரு பகுதிகொள்
பனிசடைப் பிறைமுடியான்
சிவகண மொடுபல வமரரு முனிவரும்
சிவசிவ எனப்பரவிச்
சிரமிரு கரங்குவித் துருகிட அருள்பர
சிவனடி மலர்பணிவாம்
தவமிலை யெனினுமோர் தரம்சர வணபவ
தளிரடி சரணமெனில்
தகுதகு வெனநட மிடவரு மயின்மிசை
தயவருள் தரவருவான்



குவடுகள் தனில்தினைப் புனமொரு பொருட்டெனக்
குதிதரு மெழிற்பிணையாம்
குறமகள் தருநற வமுதினை நயந்திடு
குமரனைப் புரந்திடவே. 5

## ஆதிசக்தி

### வேறு

மதுமொழி குமுதம் மதியொளி முல்லை
மயலறு குவளையுமே
மணமிகு பங்கய மலருடன் தோன்றும்
மரகதக் கொடியனையாள்
சதுர்மறை யறிவரி தெனவுள மாழ்கு
சங்கரி யிமையளவில்
சகலமு மொருகரு வினில்தரு மாதி
சக்தியின் தாள்பணிவாம்
முதுமையு மிளமையும் புவியினி லென்றும்
முறையெனக் காட்டிடவே
முளரிகள் துயருற குறமக ளாமெம்
முதல்வியைத் தேடிடுவான்
இதுவது இவனவ னெனற்கரு மூல
இறையவ னடியவரின்
இதயமென் மலர்மிசை யிருந்தருள் வேலன்
இளையனைக் காத்திடவே. 6

## மகா கணபதி

பிரணவ மாகிப் பெரியனு மாகிப்
பேரருளின்
பிடியென இமயம் உலவுமை மகிழும்
பெருமானே
கரணமு முளமும் கரைந்திட அருள்மா
கணபதியே
கணமுனை மறவா திருகரங் கூப்பிக்
கழல்பணிவாம்
அரணமும் வரையு மலறிடத் துகள்செய்
அயில்வேலும்

அகிலமும் நொடியில் வலம்வரக் குதிசெய்
அணிமயிலும்
சரணமென் சூரன் தவமது காட்டும்
தனிச்சேவல்
தமதெனக் கொள்ளுங் குமரனைக் காத்துத்
தயவருளே. 7

### வேல்

விடையே றுடையான் செஞ்சடையான்
விளங்கு மெட்டுப் பணைத்தோண்மேல்
விழுந்தும் எழுந்தும் விளையாடி
விரவும் புனிதத் திருநீற்றி
னிடையே மூழ்கித் தங்கையினி
லிறங்கித் திளைக்குங் குழவியினை
இன்பம் வழங்க வள்ளிமலை
யிருக்கும் வேளைக் காத்திடவே
அடையா ரறியா ருறைகுன்றை
அகத்தி லழுத்து மாணவத்தை
அடியார் துயரைப் பிறவியினை
அவர்தம் வினையை அசுரர்குலப்
படையைச் சூரைப் பற்றழியப்
பகுத்துத் துளைத்துச் சிதைத்தழிக்கும்
படையை அன்னை யுமைமகிழ்ந்து
படைக்கும் சக்தி வேல்சரணே. 8

### மயில்

பற்றை யறுத்துப் புலனடக்கிப்
பசியோ டுறக்க மறவிடுத்துப்
பகலு மிரவுந் தமைமறந்து
பதமே விழையத் தவமுயலும்
கற்றைச் சடைகொள் முனிவரர்க்குங்
கருத்து ளுணராப் பரம்பொருளைக்
கந்தா என்பார்க் கருள்வழங்கும்
கதிர்வே லவனைக் காத்திடவே
ஒற்றைப் பிறைக்கோட் டிறைக்கெதிரா
உமையோர் பாகன் கனிபெறவே



உலக மனைத்து மொருநொடியில்
ஒலித்தொண் மணியாஞ் சிறைவிரித்து
மற்றை மாழ்கப் பறந்துவந்து
மயலைப் பகையை யழித்துவள்ளி
மலையி லடியா ருளப்பீடம்
மருவும் மயூரம் பணிவோமே. 9

### நக்கீரர்

கண்டு நிகர்க்கும் வண்டமிழின்
கலைகள் ஆய்ந்து கழகத்திற்
கபிலர் பரணர் புகழுநுதற்
கண்ணா ரோடும் வாதிட்டுப்
பண்டு முருகாற் றுப்படையைப்
பரங்குன் றுறையும் பூதமறப்
பாடும் அருளார் நக்கீரர்
பதங்கள் இறைஞ்சிப் பணிந்திடுவோம்
மண்டு மசுரர் படைமுறிய
மறைக ளறியாத் திருவடியான்
மணிகள் கொஞ்ச நடைபயின்று
மலர்க்கை வேலை விடுத்தவனை
வண்டி னிசையு மடியவர்கள்
வாழ்த்து மிசையுங் கேட்டுவக்க
வள்ளி மலைவாழ் எம்பெருமான்
வடிவே லவனைக் காத்திடவே. 10

### அருணகிரிநாதர்

அங்கண் நுதலோன் விழிச்சுடரி
லமரர் முனிவர் குலங்காக்க
ஆறு முகமா யவதரித்த
அண்ண லடியார் பவக்கடலை
யிங்குக் கடக்கும் புணையாக
எங்க ளிதயத் தவிசிருக்கு
மினிய தளிர்மென் மலர்ப்பாதம்
எந்தை முருகன் தனைக்காக்க
கங்கு கரையில் வெள்ளமெனக்
கணக்கில் சந்தத் திருப்புகழைக்

கந்தக் கடவுட் பதஞ்சூட்டிக்
கருணைக் கடலி னமுதருந்திப்
பொங்கு மயல்சேர் நாயேற்கும்
புயல்போ லருளைப் பொழியவரும்
புகழோன் வள்ளல் அருணகிரி
பொற்சே வடியைப் பணிவோமே. 11

## குமர குருபரர்

விண்ணை யிடிக்கும் பலகுன்றும்
விரையும் அண்ட கோடிகளும்
விளங்கு சிறுகைப் பந்தாக
விளையாட் டயர்ந்து கண்ணிமைப்பில்
எண்ணி லுயிர்கள் படைத்தளித்து
மியக்கி மறைத்துத் துடைத்துமகிழ்
எம்மான் வள்ளிப் பொன்மானுக்
கேங்கும் பெம்மான் தனைக்காக்க
மண்ணி லெவர்க்கு மறிவரிய
மாயோன் மருகன் பதத்தருளை
மன்னு மைந்தா மகவையினில்
மடுக்கும் முனிவன் வைகுண்டம்
பண்ணும் தவத்தால் வந்துதித்துப்
பக்திச் சுவைசேர் கலிவெண்பா
பாடும் குமர குருபரனின்
பதங்கள் என்றும் பணிவோமே. 12

## இராமலிங்க சுவாமிகள்; தண்டபாணி சுவாமிகள்

நானெனுஞ் செருக்கறச் சன்மார்க்க நெறியினில்
நானிலத் துயிர்கள்வாழ
நற்றமிழ்த் திருவருட் பாவருள் தேசிகன்
நாயக னிராமலிங்கக்
கோனினைப் பழனிமலைக் குருபர னருளினால்
குலவுபல வண்ண மருளும்
கோமகன் திருப்புகழ் தண்டபா ணிப்பதி
குரைகழல் வணங்கிவாழ்வோம்
தேனமுத மோகுயிலின் கானமழை யோவெனத்
திகைத்திட ஆலோலமே



தினைப்புனங் காத்திசை பொழிந்திடு குறமகள்
திருமொழி கேட்டுமகிழ
வானவர் முனிவரர் யோகியர் சித்தர்கள்
வலம்வந்து வள்ளிமலையில்
வழுத்திட வீற்றிருந் தருள்செயும் ஆறுமுக
வள்ளலைக் காக்கவென்றே. 13

## குமர குருதாச சுவாமிகள், திருமுருக கிருபானந்தவாரியார் முதலான அடியவர்

அற்றவர் போற்றிடும் ஆறுமுகன் காட்சியை
அருந்தவத் தாலடைந்தே
அகமகிழ் குமர்குரு தாசரொடு முருகனின்
அருட்டிறம் பார்பரப்பிப்
பற்றற விடுத்துதிருப் புகழினைப் பாடியும்
பணிபல புரிந்துவாழும்
பக்தர்கிரு பானந்த வாரிமுத லடியவர்
பதமலர் போற்றிசெய்வோம்
கற்றவர் உளமெனும் பொய்கையில் மலர்ந்திடும்
கமலமல ரோன்குருவினைக்
கலகல வெனக்குதித் தாடிவரு மயின்மிசை
கடுகிவரும் இளையவரசை
முற்றிய தினைப்புன வேடருக் கஞ்சியே
முதியனாய் வருவேலனை
முடிவிலா முதல்வனை மூவரும் அறிவரும்
முருகனைக் காக்கவென்றே. 14

# 2. செங்கீரைப் பருவம்

சூரிய சந்திர ரெனவிரு குழைகள்
சுழன்று சுழன்றாடச்
சொக்கர் திருவடி சுந்தரி திருமுடி
துரிய வெளியாட
மூரிவெண் முத்துப் பதக்கம் மார்பில்
முயங்கி யசைந்தாட

மூவா மறைகள் கொஞ்சும் சதங்கை
முறையி னிசைபாட
போரிடு மசுரர் பொன்றிட வாகை
புரிவே லொளியாட
புண்ணிய ரெண்ணிலர் போற்றிடக் கண்டருள்
பூவிழிக் கடையாட
ஆரியன் ராமன் மருகா முருகா
ஆடுக செங்கீரை
ஆறு முகத்தெம் வள்ளி மணாளா
ஆடுக செங்கீரை 15

மணிபண மாயிர முடியுடை சேடன்
மயங்கி யசைந்தாட
மலரவ னொடுகலை மகளும் தாழ்ந்து
மகிழ்ந்து துதிபாட
குணிலுறு முரசென மலையினி லருவி
குதித்துக் குதித்தாட
கோளொடு தாரகை மின்மினி யெனவே
கோமகன் முன்னாட
பணிசெயு மன்பர் தலந்தொறுங் கூடிப்
பரவிப் புகழ்பாட
பரந்தா மன்வரு கலுழன் வெருண்டு
பதியுடன் சேர்ந்தாட
அணிமணி நெற்றிச் சுட்டியு மாட
ஆடுக செங்கீரை
ஆறு முகத்தெம் வள்ளி மணாளா
ஆடுக செங்கீரை. 16

குடமுனி மகபதி குமர குருபரன்
கொன்றைப் பிறைசூடி
கோதில் கமலப் புத்தேள் ஔவை
குழையப் புகழ்பாடும்
தடவரை அருணை முனியொடு கீரன்
தவத்தோர் பலருக்கும்
தனிப்பெருங் குருவாய் மறைமொழி கூறும்
தலைமைப் பெருமானே



உடன்வரு தம்பிய ரொன்பது பேருடன்
ஒவ்வா மும்மலத்தி
னுருவாம் தாருகன் அரிமுகன் சூரன்
உடலம் பிளந்தழிய
அடல்வேல் விடுக்கும் கதிர்வடி வேலா
ஆடுக செங்கீரை
ஆறு முகத்தெம் வள்ளி மணாளா
ஆடுக செங்கீரை. 17

புந்தியில் வைத்துரு வேற்றிடும் ஞானிகள்
புகலும் மறைமொழியாம்
ஶ்ரீ ராடி முருகா எனநுதற்
பூசிட மனமாசைச்
சிந்திடு திருவெண் ணீற்றுப் பொடியில்
திளைத்து மகிழ்ந்தாடிச்
செவ்வாய்க் குமுதம் திரிபுர சுந்தரி
திருமுலைப் பாலொழுகக்
கந்தரு வருமர மாதரும் வாணியும்
கானத் துளமாறக்
கழலொடு தண்டை சதங்கை கிண்கிணி
கடவுண் மறைபாட
அந்தமு மாதியு மறிவரு பெரும
ஆடுக செங்கீரை
ஆறு முகத்தெம் வள்ளி மணாளா
ஆடுக செங்கீரை. 18

குருதிப் புனலொடு நிணமு மென்பும்
கூட்டிக் கனன்மூட்டி
கொள்ளை கொளும்பேய் மனத்தொடு பொறிகள்
கோடும் மலமாயை
மருகும் குடிலில் காற்றை யடைத்து
மாழ்கும் உயிர்த்திரளில்
மடியும் படியெனப் படியில் உலவிட
மருவ விடன்முறையோ
உருகும் படியனு தினமுன் புகழை
ஓதும் நன்மனமும்

ஓவா தடியார் மலரடித் தொண்டில்
ஒன்றும் நிலையருள்வாய்
அருகும் இதழியு மணிசிவ குமரா
ஆடுக செங்கீரை
ஆறு முகத்தெம் வள்ளி மணாளா
ஆடுக செங்கீரை. 19

**வேறு**

நிலையான வாழ்வினை நிதியான பேற்றினை
நிறைவான நன்மனத்தை
நிலமீது பெரியரைப் போற்றிடும் பண்பினை
நெறியான நல்லொழுக்கை
உலையாத பொருளினை உறுதியாம் அறிவினை
உயர்வான ஞானமதனை
உத்தம பக்தியை உன்கழல் நிழலினை
ஒருமையின் துதிப்பவர்க்கே
தலையாய வள்ளலாய்த் தண்ணருள் கொண்டலாய்த்
தாயினும் பரிந்துவந்து
சந்ததம் அளித்திடும் சண்முகக் கடவுளே
தனிப்பெருங் கருணையமுதே
சிலையான வன்மனச் சூரரைச் சிதைத்தவா
செங்கீரை யாடியருளே
திருமகள் செல்விவளர் வள்ளிமலை முருகனே
செங்கீரை யாடியருளே. 20

கனலினைக் கக்குசிறு விழிகளும் கடமழை
கடுகிவரு மிருகதுப்பும்
கார்முகி லுருமெனுங் குரலொடு மாயையாங்
கருவரை யுடல்தாருகன்
இனமெனப் படரரண் கிரவுஞ்ச மலையுடன்
இரண்டுறப் பிளந்தவேல!
இழிதகை காமமுத லெழுவரை பிளக்குமவர்
இதயமலர் மீதிருப்பாய்
அனமுடன் பேடையு மன்புடன் அளாவிடும்
ஆம்பலின் கள்ளருந்தி
அளியினம் தாலாட்டப் பங்கய முறங்கிடு
மணிவயல் வள்ளிமலையில்



தினம்தினம் பல்விழா கண்டுமகிழ் செல்வனே
செங்கீரை யாடியருளே
திருமகள் செல்விவளர் வள்ளிமலை முருகனே
செங்கீரை யாடியருளே. 21

விண்ணவர் வரிசையும் வித்தகர் வரிசையும்
வேள்விகள் பலவியற்றும்
வேதியர் வரிசையும் வேடுவர் வரைபடு
விளைவெலாம் கொடுவரிசையும்
தண்ணறு மலரொடு சந்தமிகு புகழினைச்
சாற்றுமடி யார்வரிசையும்
சங்கொடு மத்தளம் முரசுபே ரிகையாழ்
தாளமிசைப் போர்வரிசையும்
கண்ணுதல் இறைமுதல் சுரர்தரி சனம்பெறக்
காத்திருக் கும்வரிசையும்
கட்டுறும் பற்றறத் தாபதர் திருமுனர்
கதிபெற நீள்வரிசையும்
சென்னிநின் னடியுறத் தாழ்ந்தனர் சண்முகா
செங்கீரை யாடியருளே
திருமகள் செல்விவளர் வள்ளிமலை முருகனே
செங்கீரை யாடியருளே. 22

ஒருமையின் துதிப்பவர் இருவினை யறுத்திடும்
உளமுறு மும்மலங்கள்
ஒழித்திடும் நால்வகைக் கரணங்கள் ஓய்ந்திட
உற்றதுணை யாகுமைந்து
வருபுல னொடுக்கிடும் சரவண பவவென
வழுவாம லாறெழுத்து
மந்திரம் செபித்திட எழுவகைப் பிறவியும்
வாய்த்திட லென்றுமுண்டோ
பொருவிலெண் சித்தியும் கூடுமொன் பதுகோளும்
பொருந்தவே நலம்பயக்கும்
போற்றுமடி யார்பொருட் டவதாரம் பத்துகொள்
புயல்வணன் மகிழ்மருகனே
செருவினிற் பகையறச் செகுத்திடும் வேலவ!
செங்கீரை யாடியருளே

திருமகள் செல்விவளர் வள்ளிமலை முருகனே
செங்கீரை யாடியருளே. 23

நெஞ்சிலுறு வஞ்சமும் மிஞ்சிவரு மஞ்சையும்
நேயம தறுக்குமேழும்
நெகிழ்த்துமுயர் பக்தியைச் சிதைக்குமாங் காரமும்
நின்னடி மலர்சூடியே
தஞ்சமென் றுருகிக்கண் ணீர்விழி பெருக்கியே
சரவண பவவோமெனச்
சாற்றிடும் போதினில் சற்றேனும் நிற்குமோ
சகசமல இருளகற்றி
அஞ்சலென் றருள்செயு மன்னைதரு வேல்வந்திங்
கடற்பகை யழிக்குமன்றோ
அன்புவடி வானகுரு நாதனே அடியனேன்
அகத்துறை கருணைமுகிலே
செஞ்சடை யிறைமடியிற் கொஞ்சிவிளை யாடுவாய்
செங்கீரை யாடியருளே
திருமகள் செல்விவளர் வள்ளிமலை முருகனே
செங்கீரை யாடியருளே. 24

## 3. தாலப் பருவம்

அரக்கர் குலத்தின் வேரறுக்க
அரனார் நுதற்கண் ணருள்நோக்கில்
அயனும் மாலு மமரர்களும்
அகத்திற் களித்துப் பரவவரும்
புரக்கும் வண்ண மெழுமாறு
பொறிகள் தணிந்து சரவணமாம்
பொய்கை தவழக் குழவிகளாய்ப்
புனிதத் திருக்கார்த் திகைமாதர்
சுரக்கும் முலைப்பா லமுதூட்டித்
தோளி லணைத்துக் கடம்பநிழல்
துயிலப் பண்ணித் தாலாட்டத்
துலங்கு மலர்க்கண் விழியருளும்
தருக்கள் செழிக்கும் வள்ளிமலைத்
தலஞ்சேர் முருகா தாலேலோ



தமிழுக் குருகும் சங்கமமர்
தலைவா தாலோ தாலேலோ. 25

விண்ணைத் தழுவு மாடமிசை
விஞ்சை மகளி ரெனமாதர்
விளங்கு குழலை விரித்தாற்றி
விளைக்கும் மணஞ்சே ரகிற்புகையும்
மண்ணில் தவத்தோ ரருள்வேண்டி
மடுக்கும் வேள்வி யவிப்புகையும்
மயலா மிருளைக் கடிந்தடியார்
மருவி யிடுதூ பப்புகையும்
எண்ணி லுயர்ந்த அறச்சாலை
யெங்கு மொழியா திரவுபக
லிணையி லுணவு படைப்பதற்கே
எரிக்கு மடுப்பி லிடுபுகையும்
தண்ணார் புயலாய்ச் சூழ்வள்ளித்
தலஞ்சேர் முருகா தாலேலோ
தமிழுக் குருகுஞ் சங்கமமர்
தலைவா தாலோ தாலேலோ. 26

ஊழி வடவை யெனத்கனலை
உலக மூன்றுங் கரிந்தழிய
உம்பர் குலைய விழிகக்க
உருமுக் கணமொன் றுற்றதுபோல்
நாழிப் பொழுதில் குலவரைகள்
நடுங்க அண்ட கோளமெலாம்
நாலாந் திசையில் திரிதரவும்
நானே என்னுங் குரலெழுப்பிப்
பூழிப் படைகொண் டதிரவரும்
பொல்லா அசுரர் குலத்தலைவன்
பொக்கென் றழியத் தடமார்பில்
புகுந்து பிளக்கும் வடிவேலா!
தாழில் சரணம் அருள் வள்ளித்
தலஞ்சேர் முருகா தாலேலோ
தமிழுக் குருகுஞ் சங்கமமர்
தலைவா தாலோ தாலேலோ. 27

தனக்கென் றமர்ந்த தவக்கோலந்
தாங்கும் பழநித் திருமலையும்
தன்னை யுணராத தானவரைத்
தடிந்து வலங்கொள் திருச்செந்தூர்
கனக்கும் பரிசாய்க் குஞ்சரியைக்
கற்பு மணங்கொள் பரங்குன்றம்
கங்கைச் சடையார்க் குபதேசம்
கனிவோ டருஞ்சீ ரேரகமும்
மணக்கும் பொழில்சூழ் பழமுதிர்கா
மறவர் குறவர் மகிழ்ந்தேத்தும்
மலைகள் குன்று தோறாடல்
மருவும் படைவீ டாறோடும்
தனக்குள் உவகை தருவள்ளித்
தலஞ்சேர் முருகா தாலேலோ
தமிழுக் குருகுஞ் சங்கமமர்
தலைவா தாலோ தாலேலோ. 28

**வேறு**

குழையிற் பொருகயல் கண்மட வார்தம்
குழலிற் கொடியுடலில்
குலவும் நறுமலர் சிதறிப் பொழிமது
கொங்குட னுறுவெள்ளம்
மழைபோற் குளிர்தண் டலைமின் மலர்கள்
மடுக்கும் நறவாறும்
மடுவிற் புகுந்து கடையில் வழிந்து
மடைவாய்க் கால்வரவே
விழையும் பகடுகள் கன்றுட னாநிலை
வேட்கை யறப்பருகி
விழிகள் சிவக்கத் துள்ளி நடக்கும்
விளைவயல் மருதமெலாம்
தழையும் வள்ளி மலையுறை செல்வா
தாலோ தாலேலோ
தசரத குமரன் மருகா முருகா
தாலோ தாலேலோ. 29

பணியு மிதழியும் பனிமா மதியும்
படியு மலைமுடியும்



பலிகொள் தலையும் பறைசெய் துடியும்
பாயு மிளமானு
மணியுங் கரமு மெருக்கோ டென்பு
மலரித் தடமார்பு
மருவா யுருவா யரியய னறியா
அனலாய்ச் சுடர்மலையில்
மணியொன் றுபிறந் தறுபங் கயமாய்
மலர்ந்த செம்மலைபோல்
மருவித் தழுவு பசுங்கொடி பூத்த
மலர்க்கை தவழ்கொழுந்தே
தணிகா சலனே வள்ளிக் கணவா
தாலோ தாலேலோ
தசரத குமரன் மருகா முருகா
தாலோ தாலேலோ. 30

கடலின் மலர்ந்த கமலம் மணந்தும்
கடன்மேல் துயில்கொண்டும்
கடலைக் கடைந்தும் கடலைக் கடந்தும்
கடலில் வணமுற்று
மிடருற் றழைக்கு மதலை புரக்க
இரணியன் தனைக்கொல்ல
எரிகால் விழிக்கு மரியா வந்தும
இனிதாய்ப் பசுகாத்தல்
கடமை யெனக்கொள் கண்ணன் மருகா
கந்தா! காங்கேயா!
கலக்க மளிக்குங் காலனை யழிக்குங்
கதிர்வேற் குமரேசா!
தடமார் வள்ளி மலையுறை செல்வா
தாலோ தாலேலோ
தசரத குமரன் மருகா முருகா
தாலோ தாலேலோ. 31

உருகும் விடமார் உரகர் வேந்தன்
ஒளிர்மணி யாயிரமாய்
உயரரி சயனம் கொளவரு பாயலை
ஒருவிரன் மோதிரமாய்ச்

செருகு முமையவள் திருமுலைப் பாலைச்
செவ்வாய் ஒழுக்கிடவே
திருந்தப் பருகியும் சரவணப் பொய்கையில்
திருக்கார்த் திகைமாதர்
பெருகு தனத்தின் அமுதம் பருகியும்
பின்னும் ஞானப்பால்
பெறவே காழியில் அம்மே என்றழும்
பிள்ளைப் பெருமானே
சருகு நிகர்பவம் அறுக்கும் குறிஞ்சித்
தலைவா தாலேலோ
தசரத குமரன் மருகா முருகா
தாலோ தாலேலோ. 32

### வேறு

நாலு மறைப்பரி ஏறும் சிவகுரு
நாத தாலேலோ
நாலு முகத்தனைக் காலிற் றளையிடு
ஞானீ தாலேலோ
மாலு முவந்திரு மாத ரளித்திடு
மருகா தாலேலோ
மாய னுடன்வரு நீலி யிமையவள்
மைந்தா தாலேலோ
சீல நிறைந்தவர் கோல மனத்துறை
செல்வா தாலேலோ
சேவற் கொடியொடு தோகை யுகைத்திடு
தேவா தாலேலோ
சால தவத்தவர் சாரும் குறிஞ்சியின்
சான்றோய் தாலேலோ
சந்தத் திருப்புகழ் தந்த முனிக்கருள்
தலைவா தாலேலோ. 33

வேறு படுவினை நீறு படவரு
வேதா தாலேலோ
வேழம் தனைக்கொடு வேடர் குலமகள்
விழைவாய் தாலேலோ
கூறு படகிரி வேலை விடுமுரு
கோனே தாலேலோ



கூடு மடியவர் பாத முறவருட்
குருவே தாலேலோ
சீறு மவுணரை நூறித் துகள்புரி
சேயே தாலேலோ
சீத மதிச்சடை நாதன் தருமெழிற்
செல்வா தாலேலோ
சாறு மணந்திடு வள்ளி மலையுறை
சான்றோய் தாலேலோ
சந்தத் திருப்புகழ் தந்த முனிக்கருள்
தலைவா தாலேலோ. 34

## 4. சப்பாணிப் பருவம்

சொற்பதங் கடந்தவோர் துரியவெளி நடுநின்று
சுந்தரி கண்டுமகிழச்
சுயம்புவாய் நடமிடும் சோமசுந் தரனுதல்
சுடரிலே தோன்றிவந்து
கற்பகத் தருநிழற் கடவுளொ டவன்மனை
கலங்கியே ஓடியொளியும்
கணித்திடற் கரியபல் லமரரும் மீட்கிலாக்
கடுஞ்சிறை புகுந்துவாட
வெற்பொடு மசுரரைப் பிளந்துயிர் காத்திட
வினையெலா முற்றுமாய
வெங்கார மாமுயி ராங்கார மோய்ந்திட
வேலினை விடுத்தசெல்வ!
தற்பர அற்புதச் சண்முகக் கடவுளே
சப்பாணி கொட்டியருளே
சத்திமலை நின்றருள் தத்துவங் கடந்தவா
சப்பாணி கொட்டியருளே. 35

பிரமனுக் குரியன ஒருகோடி யண்டமாம்
பேணுதிரு மாலவற்குப்
பேசரும் ஓராயி ரங்கோடி யண்டமாம்
பித்தனென் றுலகுசொல்லு
அரனவற் கண்டங்கள் கோடானு கோடியாம்
அவற்குமேல் சதாசிவற்கோ

அளவில்பல் கோடியாம் சத்திசத் தர்க்குறும்
அண்டமோ அறையவொண்ணா
பரவெளி யிடையூச லாடுசிற் றணுவெனப்
பகரலா மிவையனைத்தும்
பாலனே எண்குணச் சீலனே நின்னுடற்
படுசிறு துகளென்னலாம்
சரவசரம் பரவவரு சண்முகக் கடவுளே
சப்பாணி கொட்டியருளே
சத்திமலை நின்றருள் தத்துவங் கடந்தவா
சப்பாணி கொட்டியருளே. 36

சத்துவக் குணமதாய்ச் சத்தியப் பொருளதாய்ச்
சாந்தவர்க் கருள்புரிவதாய்ச்
சகலர்விஞ் ஞானகலர் பிரளயா கலரெனும்
சகலரும் அறிவரியதாய்ப்
புத்தமு தனையதாய்ப் புகலரு நிலையதாய்ப்
புரையிலா மனத்துறைவதாய்ப்
புதுமையாய்ப் பழமையாய் முன்னுமாய்ப் பின்னுமாய்ப்
புந்தியி லுணர்ந்திடாத
சித்தியாய் முத்தியாய் நித்தமோர் நிலையதாய்ச்
சிவனுமாய்ச் சீவனாகிச்
சிந்திக்கும் போதெலாம் தித்திக்கு மின்பமாய்ச்
செழுஞ்சுடர் வடிவமாகிச்
சத்திக்குக் களிதரும் சண்முகக் கடவுளே
சப்பாணி கொட்டியருளே
சத்திமலை நின்றருள் தத்துவங் கடந்தவா
சப்பாணி கொட்டியருளே. 37

இருநான்கு திசைவரைகள் குலைந்தவை குலுங்கிட
எண்ணிலுயர் மாமேருவும்
ஏதமுற் றதிரவும் ஈரேழு புவனமும்
எதிரொலி கேட்டுலையவும்
அருநான்கு மறையுணர் முனிவர ரந்தண
ரதிசயித் தடிபரவவும்
அலைகடல் தம்முளே கலங்கவு மடியவ
ரறுமுகற் கழகுசெய்யும்



பெருநான்கு மூன்றெனும் தளிர்க்கர மசைந்திடப்
பேசருங் கடகஒலியின்
பேரின்ப நாதமே கேட்டன மென்றுளம்
பிடிபடக் கூத்தாடவும்
தருநான்கு நிலைக்குமேல் தவழ்ந்திடுஞ் சண்முகா
சப்பாணி கொட்டியருளே
சத்திமலை நின்றருள் தத்துவங் கடந்தவா
சப்பாணி கொட்டியருளே. 38

நசையுறு வினையினால் நலிவுறு முயிர்களை
நாடிவந் தருளவேண்டி
நகையுறச் சிரங்கவிழ்ந் தமணரை யறுத்திட
நாவினால் வாதில்வெல்ல
திசையுறு மிசைமிகு தீந்தமி ழமுதினைச்
செவியினுக் கினிதுவார்க்க
செப்பரும் தவத்தினால் காழியில் தோன்றியெம்
சிந்தையில் நின்றசெல்வ!
அசைவுற வலிக்குமென் றம்மையப் பர்தரும்
ஆடகத் தாளமேந்தும்
அறுமுகக் கடவுளே அணிமலர்க் கைகளால்
அகிலமும் இன்பமுழ்கச்
சசிமகள் கேள்வனே சங்கரி புதல்வனே
சப்பாணி கொட்டியருளே
சத்திமலை நின்றருள் தத்துவங் கடந்தவா
சப்பாணி கொட்டியருளே. 39

அமரரி னுலகினை யணிசெயுங் கற்பகத்
தணுகிடச் செல்லுமாபோ
லயராம லுயர்ந்திடு சந்தன மாவர
சகிலுடன் தேக்குவேங்கை
திமிரவளர் கழையெலாம் செறிந்திடு மடவியில்
திரிமனம் போலலைந்தே
தியங்கிடும் குரக்கினம் விறலியென் றாடிடத்
திடுமெனப் பாயுமருவி
இமிருமின் முழவென இசைத்திடக் கலைக்குலம்
இருக்குமவை போல்விளங்க

இருஞ்சுனை திகழ்மலர் விளக்கினை நிகர்த்திட
இலங்கிடும் வள்ளிமலையில்
தமரென வேடர்சூழ் குறத்தியின் நாயகா
சப்பாணி கொட்டியருளே
சத்திமலை நின்றருள் தத்துவங் கடந்தவா
சப்பாணி கொட்டியருளே. 40

அண்ணலே நினதெழில் மாணிக்க முடியொடு
மளவிடற் கருசோதியா
யலர்கதிர் மரகதச் சுட்டியு மசைந்திட
ஐயநின் பன்னிரண்டு
விண்ணவர்க் காணையிடு கரங்களிற் பொற்றொடி
வயிரமணி ஒளிவீசவும்
விளங்குவை டூரியக் குண்டலம் செவிகளில்
விரைந்தொளி பரப்பியாட
கண்ணகன் தடமார்பில் பவளமொடு நித்திலம்
கடம்புடன் நீலமாட
கயற்கணா ளணைத்திடுந் திருவரையில் புட்பகக்
கலையொடு கோமேதகந்
தண்ணொளி பரப்புபொன் னைம்படை யாடிடச்
சப்பாணி கொட்டியருளே
சத்திமலை நின்றருள் தத்துவங் கடந்தவா
சப்பாணி கொட்டியருளே. 41

ஆயிரம் பகலினு மேலதாச் சுடரினை
அகிலமெல் லாம்பரப்பி
ஆரிருள் அழித்திடு மொருமுக மடியவ
ரகத்திருள் வினைகளெல்லாம்
போயிட மறுவிலா மதியெனத் திகழொளிப்
போதலர் முகமுமொன்றாம்
புரமெரித் தான்திருச் செவியினில் பிரணவப்
பொருள்சொலோர் ஞானமுகமே
மாயிரு படைகொடு வருபகை யழித்தமரர்
மாதவரைக் காக்குமுகமும்
மான்மகள் வள்ளியை மணந்திடு முகத்தொடு
மயிலினி லாடுமுகமாத்



தாயினுங் கருணைமிகு சண்முகக் கடவுளே
சப்பாணி கொட்டியருளே
சத்திமலை நின்றருள் தத்துவங் கடந்தவா
சப்பாணி கொட்டியருளே. 42

**வேறு**

ஆல மெடுத்தமு தாகப் பருகிய
அரனார் குமரோனே!
ஆல மிசைத்திடு மன்னை குறமக
ளாக மிசைந்தோனே!
ஓல மிடுமர மாதர் பதியொடு
முறைவாழ் வளித்தோனே!
ஓல மிடவரு சூர ருடலற
ஒளிர்வேல் விடுத்தோனே!
நீல இமையவள் சால உவந்திடு
நேயா முருகோனே
நீல மயின்மிசை ஞாலம் வலம்வரு
நிமலா காங்கேயா
கோல வடிவினைக் காண அருள்வாய்
கொட்டுக சப்பாணி
கொள்ளை கொளுமெழில் வள்ளி மணாளா
கொட்டுக சப்பாணி. 43

நாதர் முடியினை நாடும் பணவிரி
நாகந் துயருறவே
நாளும் வணமிகு தோகை மிசைவரு
நாத முருகேசா
ஏத முறுமடி யாரின் மனவிருள்
என்றும் பொன்றிடவே
ஏக னநேக னெனவரு சுடரா
யிதய மமர்வோனே!
சீத மதிச்சடை தாதை வரப்புயம்
திளைத்து விளையாடும்
தெய்வப் பிடிமகிழ் செய்யக் களிறெனும்
தேவே குருநாதா
கோதை யுளங்கவர் மாயன் மருகா
கொட்டுக சப்பாணி

கொள்ளை கொளுமெழில் வள்ளி மணாளா
கொட்டுக சப்பாணி 44

## 5. முத்தப் பருவம்

கரும்பின் கழையின் விளைமுத்தும்
கமுகு கதலி தருமுத்தும்
களிற்றே னக்கோ டுதிர்முத்தும்
கயலில் புயலில் வருமுத்தும்
சுரும்பார் கமலக் குளிர்முத்தும்
துலங்கு சங்க மீன்முத்தும்
சொல்லின் விலைபோ மொளிகுறையும்
சோர்த லழித லிவைக்குண்டு
விரும்பு மடியார்க் கொளிவழங்கி
வேத னரன்மால் மூவரியல்
விதித்துப் பொய்கை சரவணத்தில்
விளங்கு மாறு கமலமலர்
அரும்பும் முத்திற் கிணையுண்டோ
அழகா முத்தந் தந்தருளே
அயில்வே லிறையே வள்ளிமலை
அரசே முத்தந் தந்தருளே. 45

உரக மளிக்கு மணித்திரளை
உழையுங் கலையுந் தேமாவி
னுயர்செந் தளிரென் றவைநாவா
லுற்றுத் தடவப் பிணைநகைக்கும்
பரவுந் தேமாந் தளிரதனைப்
பார்க்குங் கடுவன் தீயென்று
பாய்ந்து விலகி மந்தியினைப்
பரிந்து தழுவி யூடலற
விரவும் நிலைக்கண் டஞ்சுகமும்
விளித்துத் துணையின் முகங்கொஞ்சும்
வெய்யோன் கதிருட் புகவரிதாய்
விண்ணார் பொழில்சூழ் தடங்குன்றில்
அரவம் ஒளிக்க மயிலேறும்
அழகா முத்தந் தந்தருளே.



அயில்வே லிறையே வள்ளிமலை
அரசே முத்தந் தந்தருளே. 46

மயலார் புவிவாழ் வறவெறுத்து
மனத்தார் மூன்று பற்றொழித்து
மாறாத் திடத்தின் உயரருணை
மாகந் தழுவு கோபுரத்தின்
புயலார் குடுமி யிருந்துவிழும்
புனிதன் அருண கிரிக்கன்று
புதல்வா சும்மா இருவென்றே
புகலும் குமுதத் திருவாயால்
கயலார் விழியாள் குறமகளின்
கரத்தால் வழங்கு தேன்தினைமா
கனிந்து சுவைத்துப் பாராட்டிக்
களிக்குங் கமலத் திருவாயால்
அயலார் அவுணர் குலமழிக்கும்
அழகா முத்தந் தந்தருளே
அயில்வே லிறையே வள்ளிமலை
அரசே முத்தந் தந்தருளே. 47

### வேறு

கடலு முலைய ககன மலைய
கதமு மதமு முற்றெதிர்
கரிய அவுணர் முரிய சரிய
கடுக வேலை விட்டவா!
உடலு வினையி லுழலு மடிய
ருருகிப் பெருகிப் பாடவே
உழையின் சிகியின் மழையி னருளை
உதவ உளத்தில் நின்றவா!
வடலூர் வள்ள லிராம லிங்கர்
வழங்கும் கவியைக் கேட்டுளம்
வலமும் கருணை நலமும் புரிய
வருமெம் ஞான வள்ளலே!
குடலின் முடுகு பிறவி யறுக்குங்
குழவி முத்தந் தருகவே
குறவர் மகளி னுறவின் மகிழுங்
குருவே முத்தந் தருகவே. 48

இதழி நதியை இளைய மதியை
இயைய முடியிற் சூடுவார்
இமய னுதவ மகளை யுடலி
னிடமே யருளு மிறையனார்
முதலு முடிவு மறிய வரிய
முதல்வன் தொழுது கேட்கவே
முறையின் செவியில் ஞானம் புகல
முறுவ லிக்கும் வாயினால்
பதமும் மறைகள் பணியு நிலையும்
படியு மாலு பாவையர்
பதும முகையின் கலச அமுதம்
பருக மலரும் வாயினால்
குதலை தமிழும் ஒழுகு மிதழின்
குழவி முத்தந் தருகவே
குறவர் மகளி னுறவின் மகிழுங்
குருவே முத்தந் தருகவே. 49

கயிலை நாதன் நுதலி னருளுங்
கந்தக் கடவுள் சண்முகா!
காணும் மலைகள் யாவும் நினது
கழலின் கருணை யல்லவா
மயிலந் தணிகை கழுகு சுருளி
மருதம் சென்னி மலையுடன்
மதியு முரசு திருச்செங் கோடு
மலைவி ராலி மலையொடும்
வயிர வேலன் பால முருகன்
வாழும் ரத்ன கிரிதமிழ்
வளர்க்கு மடியர் குன்றக் குடியும்
வள்ளி மலையும் நின்றருள்
குயிலும் மொழியைப் பயிலு மிதழின்
குழவி முத்தந் தருகவே
குறவர் மகளி னுறவின் மகிழும்
குருவே முத்தந் தருகவே. 50

**வேறு**

வண்ண விசித்திர எண்ண பவித்திர
வான மடைவிரி கலபமொடு



வாகைக் களிமிக ஓகைச் செருக்கொடு
வாழு முடியினிற் சூடிகையும்
விண்ண மரருளம் நண்ணு பகைத்துயர்
வீட்டக் குதிசெய நடமாடி
வீழுங் கிரிகுல மேழு மிதிபட
வேக முடன்வரு மயின்மீதே
கண்ண னுளமுத லெண்ணி லிறையவர்
கழலைத் தொழுதிட வருவோனே
கந்த னெனத்திருக் கையி லெடுத்தணை
கனகக் கொடிதரு குமரோனே
தண்ணம் பொழில்வளர் வள்ளி மலையுறை
தலைவா முத்தந் தந்தருளே
சங்கர னைப்பொரு புங்கவ னேபசுந்
தமிழா முத்தந் தந்தருளே. 51

நீலி பரிபுரை சூலி யிமையவள்
நெடுமால் தங்கை யபிராமி
நீற்றின் ஒளிமதி கீற்றைப் புனைந்திடு
நின்மலர் நெஞ்சில் நிலைத்திடுவாள்
மோலி யணிந்துதென் மதுரை புரந்தவள்
முத்தமி ழன்னை மீனாட்சி
முத்த மளித்துய ருச்சி தைவர
மும்முலை யமுத முண்வாயால்
வேலின் விளைவிற லார்சீ ரலைவாய்
வேண்டும் மூங்கைப் பிள்ளைகலி
வெண்பா நவில்கெனும் கொவ்வைக் கனியினை
வெல்லும் பவளத் திருவாயால்
சாலி விளைவயல் வள்ளி மலையுறை
தலைவா முத்தந் தந்தருளே
சங்க ரனைப்பொரு புங்கவ னேபசுந்
தமிழா முத்தந் தந்தருளே. 52

**வேறு**

வனத்திற் பாயா வேங்கை யுதிர்க்கும்
வண்டார் மலரெல்லாம்
வதியு மறையை வலிவேங் கைகண்
வளரு மெனவஞ்சிச்

சினத்தின் திருகும் களிற்றைப் புயலாய்த்
திரிய வுணர்மயிலோ
சிறகை விரித்துக் களியால் துள்ளும்
சிகரந் திகழ்பொற்பார்
புனத்தில் கிள்ளை பூவை விரட்டும்
புனிதத் தோகையவள்
புகலும் மொழியை விழையுங் களிறே
புவனேஸ் வரிகுமரா
முனத்தி லடியார்க் கருளும் முதல்வா
முத்தந் தந்தருளே
முத்தி நலந்தரு சத்திப் பொருப்பா
முத்தந் தந்தருளே. 53

அடியரும் மூவர் அமரர் மறைகள்
அணிசெய் திருவடியும்
அரதன மேகலை பீதாம் பரமும்
அசைந்தொளிர் திருவரையும்
கடிமலர் கடம்பம் நவமணி மாலை
கவினுறு திருமார்பும்
காத்தல் முதலைந் தொழில்செய் தணிபெறு
கதிர்வேற் கரமலர்கள்
துடியிடை வள்ளி சசிமகள் தழுவும்
சூரழி திருத்தோள்கள்
துலங்குயிர்த் திரளைப் புரக்குங் கண்கள்
தூமதி முகமாறு
முடிமணி யொளிரும் முருகா முதல்வா
முத்தந் தந்தருளே
முத்தி நலந்தரு சத்திப் பொருப்பா
முத்தந் தந்தருளே. 54

## 6. வருகைப் பருவம்

இனிக்கும் தமிழின் மணிப்பரல்கள்
இசைக்கும் கிளர்பொற் கிண்கிணியும்
இமைக்குங் கதிர்விட் டெண்டிசையும்
இலங்கக் கலிக்கும் சிலம்பினொடு



குனிக்கும் தண்டை சதங்கையிவை
கோயில் ஓவா திருந்தாடும்
கூத்தன் கூத்தின் இசைக்கொப்பக்
குலுங்கும் கஞ்சக் கருவியெனப்
பனிக்கும் மலர்ச்சீ றடிபெயர்த்துப்
பவனி வருக அடியேங்கள்
பவநோய் தீர்க்கத் தோகையின்மேல்
பரிந்து வருக பொதிகையமர்
முனிக்கும் அருண கிரிக்குமருள்
முதல்வா வருக வருகவே
மூலப் பொருளே வள்ளிமலை
முருகா வருக வருகவே. 55

வாதிட் டுழக்கித் தமக்குள்ளே
வருந்தி வாழ்நாள் வீண்போக்கி
வறிதே கழிக்கும் பல்சமய
வாதி பலரும் இடுமொலிபோல்
கோதிக் குவளை மலர்சூடும்
குறிய குழலார் கடைசியரின்
கூட்டம் விளைநெல் லரியொலியும்
குடக்கள் மடுத்துக் களிமள்ளர்
சாதி எருமைக் கடாவிடுத்துச்
சாரும் களத்தில் எழுப்பொலியும்
சாலி நிறைத்த பொதிவண்டி
சாற்றும் ஒலியும் கடலொலிபோல்
மோதித் திகழும் குன்றமர்ந்த
முதல்வா வருக வருகவே
மூலப் பொருளே வள்ளிமலை
முருகா வருக வருகவே. 56

அலைக்கும் சலதி யெழுந்தொளிரும்
அலர்மேன் மங்கை மஞ்சனநீ
ராட்டி மடிமேன் கிடத்திமுகை
யமுத மூட்டிக் குழல்திருத்திச்
சிலைக்கும் விழிக்கு மையெழுதிச்
செழிக்கும் தடமார் பணிவிளக்கிச்
செந்தா மரைநேர் சீறடிக்குச்
செம்பஞ் சூட்டி மெல்லிடையில்

இலைக்கும் வண்ணப் பட்டுடுத்தி
இனிக்கும் கனிவாய் முத்தமளித்
திதயங் களிக்க வளர்த்தெடுத்த
எழிலார் வள்ளி யம்மைதிரு
முலைக்குக் கனிந்து நினைந்துவரு
முதல்வா வருக வருகவே
மூலப் பொருளே வள்ளிமலை
முருகா வருக வருகவே. 57

கண்ணே கண்ணின் றொளிர்மணியே
கருத்தே கருத்தி னுறுபயனே
கடலே கடலின் எழுமமுதே
கனியே கனிச்சாற் றின்சுவையே
பண்ணே பண்ணின் மிகுமிசையே
பரமே பரத்தின் மேற்பரமே
பசுவே பசுவாட் கொளும்பதியே
பதும பீடத் தவன்மாலும்
விண்ணோ ரிடையும் காணரிய
விருந்தே அடிய ருளக்கமலம்
விரைந்தே யமர்ந்து வேண்டுவரம்
விளைகற் பகமே மூவருக்கும்
முன்னே விளங்கி யருள்புரியும்
முதல்வா வருக வருகவே
மூலப் பொருளே வள்ளிமலை
முருகா வருக வருகவே. 58

**வேறு**

பரிநரி யாக்கியும் பணியணி தேக்கியும்
பலிபெறத் திரிந்தலைந்தும்
பத்தராய்ப் பெற்றவர் பித்தனே என்றுரை
பகர்ந்திட நாடிவந்தும்
வரியுரி சுற்றியும் சிரசிலும் இடத்திலும்
வனிதையர்க் குரிமைதந்தும்
வந்தவர்க் கொருவீடு வழங்கிநன் காட்டினில்
வாழ்ந்திடு மொருவனீன்ற



கரிமுகப் பெரியனின் பின்வரும் சிறுவனே
கலியுகம் காக்கவந்த
கண்கண்ட தெய்வமே! கற்றவ ருளத்தமா
கடம்பமார் கந்தவேலே!
முரிமல வினையறுத் தடியருக் கருள்செய்ய
முளரியசைந் திடவருகவே
முத்தியை யுதவுபத சுத்தசத் துவஞான
முருகசர வணவருகவே. 59

கற்பகத் தருநிழற் கீழிருந் தரசுசெய்
கனகநாட் டொருதேவனும்
கண்ணுதல் திருவடிப் பணியினைச் சிரங்கொளும்
கனநிதிக் கிழவனாரும்
மற்புயத் திண்டிறல் காருடல் அந்தகன்
மதிரவி யாகுமமரர்
மறுகியோர் வீடின்றிச் சூர்சிறைப் பட்டுளம்
மாழ்கிடும் போதுவந்து
வெற்பினைப் பொடித்தெதிர் அற்பரா மவுணரை
வீழ்த்திட வேலைவிட்டே
விண்ணவர்க் களிசெயும் சண்முகக் கடவுளே!
வேண்டினார் வள்ளிமலையில்
முற்படப் பட்டவினை முற்றறுத் திடவல
முளரியசைந் திடவருகவே
முத்தியை யுதவுபத சுத்தசத் துவஞான
முருகசர வணவருகவே. 60

எழுவகை யாய்த்தொடர் எண்ணிலாம் பிறவியாம்
இருங்கட லழுந்துபிணியை
எரிதலைச் சூலமும் குருதிதோய்ப் பாசமும்
இருணிறக் கடாவூர்தியும்
வழுவிலா தறக்கடவுள் கொடுவரும் போதினில்
வாய்க்குமெய் அவத்தையதனை
வருபவத் துயரினு மொருமுத லெனப்படியும்
வல்வினையை மலமாசினைக்
கழுவிடும் புனிதமுறச் செய்திடும் உறுபிணி
கரைத்திடும் பேறனைத்தும்

களிசெயக் கூடுமோம் சரவண பவவெனக்
கனிவுட னணியுநீறே
முழுமதி முகத்து வெண்ணீற்றொளி பெருகசிறு
முளரியசைந் திடவருகவே
முத்தியை யுதவுபத சுத்தசத் துவஞான
முருகசர வணவருகவே. 61

கயலினை வென்றிரு குழையினைத் தாக்கிமீள்
கஞ்சநிகர் நெடுங்கண்களைக்
கச்செறிந் திருவரை எனவரை வலித்திடும்
கடலமுத கனதனத்தைப்
புயலினை யறலினைப் பழித்துத் திரண்டிடும்
பூக்கமழ் அளகமதனைப்
போற்றிடும் குலத்தொழில் புரிகொடு வில்லெனப்
பொற்புறும் பிறைநெற்றியை
உயவொரு புகலிலை யென்றுள மொடிந்துவீழ்
ஒண்மணித் திகழ்மினிடையை
உயர்வருள் அடியையுறு நம்பியர் தன்மகளை
உளநினைந் துருகும்வேளே
முயலகன் மேனட மிடுமரன் மகிழ்சுத
முளரியசைந் திடவருகவே
முத்தியை யுதவுபத சுத்தசத் துவஞான
முருகசர வணவருகவே. 62

**வேறு**

நிலவு கிரண தரள வரிசை
நிகர நகையன் வருகவே
நிதமு மடிய ரிசையின் மகிழும்
நிறையு மதியன் வருகவே
அலகி லுயிர்க ளுருவில் மனதில்
அருளும் விழியன் வருகவே
அதிர எதிரும் பகையைச் சிதறும்
அமைய புயத்தன் வருகவே
கலக மிடுபல் சமயத் தவரும்
கருதும் ஒருவன் வருகவே
கழலைப் பணியக் கதியை யுதவு
கமல சரணன் வருகவே



அலரி னிலகு திருவி னினிய
அரிவை கொழுநன் வருகவே
அதிப முருக உதய கதிர
அமல வருக வருகவே. 63

நறவு பொழியு நளின முகங்கொள்
நதிபுத் திரனே வருகவே
நமனை யுதைத்துச் சிறுவன் புரக்கும்
நடனன் குமரன் வருகவே
துறவு மனத்தின் அறவர் புகழும்
துலங்கு கழலன் வருகவே
துனியு மிடியும் பகையும் வரையும்
துளைக்கு மயிலன் வருகவே
நிறமு மவிரும் சிறகு விரியும்
நெடிய மயிலன் வருகவே
நியம முனிவர் துதிசித் தருக்கு
நெகிழு மருளன் வருகவே
அறமும் மறமும் அணியுங் குறவர்
அரிவை மகிழ்நன் வருகவே
அதிப முருக உதய கதிர
அமல வருக வருகவே. 64

## 7. அம்புலிப் பருவம்

பொங்குதிரை தவழாழி மீதெழுந் துலவலால்
புரமெரித் தான்சுடர்க்கட்
பொறியென விளங்கலால் நெறியினை வகுத்திந்தப்
புவனத்தை வலம்வருதலால்
செங்குமுத வாய்மலர்ந் திக்கொழு கிடப்பிறந்து
செறியிருள் விலக்குவதனால்
திகழுயிர் தமையுணர்ந் தின்புற ஒளியினைத்
திசையெலாம் பரப்பிவரலால்
தங்கலைக் காதலித் தவருளம் களிப்புறச்
சார்ந்தமுத மழைபொழிதலால்
தனைவிழைந் தவர்க்கினிது தண்ணளி புரத்தலால்
தண்மதி குகனிகர்த்தாய்

பண்ணியை சந்தமும் பாடினார்க் கின்பமும்
பதியுணர் மெய்ஞ்ஞானமும்
பத்தியும் தருதிருப் புகழினைப் பாடிடப்
பரிந்துவந் தருணகிரியின்
புண்ணியை குட்டநோய் போக்கிமெய் யெழிலருட்
புரிந்ததை யறிவையலையோ
புத்திவரு கிலாச்சிறு போதினில் யாவரும்
போற்றிடும் ஞானகுருவாய்ப்
பண்ணிய தவத்தினால் வள்ளலார் முன்தோன்றிப்
பலகலையு மருளினான்காண்
பவப்பிணி தீவினைக ளகன்றுநற் கலையெலாம்
பதந்தொழப் பெறுவையின்னே
எண்ணிவந் தருள்பெற அழைத்தவிக் குழவியொடும்
அம்புலீ யாடவாவே
அண்டரும் பணிசெயும் வள்ளிமலை முருகனொடும்
அம்புலீ யாடவாவே. 70

மிக்கபெரு வேள்வியில் தொக்கமரர் கூடவையில்
மேன்மைகெட் டிழியவன்று
மீளாத வாறுதக் கன்தந்த சாபமே
மீண்டிட வுனையழைத்தான்
எக்கணமும் முருகனே என்றுவிழி நீர்சிந்தி
ஏத்திடும் முருகம்மையின்
இன்குரல் கேட்டுமயில் மீதேறி யருள்செய
எளிவந்த எங்கள்பெம்மான்
நக்கீர னைப்பெரும் பூதத்தின் சிறைமீட்ட
நாயகன் நின்னையருள
நாடினன் ஆடிட நயந்தனன் இக்கணம்
நல்லமய மோடிவருக
அக்கரமு மாயதன் பொருளுமாம் குழவியொடும்
அம்புலீ யாடவாவே
அண்டரும் பணிசெயும் வள்ளிமலை முருகனொடும்
அம்புலீ யாடவாவே. 71

கூற்றெனச் சினந்தனல் கொப்புளிக் கக்கடுகிக்
குன்றினைப் பிளந்துபூதக்



குடரினைச் சரித்துதிரக் குளத்தினின் குதித்தெழு
கூரிலைக் கதிர்வேலனின்
சீற்றமே மூண்டுகண் சிவப்பேறு முன்னரே
திங்களே வரவுய்தியால்
திகழுயிர் படைக்குமோர் செருக்கினால் மதியாத
திசைமுகன் தலைகள்நான்கும்
ஏற்றிடும் குட்டினை இருகால் விலங்கினை
இருண்மிகு சிறைப்பாட்டினை
எண்ணிலை யாயினுனை ஏற்பவர் யாருளர்
இளையனென் றிருந்திடாதே
ஆற்றணி சடையனார் அருளுமிக் குழவியொடும்
அம்புலீ யாடவாவே
அண்டரும் பணிசெயும் வள்ளிமலை முருகனொடும்
அம்புலீ யாடவாவே. 72

ஒருவிர லசைத்திடின் உடுத்திரள் குலைந்திடும்
ஒருவிழி சினந்துநோக்கின்
ஊழியே விளைந்திடும் ஒருதோள் உயர்த்திடின்
ஊறுசெய் அவுணர்மாய்வர்
திருவடி பெயர்த்திடின் அண்டபகி ரண்டமும்
திரிபுற நிலைமாறிடும்
திங்களே சிறுவனெனத் தாமதித் திடேலினிச்
செப்புதற் கியாதுமில்லை
கருவுறு முயிர்முதல் ககனநாட் டவர்வரை
கதிபெறக் காப்பனிவனே
கழலொலித் திடஓடி விளையாட நினைத்துனைக்
கரமலர் காட்டிநின்றான்
அருவுரு வாகியெம் மகத்துறை குழவியொடும்
அம்புலீ யாடவாவே
அண்டரும் பணிசெயும் வள்ளிமலை முருகனொடும்
அம்புலீ யாடவாவே. 73

காலனை யழித்தவன் காமனை யெரித்தவன்
கருதாது வேள்விசெய்த
கன்மனத் தக்கனின் புன்மையை யொழித்தவன்
கபாலமே யாரமுடையான்

சூலமுடை யானிடம் வரம்மிகப் பெற்றவன்
சூரனின் ஆணவத்தைச்
சூழ்ச்சியைக் குலத்தினை யறுத்தவன் அச்சிவன்
சுடரிலே வந்தமுருகன்
வேலினை விடுத்தனன் என்றுணர்ந் தாயினும்
விளையாட வருகநீயே
வெறியாடு குறவரின் தலைவனும் மருகனும்
வீரனு மாவனிவனே
ஆலமர் கடவுளின் அகமகிழ் குழவியொடும்
அம்புலீ யாடவாவே
அண்டரும் பணிசெயும் வள்ளிமலை முருகனொடும்
அம்புலீ யாடவாவே. 74

## 8. சிறுபறைப் பருவம்

கோங்குமுதிர் செங்காந்தட் குலைதவழ் வனமுனது
குலவுகரம் பன்னிரண்டும்
கொடுமுடியி லேறிநின் றுலகினை யொளியினால்
குளித்திடச் செய்யுமதியோ
தேங்கெழில் முகத்தருள் செப்பிடும் அரியதாய்த்
திரண்டறை குழியினுள்ளே
தேனென இனிக்கும்நீர்ச் சுனையினில் ஆம்பலோ
தெள்ளமுத வாய்நிகர்க்கும்
ஆங்கலர்ந் திதழ்விரிய அளிமுரல் பங்கயம்
அடிமலர் முடியில்சூட்டும்
அணிமண மிடைபொழில் அண்ணலுன் இருபுறமும்
அமர்வள்ளி தெய்வயானை
தீங்கனிக ளெனவளந் திகழ்வள்ளி மலைகந்த
சிறுபறை முழக்கியருளே
திரையலைய வருநீவா நதியுலவு முருகனே
சிறுபறை முழக்கியருளே. 75

வண்டிருந் துழக்கிநற வுண்டொழு கூற்றிடும்
வனமலர்ச் சுமைக்கொடிந்து
வாழ்கில மெனஒசிந் தற்றுவீழ் துடியிடை
வனிதையர் நெறிகுழற்குக்



கொண்டிருந் தூட்டகில் நறும்புகை வானவர்
கூடிமகிழ் அரமகளிரின்
குவளைநீள் விழித்திரை மறைத்திடத் தமக்குளே
குறைவுபட் டூடிநிற்க
அண்டரும் தத்தமுள் மாறுபட் டயலவர்
அகத்தினிற் சென்று சென்றே
அலமரச் செய்திட விண்டலம் பிளந்துமேல்
அமர்ந்தெழு மாடங்களும்
திண்டிறல் மாளிகையும் பொலிவள்ளி மலைகந்த
சிறுபறை முழக்கியருளே
திரையலைய வருநீவா நதியுலவு முருகனே
சிறுபறை முழக்கியருளே. 76

மேலோடு பரிதிமுதல் விண்ணவர் விஞ்சையர்
மிகுவேள்வி புரிமாதவர்
மேயமுத் தொழில்செயு மூவரும் இயக்கரும்
மேவுகணப் பூதரோடு
நூலோடு கலைபலவும் அறிந்துணர் யோகியர்
நுண்ணறிவு பெறுமறிஞரும்
நோன்பினால் அட்டமா சித்திகொள் சித்தரும்
நுழைபுல மிகுதர்க்கரும்
சாலோக சாமீப சாரூப நிலைக்குமேல்
சாயுச்ய பதவிபெற்றும்
சாற்றுதற் கரியதாய்த் தற்பரஞ் சுடரதாய்ச்
சரணடைந் தார்க்கெளியதாம்
சேலோடு முறழ்கணாள் வள்ளிமண வாளனே
சிறுபறை முழக்கியருளே
திரையலைய வருநீவா நதியுலவு முருகனே
சிறுபறை முழக்கியருளே. 77

விந்தமும் இமயமும் பெருமையை யிழந்துளம்
வெள்கிநா ணடையுமாறு
விடிவுபல நிகழ்தர வீற்றிருந் தருள்தரு
வேலனே வள்ளிமலையில்
வந்தனை செய்தலங் காரமும் திருப்புகழ்
வாய்க்குமனு பூதியுடனே

வள்ளலார் வழங்கிய திருவருட் பாக்களும்
வண்டமிழ் நால்வர்பாடும்
சந்தமார் தேவார வாசகம் பாடிடும்
தனித்தனி யடியர்கூட்டம்
சார்ந்துசித் திரைமுதல் படிவிழாச் செய்வரது
சாற்றுதற் கரியதாகும்
சிந்தையில் நிற்குமப் பெருவிழா முடிக்கெனச்
சிறுபறை முழக்கியருளே
திரையலைய வருநீவா நதியுலவு முருகனே
சிறுபறை முழக்கியருளே. 78

அமுதமுண் டுவந்திடு மமரர்கள் சூரனின்
ஆரிருள் சிறையில்வாடி
அவர்தரு நறவினை யுண்டிளைத் தயர்ந்திடும்
அல்லலைக் கண்டுகருணை
தமதுபின் தோன்றுநவ வீரரைச் சுரருடன்
தானையில் அணிவகுத்துத்
தலைமைகொள் சேனாதி பதியென வந்தநாள்
தந்தபோர் முரசமெனவும்
இமையினில் பகையொழித் திறமயி லூர்ந்துதான்
ஏற்றிடும் கொடியதாக
இருசிறை வாரணம் கூவியே வாகையை
இயம்புமோர் வெற்றிமுரசாய்த்
திமுதிமெனக் குறமகளைச் சேர்மண முரசெனச்
சிறுபறை முழக்கியருளே
திரையலைய வருநீவா நதியுலவு முருகனே
சிறுபறை முழக்கியருளே. 79

**வேறு**

எரிமுத் தலைகோல் கொடுவாள் கணையொடு
எறியும் ஈட்டியுடன்
எதிர்வரு பகையழி உருள்தடி கதிர்கால்
இலைவேல் சம்மட்டி
புரிகொலை படையொடு திரள்வய வேடர்
புதர்மறை அரிகரடி
புலியொடு களிற்றினை அகப்பட இசைத்துப்
புறப்படு பறையொலிபோல்



சரியை கிரியை எனுமிரு படிமேல்
தவநிலை யோகமெனும்
சலனமில் ஒருமனப் புலன்முத லொடுக்கும்
தகுதிகொள் சித்தருக்கே
முரிவுறு வினையற ஞானம தருள்குக
முழக்குக சிறுபறையே
முதியவ னெனவள் ளிக்கனி விழைவேள்
முழக்குக சிறுபறையே. 80

கறையிருள் சீக்கும் கதிரென விளங்கும்
கற்றை மணிக்கால்மேல்
கனக மிழைத்திடை மரகதக் கற்கள்
காந்தி பரப்பிருக்கும்
நிறையுவி தானமும் நித்திலச் சரங்கள்
நிலவுமிழ் மணமேடை
நெடுநாள் செய்தவம் கூடிட வருமா
நிதிபோ லுளமகிழ்வாள்
சிறைவீ டுறுசுர பதிதன் மகளாம்
தெய்வ யானைமணம்
செய்திடும் அமயம் பல்லியம் குமுமிச்
செய்திடும் ஒலியெனவே
முறையாய்க் கரமலர் ஓச்சுக வேலவ
முழக்குக சிறுபறையே
முதியவ னெனவள் ளிக்கனி விழைவேள்
முழக்குக சிறுபறையே. 81

வேதியர் யோகியர் ஆதியர் ஓதுநல்
வேத முழக்கெனவும்
வித்தகர் புலவர் முத்தமி ழின்கவி
விளம்பு முழக்கெனவும்
தாதியர் சூழ்வர நங்கையர் மங்கலஞ்
சாற்று முழக்கெனவும்
தாள மிசைந்தடி யார்குழு மிப்புகழ்
சந்த முழக்கெனவும்
ஓதிம மும்குரு கும்மட நாரையும்
ஓங்கு முழக்கெனவும்

ஓகையின் காலையும் மாலையும் பூசையில்
ஓது முழக்கெனவும்
ஓதி மகிழ்வுற போத மளிகுக
முழக்குக சிறுபறையே
முதியவ னெனவள் ளிக்கனி விழைவேள்
முழக்குக சிறுபறையே. 82

மன்மத னோடவன் பத்தினி யாள்ரதி
மங்கையும் சேர்ந்தாட
மாம னெனுந்திரு மாலுடன் பங்கய
மலரவ ளுடனாட
இன்னிசை தேர்ந்திடு தும்புரு நாரதர்
இணைந்து மகிழ்ந்தாட
இந்திர மாசபை ஊர்வசி ரம்பையும்
இயைந்து நடமாட
தன்னை மறந்தடி யார்குழு சந்நிதி
தமிழிசை கேட்டாட
தந்தி முகத்தனும் தொந்தி குலுங்கிடத்
தாம்தீம் என்றாட
முன்னவன் பின்னவன் என்னரு முருகா
முழக்குக சிறுபறையே
முதியவ னெனவள் ளிக்கனி விழைவேள்
முழக்குக சிறுபறையே. 83

நாத மிசைத்திடு துடியொடு மங்கிமேல்
நாடி யெழுந்தாட
நாகமும் கங்கைமுந் நாட்பிறை கொன்றையும்
நாலுஞ் சடையோடு
மோத விரிந்துதிண் டோளில் புரண்டிட
முற்று மழித்தவராம்
முனிபதஞ் சலியும் வியாக்கிர பாதரும்
முகமலர் கண்டாட
ஓது யுகாந்தம் உற்றிட ஏழ்கடல்
ஊழிப் பிரளயமாய்
ஓங்கிடச் சங்கரன் ஒன்றி யொடுக்கிட
ஒருகால் ஊர்ந்தாட



மூதனை மகிழும் நந்தி முழக்கென
முழக்குக சிறுபறையே
முதியவ னெனவள் ளிக்கனி விழைவேள்
முழக்குக சிறுபறையே. 84

## 9. சிற்றிற் பருவம்

கரிவெண் கோட்டி னடுப்பமைத்துக்
கமுகம் பாளை செப்பாக்கிக்
கதிர்கால் மணிகள் எரியூட்டிக்
காய்தெங் கிளநீர் உலையேற்றிச்
சரியும் கழையின் முத்தரிசி
சமைத்துத் தேனில் தேமாவின்
சாற்றில் கதலி பலாச்சுளையும்
சாரக் கலந்து கறியாக்கி
விரியும் தாழை மடலிட்டு
விருந்து படைத்து விளையாடும்
விளங்கா யிழையார் மணற்சிற்றில்
வியன்மூ வுலகும் தருமுனக்குச்
சிரிக்கும் பேதைச் செயலெனினும்
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
சீரார் வள்ளி மலைமுருகா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. 85

எந்தை சிவனார் திருத்தோளும்
இமயச் சிகரக் கொடுமுடியும்
இலகும் பச்சைத் திருமேனி
எழிலார் உமையின் தடக்கையும்
கந்தம் கமழும் சரவணத்தின்
கமலத் தொட்டில் இதழ்த்தடமும்
களிகொள் அமுத மூட்டியுயர்
கதிசால் அறுகார்த் திகைமாதர்
முந்தும் குரும்பை யிளமார்பும்
முருகா எனுநின் திருப்பெயரில்
மூழ்கித் திளைத்துத் தெளிவுபெறும்
முனிவ ருளத்தும் படிந்துமயல்

சிந்தும் மலர்ச்சே வடிவருந்தச்
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
சீரார் வள்ளி மலைமுருகா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. 86

வெள்ளைக் களிற்றி னூர்ந்துவரும்
வேந்தன் நினக்கோர் பரிசாக
விளங்குங் கொடிமின் னிடையாளை
விழையும் படிக்குத் தருவனெனத்
துள்ளும் களிப்பில் அரமகளிர்
துயில ஒருவீ டளித்தனையோ
துறவோர் நின்றன் திருவடியைச்
சொல்லி லிசைக்க வீடளித்தாய்
விள்ளுஞ் சுவைசேர் கிள்ளைமொழி
விளம்பும் ஆறு தாரகைக்கு
வீடும் அளித்தாய் நினக்கெமது
வீடும் பொருளோ கடைவிழியின்
தெள்ளுங் கருணை சிறிதளித்துச்
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
சீரார் வள்ளி மலைமுருகா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. 87

கரையி லுயிர்கள் படைக்குமயன்
கருத்தில் உன்றன் கழல்பணியக்
கருதான் எனநீ சிறையிட்டாய்
கனிந்து பின்ன ரவன்படைக்க
உரைசெய் தாயிப் பேதையரேம்
உன்னை யொழியா துவக்கின்றோம்
உளஞ்சீ ரடியே பதிக்கின்றோம்
உயிரும் உடைமை எல்லாமும்
விரைச்சே வடிக்கே யளித்தனமால்
விழையும் மலர்த்தேன் வண்டுண்டு
விளைக்கு மிசையுங் குயிலிசையும்
விரவும் பொழிலும் முழங்கருவித்
திரைசே ரெழிலும் திகழ்மலைவாழ்
செல்வா சிற்றில் சிதையேலே



சீரார் வள்ளி மலைமுருகா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. 88

காரைப் பழிக்கும் வரையுடலும்
கனலைப் பழிக்கும் புழைவிழியும்
கழையைப் பழிக்கும் கொடுங்கரமும்
கணையைப் பழிக்கும் கொலைச்செயலும்
சேரப் படைத்துப் புடைத்துதிமிர்
செறிக்கும் அவுணர் குலப்படையைச்
சிங்க முகனைத் தாருகனைச்
செருக்கின் வடிவாய்ச் சினந்துவரும்
சூரைக் குன்றைத் துளைத்தவரைச்
சூழும் மகளிர் வாழ்வீட்டைத்
துகள்செய் தழித்த திருவடிக்குத்
தோகை யெம்வீ டொருநிகரோ
சீரை யடியார்க் களித்தருளும்
செல்வா சிற்றில் சிதையேலே
சீரார் வள்ளி மலைமுருகா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. 89

வளைக்கும் கழுத்தில் கனிந்துகுலை
வாழை சாய்க்கும் வளவயலில்
வணக்கும் கதிரால் செந்நெல்லும்
வருஞ்சீ ரடியார் வரவேற்கும்
களைக்கும் குவளை ஆம்பலிவை
கடைசி யரின்கண் வாய்காட்டும்
கனக்கும் மடியில் கயன்மோத
கன்றென் றெருமை பாலூற்றும்
இளைக்கும் அயர்ச்சிக் கிளநீரும்
இனிக்கும் மலைத்தேன் மருந்தாகும்
இயற்கை வளஞ்சூழ் இதண்வள்ளி
யிருந்தா ளவளின் அடிச்சிறியேம்
திளைக்கும் படிச்சிற் றில்சமைத்தோம்
செல்வா சிற்றில் சிதையேலே
சீரார் வள்ளி மலைமுருகா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. 90

பூதமைந்தும் பொறியைந்தும்
புலன்க ளைந்தும் கரணங்கள்
புகலும் நான்கும் மலமூன்றும்
பொருந்து மிரண்டு வினைகளினால்
ஆத லறியா ஆன்மாவிற்
காதி சக்தி திரோதாயி
அதனு ளடங்கும் முச்சத்தி
ஆற்றுஞ் செயலா லிவ்வுலகில்
வேத னுடலைப் படைத்திடமால்
விரைந்து காக்கச் சிவனழிக்க
வீடின் றுலையு மடியேங்கள்
வீட்டை யழித்த லழகாமோ
சீதப் புனிதக் கங்கைமகிழ்
செல்வா சிற்றில் சிதையேலே
சீரார் வள்ளி மலைமுருகா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. 91

விஞ்சும் தவத்தால் பகீரதனும்
விண்ணின் றழைத்த கங்கையினை
விரிசெஞ் சடைக்காட் டுள்ளடக்கும்
விடையே றுடையான் றனக்குரிய
அஞ்சு முகத்தோ டதோமுகஞ்சேர்ந்
தாறு முகமா யவதரித்த
அண்ணால் நின்தா தைபுரியும்
அழித்தல் தமக்கு முறுதொழிலாய்
நெஞ்சுட் கொண்டோ பேதையரேம்
நிறுவும் சிறிய மணல்வீட்டை
நெடுமால் அயனோ டறிவரிதாய்
நிறைநான் மறையின் முடிதவழும்
செஞ்சீ ரடிக்குச் செயல்தருவாய்
செல்வா சிற்றில் சிதையேலே
சீரார் வள்ளி மலைமுருகா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. 92

ஞானக் கனியை நயந்துபதி
னான்கு புவனம் கொடித்தோகை



நாடி விரைந்து மரனினக்கு
நல்காச் சினநீ தணிகிலையோ
யானென் செருக்கின் வருஞ்சூரை
இலைவேற் பிளந்து நின்னடியாம்
இனிய வீட்டை யவற்கீந்தும்
இன்னம் வெகுளி தணிந்திலையோ
கோனே குறவர் மலைவாழும்
குறப்பெண் அடிக்கீழ்ப் பணிசெய்து
குலவும் சிறிய ஆயத்தேம்
குமிழ்புன் சிரிப்பின் அருள்தருவாய்
தேனும் தினைமா தருகின்றோம்
செல்வா சிற்றில் சிதையேலே
சீரார் வள்ளி மலைமுருகா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. 93

சங்குக் கரத்தோன் திருத்தங்கை
சத்தி யளிக்கும் திருமுலைப்பால்
தடத்தில் தவழ்ந்தும் மீண்டுமிவண்
துணியா தவனி தோணிபுரந்
தங்கு பொய்கைக் கரைநின்று
தனித்துக் கனிந்து பழகுநறுந்
தமிழால் அம்மே என்றழுது
தயங்குந் தளிர்மெல் லடியதனால்
மங்கு மாயை யிருள்மூழ்கி
மாழ்கும் அடியேம் ஒருவீடு
மணலில் சமைத்தே மிதுசிதைத்தால்
மங்கைக் கருள்வா ரெவருமிலர்
தெங்கு விளைக்கும் வளத்தொண்டைச்
செல்வா சிற்றில் சிதையேலே
சீரார் வள்ளி மலைமுருகா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. 94

## 10. சிறுதேர்ப் பருவம்

முண்டக மிருந்துமறை முழக்குவாய் மலரவன்
முறையறத் தேருருட்ட

மூவுலகு முயிரருளத் தாவலை யுறங்கிகண்
மூடாமல் கரியமுகிலும்
பண்டுதொட் டாழியினை யுருட்டகற் பகநிழற்
படிந்தரசு செயுமிந்திரன்
பயமிலா தெண்டிசைக் காவலர்க் குறுதொழில்
பணிந்தாணைத் தேருருட்ட
அண்டமெல் லாமொளிசெ யருணனெழு பரியொற்றை
ஆழியில் தேருருட்ட
அண்டரும் சான்றோரும் நின்னருட் புகழோதி
அன்பெனும் தேருருட்டத்
திண்டிறல் கழலொலி தேனிசை தரக்குக
சிறுதே ருருட்டியருளே
திலகமெனும் வள்ளிமலை நிலவுசுந் தரவேல
சிறுதே ருருட்டியருளே. 95

பரிதிவெண் திங்களு மிரண்டுரு ளாழியாய்ப்
பகரமரர் தேரதாகப்
பகழிதிரு மாலுமாய்க் கணையுமொரு மேருமாய்ப்
பணிவா சுகிநாணதாய்ச்
சுருதிகள் பரியதாய் நான்முகன் விசைத்திடத்
துரத்துசா ரதியுமாமுச்
சோவுறு மரக்கரை மடித்திடச் சிவபிரான்
தொடங்குநாட் சென்றதேரைப்
பொருவநின் சிறுவிரல் சிவந்திட மலையவன்
பொற்கொடி மகிழ்ந்துவப்பப்
புகழினைப் பாடிமல மாசுகள் அகற்றிடும்
புண்ணியர் பரவிவாழ்த்த
திருமகளி னிருமகளு மருகுற வருகுக
சிறுதே ருருட்டியருளே
திலகமெனும் வள்ளிமலை நிலவுசுந் தரவேல
சிறுதே ருருட்டியருளே. 96

நித்திலம் மணிகளும் இருகரை ஒதுக்கிட
நிறைவளம் திகழும்நீவா
நிதமுந்த னலைக்கரத் தால்பதம் தழுவுமோர்
நிலையென விளங்கவள்ளி



பத்தியால் பரண்பீடங் கொண்டுதவ மாற்றிடும்
பயன்மிகு மலையிலின்று
பலகோடி பக்தரும் அமரரும் முனிவரும்
பற்பல நாட்டுளோரும்
சத்தியின் பீடமே சண்முகன் உவந்தருள்
தந்திடும் என்றுகூடிச்
சாற்றரும் பொன்மணித் தேருலாக் கண்டிவண்
சாறெடுத் தயன்படைப்பைச்
சித்தியின் மாற்றிடத் திருவருள் புரிகுக
சிறுதே ருருட்டிருயளே
திலகமெனும் வள்ளிமலை நிலவுசுந் தரவேல
சிறுதே ருருட்டியருளே. 97

கன்னடம் கேரளம் ஆந்திரம் சிங்களம்
கடல்கடந் திடுதேசமும்
கரையிலா அருளினில் வாழ்பவர் வந்திவண்
கழலிணை எழிலைநாளும்
உன்னியும் போற்றியும் உவந்தன்னை வள்ளியின்
உயர்தவப் பீடமாகும்
ஒருபடை வீடென அருள்தரும் தரிசன
முற்றுபே ரின்பமுற்றார்
கன்னிசெந் தமிழிலே கந்தநின்சரிதையைக்
கமழ்திருப் புகழையோதிக்
கனியுதிரு முருககிரு பானந்த வாரியார்
கண்டுரை கேட்டுவந்தாய்
சென்னியில் சிந்தையில் மகிழ்நடம் புரிகுக
சிறுதே ருருட்டியருளே
திலகமெனும் வள்ளிமலை நிலவுசுந் தரவேல
சிறுதே ருருட்டியருளே. 98

சத்துசித் தானந்த வடிவமாய் நடமிடும்
சங்கரன் அநாதியாதி
சரவசரப் பொருளுறைந் தவையவை யியற்றிடும்
சார்வினை யகன்றுநின்று
நித்தமும் முத்தொழில் புரிந்துவிளை யாடல்செய்
நின்மலன் சுயம்புநாதன்

நிரையண்ட கோடிகள் ஒழுங்குறச் செய்பவன்
நிலைசத்தி யோடிணைந்து
பத்தியில் அடியராம் பயிர்தழைத் திடத்தரும்
பரமனே ஆறுமுகனாம்
பாரெலா மறிகெனச் சச்சிதா னந்தரும்
பதம்பரவு மவுனகுருவும்
சித்தமும் மகிழ்ந்தமர திருவருள் புரிகுக
சிறுதே ருருட்டியருளே
திலகமெனும் வள்ளிமலை நிலவுசுந் தரவேல
சிறுதே ருருட்டியருளே 99

பொங்குநற் களிப்புற அரசுதந் தருளினை
புதல்வியாம் தெய்வயானை
புந்திகொள் மகிழ்நனும் தனக்குமின் மருகனாம்
பொருந்திரு காரணத்தால்
தங்குபன் விதியெலாம் திரட்டியும் நிதியிறை
தருமணிக் குவைகூட்டியும்
தளராத வினைவலத் தேவதச் சன்திறம்
தழைத்திடத் தேர்ந்துபன்னாள்
இங்குச்செய் திந்திரன் வரிசையாய்த் தந்ததோ
எனும்வள்ளி மலைரதத்தின்
எழிலுலாக் காட்சிகாண் கண்களே ழாயிரம்
ஏழையேற் கருளவேண்டும்
செங்கரம் மலர்ந்தெமைத் திருவருள் புரிகுக
சிறுதே ருருட்டியருளே.
திலகமெனும் வள்ளிமலை நிலவுசுந் தரவேல
சிறுதே ருருட்டியருளே. 100

கன்னலின் சுவையினும் கற்றிடுந் தொறுநயம்
காட்டுநற் றமிழையாயும்
கழகமார் மதுரையில் மலையவன் வேள்வியின்
கனலிடை யெழுந்துவந்த
அன்னையாம் அங்கயற் கண்ணிபொற் றேரினில்
அரசருக் கரசரெல்லாம்
அடிபணிந் திட்டிறை யளித்திடப் பெருவெற்றி
அணிபெறத் திகழுமாபோல்



பின்னையோர் இதுநிகர் பெருரதம் இலையெனப்
பேசிடப் பேறுகொள்ளப்
பிரியமுறு குறமகள் தேவகுஞ் சரிமகிழ்
பிள்ளையாய்ப் பெரியனாகித்
தென்றமிழ் உவந்திடும் சண்முகக் கடவுளே
சிறுதே ருருட்டியருளே
திலகமெனும் வள்ளிமலை நிலவுசுந் தரவேல
சிறுதே ருருட்டியருளே. 101

ஈராறு கரங்களில் வெவ்வேறு படைகொண்டும்
இந்திரத் தோகைகொண்டும்
எழுபடைத் திரளென வானவ வீரரொடும்
எந்தைநீ சினந்தெழுங்கால்
போராறு முகத்தினில் புகுமவுணர் தலைமலைகள்
புயல்படு குலையின்வீழப்
புண்டொட் டருந்துநரி கண்டொட் டுணுங்காகம்
புலையளைந் துண்ணுபேய்கள்
நீராறு போற்குருதி காரேறு மழையென
நிறையுடல் பெருக்கெடுக்க
நீதியை நிலைசெய்ய நீந்தியுங் குளித்துமெழு
நெடுவேல நின்தொழும்பர்
தேராறு கண்டுய தேவாதி தேவனே
சிறுதே ருருட்டியருளே
திலகமெனும் வள்ளிமலை நிலவுசுந் தரவேல
சிறுதே ருருட்டியருளே. 102

ஆயிரம் படமுடியி லவனியைத் தாங்கியும்
அறிதுயில் கொள்ளுமரியின்
அணையுமாம் ஆதிசே டன்தலை நெருக்கவும்
அட்டமா திக்கயங்கள்
மாயிரும் பிடர்த்தலை முறிபடப் பொறுமைகொள்
மண்மகள் முதுகுநெளிய
மடுத்தெதிர் நின்றிடும் மலையெல்லாம்
பொடிந்துதூள்
மாகமெல் லாம்நிறைக்கக்
கூயிடும் வரவினைக் குவலய முரைத்திடும்
கோழியே கொடியதாகக்

கோயிலெங் கணுமிது வரையிலும் காண்கிலாக்
குன்றெனக் குலவுதேரில்
சேயிழை யிமையவள் சேயுனை யுவந்திடச்
சிறுதே ருருட்டியருளே
திலகமெனும் வள்ளிமலை நிலவுசுந் தரவேல
சிறுதே ருருட்டியருளே. 103

பொய்யுடல் தேரையும் புன்மனத் தேரையும்
புகுமுயிர்க் காப்படைத்துப்
பொன்புலம் பெண்ணெனும் முப்பெருந் தேரையும்
பொருந்திரு வினைத்தேரையும்
உய்தலில் வன்கொலை புலையரின் சேர்க்கையாம்
உலைந்திடு மொருதேரையும்
உயர்ந்தவர் தாழ்ந்தவர் எம்மிறை எனக்கலக
முற்றழி பெருந்தேரையும்
வெய்யதாங் குழிவிழுந் தாழ்ந்திட எமக்கிவண்
விளைத்துநீ விளையாடுவாய்
வித்தக நின்கழல் முத்தியை விழைந்தனம்
விதிக்குமித் தேர்களழியச்
செய்யனே சிவகாமி செல்வனே மலர்க்கையால்
சிறுதே ருருட்டியருளே
திலகமெனும் வள்ளிமலை நிலவுசுந் தரவேல
சிறுதே ருருட்டியருளே. 104

**வள்ளிமலை திருமுருகன் பிள்ளைத்தமிழ் முற்றிற்று**



உ

## நல்லூர்க் கந்தன்

# திருவருள் தேன் மலர்கள்

1

### குருவே நல்லூர்க் கதிர்வேலா

ஊனாய், உயிராய், உலகமெலாம்
ஒளிரும் கருணைப் பேரிறைவா!
கோனாய்த் தமிழர் குலங்காக்கும்
குமரா, பரம குருதேவா!
வானோர் பணியும் படைத்தலைவா
வள்ளி படரும் மலைக்கிழவா!
தேனார் நல்லைப் பதிவாழும்
செல்வக் குமரப் பெருமானே. 1

அமுதம் பொலியும் முகமாறும்,
அபயம் தருகண் ஈராறும்
இமயம் பொலிபன் னிருதோளும்,
எதிர்ந்தார் நடுங்கும் தனிவேலும்,
அமரர் அணங்கு வள்ளியுடன்
அழகார் மயில்மேல் வாராயோ?
குமரா, அடியேன் கலிதீரக்
குருவே நல்லூர்க் கதிர்வேலா! 2

அரும்பு விழிகள் புனல்சொரிய,
அங்கம் புளகித் துன்பரெலாம்,
கரும்பே! தெவிட்டாக் கனியே! எம்
கண்ணே!' என்றுன் சந்நிதியில்,
துரும்பாய் உருக, எனைமட்டும்
சோம்பிக் கிடக்கும் கருங்கல்லாய்,
இரும்பாய் வைத்தல் முறையாமோ?
இறைவா! நல்லூர்க் கதிர்வேலா! 3

2

## அருளாரமுதே

அருளா ரமுதே சரணம் சரணம்
அழகா அமலா சரணம் சரணம்
பொருளா வெனையாள் புனிதா சரணம்
பொன்னே மணியே சரணம் சரணம்
மருள்வார்க் கரியாய் சரணம் சரணம்
மயில்வா கனனே சரணம் சரணம்.
கருணா லயனே சரணம் சரணம்
கந்தா சரணம் சரணம் சரணம். 4

முடியா முதலே சரணம் சரணம்
முருகா குமரா சரணம் சரணம்
வடிவே லரசே சரணம் சரணம்
மயிலூர் மணியே சரணம் சரணம்
அடியார்க் கெளியாய் சரணம் சரணம்
அரியாய் பெரியாய் சரணம் சரணம்
கடியாக் கதியே சரணம் சரணம்
கந்தா சரணம் சரணம் சரணம். 5

அருளால் உலகைத் தாங்கிவரும்
அப்பன் மகிழப் பிரணவத்தைக்
குருவா யமர்ந்து அருள்புரிந்த
குகனே! முந்தைக் கொடியவினை
இருளிற் கிடந்து கரைகாணா
தேங்கும் அபலை உய்யவருட்
குருவாய் வந்தா லாகாதோ?
குமரா, நல்லைப் பெருமானே! 6



3

## கொஞ்சும் குழந்தை வடிவேல்

## பரஹம்சதாசன்

கொஞ்சும் குழந்தை வடிவேல்;—தீயர்
கொட்ட மடக்கக் கொதிக்கும் தழல்வேல்
தஞ்சருக் கஞ்சல் தரும்வேல்;—ஆத்ம
தாகம் தணித்திடும் தியாகப் புனல்வேல்
(கொஞ்சும்)

ஆறு முகங்கொண்ட சீர்வேல்;—வஞ்சர்க்
கஞ்சு முகந்தந்து துஞ்சிக்கும் கூர்வேல்
ஏறு நடைகொண்ட போர்வேல்;—தெய்வம்
இல்லையென் பாருள்ளும்; துள்ளும் உயிர்வேல்!
(கொஞ்சும்)

உண்மை உணர்த்தும் ஒளிவேல்;—தவம்
ஊக்கம், முயற்சி, உழைப்பிற் குளிர்வேல்;
திண்மை வளர்க்கும் ஜெயவேல்;—இளஞ்
சிங்கத் தமிழ்நெஞ்சிற் பொங்கும் திறல்வேல்!
(கொஞ்சும்)

அண்டம் சுழற்றும் அணுவேல்;—சச்சி
தானந்த மாய்நிறை மோனக் குகவேல்!
தொண்டருக் குற்ற துணைவேல்;—உயிர்
தோறும் கலந்தருட் பேறு தரும்வேல்!
(கொஞ்சும்)

கண்டவர் உள்ளம் கவர்வேல்;—வழி
காணா தவர்க்கொளி காட்டும் விழிவேல்!
விண்டிட வொண்ணா விறல்வேல்;—அன்பு
வீறுகொண் டாருளத் தூறும் சுவைவேல்!
(கொஞ்சும்) 7

4

## பந்தம் அகற்றும் பதிவேல்

மாமயி லேறும் மணிவேல்;—குற
வள்ளி,தெய் வானையைப் புல்லும் கனிவேல்;
பாமலர்க் கிச்சைப் படும்வேல்;—சிவ
பார்வதி பெறற பதுமச் சுடர்வேல்!
(மாமயில்)

கட்டற்ற ஞானக் கதிர்வேல்;—வெறும்
கற்பனைக் கெட்டாக் கருணை நிதிவேல்;
எட்டுத் திசையும் படர்வேல்;—பார்
இயற்கை யெழிலில் இனிக்கும் சுடர்வேல்!
(மாமயில்)

அச்சம் அகற்றும் அயில்வேல்;—பர
மானந்த வெள்ளத் தழுத்தும் அருள்வேல்;
முச்சுட ராகப் பொலிவேல்;—ஆழ்ந்த
மூலத்திற் பொங்கி முழங்கும் கனல்வேல்!
(மாமயில்)

பந்த மகற்றும் பதிவேல்;—தூய
பக்தி,வை ராக்கியம் சித்தி தரும்வேல்;
சிந்தைக் கினிய சிவவேல்;—இன்பத்
தெள்ளறி வாகத் திகழும் நவவேல்!
(மாமயில்)

தீரர்கை வீரத் திருவேல்;—கொடும்
சிந்தையிற் பாய்ந்து சிதைக்கும் எறிவேல்;
வாரி குளித்த வடிவேல்;—கவி
வாணர்தம் நாவில் மகிழ்ந்து தவழ்வேல்!
(மாமயில்) 8



5

## நல்லைப் பதியில் வாழ் முருகா!

நல்லைப் பதியில் வாழ்முருகா
அல்லல் தீர்த்து ஆள்முருகா 1

ஒன்றாய்ப் பலவாய் ஒளிர்முருகா
என்றும் எழிலார் இளமுருகா! 2

சுத்த மனத்தவர் தொழுமுருகா!
உத்தமர் நெஞ்சத் தொளிர்முருகா! 3

சுந்தர ஞானச் சுடர்முருகா,
செந்தமிழ் வடிவிற் றிகழ்முருகா! 4

தந்தைக் கருளிய தனிமுருகா,
கந்தம் கமழ்செங் கதிர்முருகா! 5

அசுர குணப்பகை யறுமுருகா,
இசையமு தக்கடல் இயல்முருகா! 6

கொடியவர் பொடிபட வருமுருகா,
அடியவர் இடர்கெட அருள்முருகா! 7

வெற்பைப் பொடிசெயும் வேல்முருகா
அற்புதத் தொண்டரை யாள்முருகா! 8

மோனக் குகைதனில் வாழ்முருகா,
ஞானச் சுடர்வடி வேல்முருகா! 9

திருமுரு கா,ஓம் ஜெயமுருகா,
இருவினை கெடவரும் இசைமுருகா! 10

## 6
## வீரத் தமிழர் குலதெய்வம்

வீரத் தமிழர் குலதெய்வ மாய்வந்த
வெற்றிக் கனல்முரு கன்!—இன்பப்
பேரெழிற் குன்றவன், ஆரமு தக்கடல்,
பேரறி வுக்கதி ரோன்! 1

நம்பும் அடியவர் துன்பம் துடைத்திடும்
ஞானக் குமர குரு!—தம்
என்பும் உருக நினைப்பவ ருள்வளர்
இன்பக் கருணை யுரு! 2

வஞ்சகக் காமப் பொறாமைப் பகையிருள்
மண்டி எதிர்த்திடி னும்,—வேலன்
விஞ்சை விழிக்கனல் வீசில், அனைத்தும்தீப்
பஞ்செனப் பாழ்படு மே! 3

விண்ணை யளாவும் மலையெனத் தொல்லைகள்
மேவி எதிர்த்திடி னும், அவன்
திண்ணிய நாமத்தைச் சிந்தையில் ஊன்றிச்
சிரித்திடத் தூள்படு மே! 4

புள்ளி மயில்மிசை வள்ளிக் கொடியினைப்
புல்லிக் களித்துநிற் கும்,— அந்த
வெள்ளி மலைக்குகன் உள்ளத்தில் மேவினால்
வேண்டுமோ வேறு சுகம்? 5

**நல்லூர்க் கந்தன் திருவருள் தேன் மலர்கள் முற்றிற்று**



உ

# இரத்தினகிரிப் பாலமுருகன் இரட்டை மணிமாலை

## வி. அண்ணாமலை முதலியார்

**வெண்பா**

மலரவன் தானறியா மாபொருளின் உண்மை
நலமலி மாதுமையாள் நாதன்—வலச்செவி
தன்னிலோ திட்ட கிரியாய் தனிமுதல்வா
உன்னருளை எய்துநாள் ஓது.

**கட்டளைக் கலித்துறை**

ஓதி உணர்தற் கரியாய் உணர்வில் உறுபவனே
பாதி மதியுடன் பாம்பணி கின்ற பரசிவன்றாள்
ஆதி அயன்முத லோர்வேண்ட வந்த அறுமுகனே
ஆதிரத் நாசல மெய்ப்பொருள் ஆவிகொண் டாண்டருளே. 2

**வெண்பா**

ஆண்டருள் செய்யும் அறுமுகத் தெய்வமாய்
காண்டற் கரிதாய்க் கருத்துறைவோய்—வேண்டியதை
வேண்டுவோர்க் கீந்திடும் ரத்னகிரி வேலவா
ஈண்டெனை ஆள்வாய் இனிது. 3

### கட்டளைக் கலித்துறை

இனிதுளத் தொன்றாகி வேறாய் உடனாம் இறையவனே
பனிமொழி பார்வதி யும்சேர வந்தநற் பாலகனே
கனிவுடன் மெய்யடி யார்தமை யேற்கும்வேற் கையிறையே
இனியெனை ஆள்வையோ ரத்ன கிரியுறை இன்னமுதே. 4

### வெண்பா

இன்னமுதாய் நான்மறைக் கெட்டா எழிற்பொருளாய்
வன்மலம் வீழ்த்தியெனை வாழ்விக்கும்—இன்குருவாய்
பெற்றவளைக் காணாத பிள்ளையெனும் பேதையென்பால்
உற்றிடுவாய் இன்றே உவந்து. 5

### கட்டளைக் கலித்துறை

உவப்புறுக் கும்அருள் வெள்ளம் பருகியான் உய்தலின்றிப்
பவக்கடல் வீழ்ந்துசிற் றின்பத் தழுந்தும் பதடியெனை
உவக்கச்செய் தாற்குறை வோவுன் னருளுக் குமைகுமரா
எவக்கடல் வீழா தெடுத்தாள்ரத் நாசலத் தின்எழிலே. 6

### வெண்பா

எழில்நிறை வள்ளிநன் நாயகி ஏத்தக்
கழிபெருமெய் யன்பாற் கடிதில்—வழிநடந்து
கானவனாய் வந்தேற்ற ரத்னகிரிக் காவலனே
மோனகுரு வந்தருளென் முன். 7

### கட்டளைக் கலித்துறை

முன்னமுன் பேர்வண்ணம் மற்று முளகேட்டு முற்றுணர்ந்த
பின்னரே ரத்ன கிரியானென் றோர்ந்தயான் பித்தடைந்தே
என்அத்தன் அன்னை தனையும் மறந்தேன் எழிலரசே
இன்றே அணிவித்தேன் பாமாலை உன்னடிக் கேற்றருளே. 8

### வெண்பா

அருணகிரி அன்று விராலிகுன் றேக
இருளில் வழிகாட்டும் எந்தாய்—கருவிருளில்
வந்தயான் உய்ய மறலி வருமுன்னே
வந்துன் வழிகாட் டுவந்து. 9



### கட்டளைக் கலித்துறை

உவந்த ருணகிரிப் பாடற் றிளைத்தே உளம்நெகிழ்ந்து
தவத்திரு அம்மை மடியிருந் தோடிய சற்குருவே
பவத்தொடர் சம்பந்தாண் டான்மறைந் தோடும் பரம்பொருளே
பவப்பிணி போக்கும் கிரியானே என்னுள் பதிந்தருளே. 10

### வெண்பா

அருட்கடலாய் ஆன்மா அகத்திருத்தும் காண
அரும்பொருளாய் நல்லார் அணுகும்—பெரும்பொருளே
உன்னடியார் கூட்டத் துறைசெய் உமைகுமரா
பொன்னடியிற் சேர்வேன் புகுந்து. 11

### கட்டளைக் கலித்துறை

புகுந்துயிர் ஒட்டிய ஆணவ மான புரையறுத்தே
மிகுமருட் செந்தேன் பொழியும் கருணை மிளிர்உருவே
தகுதிமி யென்றாடு மாமயில் மீதருள் தந்தருளாய்
நகுதலை மாலையன் செல்வக் குமரா நயந்தினிதே. 12

### வெண்பா

இனியாய் உயிர்கட் கெளிவரும் தேவே
கனிவுடன் என்வினை கல்வி—இனிதேற்பாய்
செந்நெல் வளர்ந்தோங்கு செய்யரத் நாசலனே
இந்நாளில் எய்துவன் யான். 13

### கட்டளைக் கலித்துறை

யான்என தென்னும் செருக்கை அகற்ற இரத்னகிரி
தான்நில மென்றுணர்ந் தெல்லாரும் சார்ந்திணைத்
தாள்வணங்கின்
மான்மழுக் கையுடை யான்செல்வ வள்ளி மனமுவக்கத்
தேன்தினை மாவுண்போய் ஆள்வை இனிதுண்மை தேவரசே. 14

### வெண்பா

தேவர்க்காய்த் தெவ்வழித்துத் தெய்வஎழிற் குஞ்சரிதன்
காவலனாய் நின்ற கதிர்மணியே—காவனம்
சூழ்ரத்னக் குன்றுறைவோய் சூழ்வினை போக்கிடுவாய்
பாழ்பிறவி நீக்கவிப் பார். 15

### கட்டளைக் கலித்துறை

பார்முதல் அண்டங் களனைத் தும்காணாப் பரம்பொருளே
கார்நிறக் கண்டன் குமரனே என்பாழ்ங் கரும்பிறவி
வேர்நீக்கித் தீரா மலப்பிணி தீர்த்திடும் வேலவனே
சார்ந்தேன் உனதடி ரத்ன கிரியுறை சண்முகனே. 16

### வெண்பா

சண்முகா! சார்ந்தார்க் கருள்செயும் சற்குருவாய்க்
கண்கயற் பாவைகுறக் கன்னியையே—நண்ணி
அடைந்த அறுமுகவா ரத்னகிரி வேலா
அடைக்கலம் உன்றாள் அலர்க்கு. 17

### கட்டளைக் கலித்துறை

அடைக்கல மாக மலர்த்தாள் புகுந்த அறிவிலியை
உடைக்கல மாக அருளிடாய் என்னை உடையவனே
துடைக்கினும் நின்றாள் அகலேன் கிரியுறை தூமணியே
கடைக்கணின் உய்ய அருளாய் கருணைக் கடலமுதே. 18

### வெண்பா

கடலமுதே கார்த்திகைப் பெண்முலைப்பால் மாந்தி
அடல்மிகு சூரை அழித்த—வடிவேலாய்
என்னாவி காத்திட இன்றுநீ வந்தருளாய்
உன்னையல்லால் யார்தான் உறவு. 19

### கட்டளைக் கலித்துறை

உறவுடன் நின்றாளை உள்ளத் தமைத்திடும் உத்தமர்க்கே
நிறமுரு இல்லாதாய் நின்னுருக் காட்டிடும் நின்மலனே
அறவிடை யேறும் அரன்றன் குமரா அறுமுகனே
மறவா தெனையாள் எனதாவி சேர்த்தேன் மலரடிக்கே. 20

**இரத்தினகிரிப் பாலமுருகன் இரட்டை மணிமாலை முற்றிற்று**



உ

# மாவை யிரட்டை மணிமாலை

## அ. குமாரசுவாமிப் புலவர்

### காப்பு

### கட்டளைக் கலித்துறை

பொன்னாரு மாவைத் திருக்கோயில் மேவிப் புகுந்திருக்கும்
மன்னான கந்த சுவாமி சலச மலரடியைச்
சொன்னா டிரட்டை மணிமாலை கொண்டு துதிப்பதற்கு
முன்னான யானை முகவன் றிருவடி முன்னுதுமே.

### வெண்பா

திருவேறும் மாவைநகர்த் தேவே பரம
குருவே யுமையாள் குமாரா-மருவாருஞ்
சந்த மலர்க்கடப்பந் தாராய் தமியேன்றன்
வந்தனையுங் கொண்டருள்வாய் மற்று. 1

### கலித்துறை

மற்புய தாரக மாரக துங்க வரதவருட்
சிற்பர வற்புத சின்மய தேவ சிகாமணியே
யற்பக னின்றனை யன்றியொன் றுன்ன லறத்தவிர்ப்பா
யுற்பல வாவித் திருமாவை வாழ்வுசெ யுத்தமனே. 2

வெண்பா

உத்தமராய் நின்புகழை யோதித் துதிசெய்வார்
சித்தியெது வேண்டிடினுஞ் சேர்குவரே-முத்துக்
குமரா திருமாவைக் கோனே யவுணர்
சமராடுஞ் சத்தி தரா. 3

கலித்துறை

தராதலம் போற்றிய மாவைப் பதியுறை தற்பரனைக்
குராமலர் சூடிய சுப்ர மணிய குருபரனைப்
பராவில ராகி முடையுடல் வீக்கும் பதகரந்தோ
கராசலம் போலந் தகன்வர நொந்து கலங்குவரே. 4

வெண்பா

கலங்குவரோ நின்கோயில் கண்டுதொழு தன்பால்
வலங்கொண்டு வாழ்த்தி வருவார்-இலங்கியபூங்
கொத்துவிரி சோலைக் குளிர்மாவை வாழ்வுகந்த
சத்திதர காங்கேய தாம். 5

கலித்துறை

தாமே தமக்குப் பகைவரன் றோபகை தாமென்றுமாய்த்
தோமே செறியும் பொருளினை வாழ்வைத் துராலுடம்பை
யாமே நிலையென நின்னுற வற்ற வறிவிலிகள்
தூமேவு மாவைப் பதியா யமரர் தொழுவள்ளலே. 6

வெண்பா

வள்ளலெனு முத்துக்கு மாரப் பரம்பொருளை
யுள்ளுமின் கைகூப்பி யோதுமின்-தெள்ளுங்
குருமா மணிசேருங் குண்டுநீர் வாவித்
திருமாவை யூரிடத்துச் சென்று. 7

கலித்துறை

சென்றே யமரர் தொழுமாவை வாசனைச் செய்யகுணக்
குன்றே யெனவரு முத்துக் குமார குருமணியை
நன்றே யுறப்பணிந் தன்புட னேவ னயந்துசெய்வோர்
வென்றே பிறவிப் பெருங்கட னீந்துவர் மேலினியே. 8



வெண்பா

மேலான நின்கழலே வேண்டிமன நெக்குருகேன்
பாலான தொண்டு பணிந்தியற்றேன்-ஆலால
மண்மு களத்தோ னருள்புதல்வ மாவையுறை
சண்முகனே யுய்யுநெறி தா. 9

கலித்துறை

தாயே பரம னுதற்கண் டரவருஞ் சண்முகத்துச்
சேயே வளங்கொளு மாவைப் பதிவதி தெய்வதமே
நீயே யுயிர்க்குத் துணையெனத் தேர்ந்து நினைநினையேன்
நாயேன் பிழைபொறுத் தென்றும் பெருஞ்சுக நல்குதியே. 10

வெண்பா

நல்குரவு நீங்கும் நலிபிணியுந் தானீங்கும்
வெல்பகையு நீங்கி விளிந்தோடும்-சொல்வளங்கொள்
தண்டலைசேர் மாவைத் தலத்தமருஞ் சண்முகனைக்
கண்டுதுதி செய்தக் கடை. 11

கலித்துறை

கடையேன் பிறவிப் பெருந்துயர் நீங்கிக் கதியடையத்
தடையேது மின்றி வரந்தரல் வேண்டுஞ் சராசரங்கள்
அடைவே புரக்கு மருட்கட லேயட லாரயிலோய்
விடையேறி மைந்த திருமாவை மேவிடும் வித்தகனே. 12

வெண்பா

வித்தகராய் வாழ்ந்தாலென் மேதினியை யோர்குடைக்கீழ்
வைத்தவராய் வாழ்ந்தாலென் மாதேவா-சத்தியுறுஞ்
செங்கையாய் மாவைத் திருநகரா யென்னாதார்
தங்கள்வினை நீங்கிடுமோ தான். 13

கலித்துறை

தானே தனக்கு நிகராக வைகிய சண்முகனைக்
கானார் பொழிலெழின் மாவையந் தேவைக் கருத்துள்வைம்மின்
ஊனா ருடம்பு நிலையன்று செல்வ முறுதியன்று
மானார் கலவிச் சுகமு நிலையன்று மானுடரே. 14

வெண்பா

மானுடஞ்சேர் நற்பிறவி மற்றுண்டு வாயுண்டு
தூநறுநீர் பூவுண்டு தோத்திரமுண்-டானதொரு
வித்தகஞ்சேர் மாவைநகர் வேளுண்டு கூற்றுவனால்
எய்த்திடுவீர் நும்மதறி வென். 15

கலித்துறை

என்னே வளஞ்செறி மாவையிற் றேவனை யான்வணங்க
முன்னே புரிந்த பெருந்தவம் வேத முதல்வனவன்
மின்னே ரிடைவள்ளி காந்த னவன்கிரி வேந்தனவன்
அன்னே யெனத்துதித் தன்புசெய் வாருக் கருள்செய்யுமே. 16

வெண்பா

அருளே புரியா தகற்றுவையேல் வேதப்
பொருளே யெனைவிட்டுப் போமோ-மருள்பிணிநோய்
சீராரு மாவைத் திருத்தலம்வாழ் முத்துக்கு
மாராய் திருவாய் மலர். 17

கலித்துறை

மலர்மாலை சூட்டிலன் மெய்த்தவ மீட்டிலன் மாயவினைக்
குலமாலை வீட்டிலன் கோதுகள் வாட்டிலன் கூரறிவு
வலமாக நாட்டிலன் நீயேனு முய்யும் வகைகளுண்டோ
நிலமே லுயர்தரு மாவைப் பதிவதி நின்மலனே. 18

வெண்பா

நின்மலனைச் சண்முகனை நித்தியமுத் துக்குமர
சின்மயனை நெஞ்சே தினந்தினமும்-பன்மலர்க
டூவித் திருமாவைத் தொல்பதிசென் றேத்துதிநீ
பாவங்க ணீங்கும் படி. 19

கலித்துறை

படியேழ் தொழுமெழின் மாவைப் பதிவதி பண்ணவனை
முடியாத பேரருண் முத்துக் குமார முழுமுதலைக்
கொடியோ னமன்வரு முன்னே பணிந்து குழைந்துருகி
யடிமேற் கிடத்தி மனமே தருமுத்தி யாந்திருவே. 20

மாவை யிரட்டை மணிமாலை முற்றிற்று



உ

# மாவைச் சித்திரகவித் திருவிரட்டை மணிமாலை

## தா.மூ.பூ. பொன்னம்பலப் பிள்ளை

காப்பு

வெண்பா

உலகு பரவு புகழிலங்கை யுச்சி
குலவுமெழின் மாவைக் குகன்சீர்—பொலிமாவைச்
சித்திரக வித்திருவி ரட்டைமணி மாலைசொலக்
கத்தனருள் அத்திமுகன் காப்பு.

கூடசதுர்த்தம்

தேர்வெண்பா

மாவார்பொன் சங்கமும்பூண் மாலம் புயனொலிசீ
ரோவா நபத்தினர்மற் றும்பலரு—மேல்வைதெரி
மாவைதினஞ் செல்லுமன்பர் வாழ்வுறப்பொற் பூவைகு
மாவைப் பதிபநம்முன் வா. 1

கலித்துறை

(அறுசீரடி ஆசிரிய விருத்தமுமாம்)

வானங் கொண்டார்க் கிடர்செய்த
வன்சூர் தன்னை மாய்த்தவர
ஞானங் கொள்பூங் கரச்சத்தி
நம்பிக் கென்று நற்றளியா
மானந் தச்சின் மயமாவை
யன்பிற் செல்வ தன்றியய

லேனஞ் செய்மா னுடர்செல்வ
தென்னோ வுள்ளத் தெண்வணமே. 2

**வெண்பா**

(கலிவிருத்தமுமாம்)

**பிறிதுபடு பாட்டு**

வண்டண்டு நீப மலர்மாலை மார்பன்
கண்டண்டு மென்சொல் கயமாது கண்டன்
செண்டண்டு மாவை நகரமிது வென்றே
விண்டண்டு தேவர் விலகில்லர் சூழ்ந்து. 3

**கலித்துறை**

(இரட்டைநாக பந்தம்)

சூழம் பொடும்பனி யாறூ றலைமலைத் துன்றுநனீர்
தாழும் புததியிப் பொன்மாவை மாட்டு நனிநிற்பதுட்
டாழன்பி னீர்வரும் போகங்க டாம்பயி றாம்பிடுவே
றூழற் றுறுமன் பொருகருத் தார்வந் தரும்விழவே. 4

## வினாவுத்தரம்

**வெண்பா**

விழுத்திகழ் வேகமாய் மேவுபரிப் பேரோ
ரெழுத்தினாற் கூறி லதுவென் — வழுத்துபடைக்
கூர்மைப்பே ரோரெழுத்தாற் கூறிலது வென்குமர
னேர்புற் றருண்மாவை யே. 5

## திரிபங்கி

**கலித்துறை**

(வஞ்சித்துறைகளுமாம்)

மாதங்கஞ்சார் சுரர்கோவுதவுங் கடிமாமலர்சூழ்
வேதன்பண்பார் கரமாமகள்சேர் வடிவேலவனற்
போதன்பல்சீர் வரனேர்தரநற் படிபூரணசீர்
பாதங்கண்பார் பரமாவையைநேர் படிசாரருளே. 6

## காதைகரப்பு

**வெண்பா**

சாரே குவருள்ளு மாநலமீ ஞாதர்பா
னாரா யினதா நலப்பாலன் — பேலா



வுயிர்வா முலகுறா துற்றடர்மின் மாவா
லயநீ ரிடருறா தே. 7

**இதிற் கரந்த கவி தேவாரம்**

நீல மாமிடற் றாலவாயிலான்
பால தாயினார் ஞாலமாள்வரே.

**கலித்துறை**

**சக்கரபந்தம்**

(நாலாநேமி சரவணபவ)

தேவா திபநிச மாவைய கந்த திணங்கொண்மறை
பாவா லுரைவர நல்லா கமநெறி பற்றிடவுள்
வாவா னரச வடிவேற் கரத்த வரமருள்வை
தேவா விபாகர வாவிற்றை நாளாள் செயவையனே. 8

## திரிபாகி

**வெண்பா**

வைமூ வெழுத்தாலோர் செந்ததி லீறற்றா
லெய்து மிகுதிநடு வேகில்விலங் — கெய்து
முதலொழியின் மாவை யருவிமுழங் கோத
வுததிவளர் சங்கென் றுரை. 9

**கலித்துறை**

(அறுசீரடி ஆசிரிய விருத்தமுமாம்)

உரைமிகு ஞான நன்னீ ரொழுகிச்செ லுததி சங்க
வரைமிகு மாவை யெம்மான் மலருற்ற வடிவ நற்றாள்
கரைமிகு காத லுற்றோர் கணமற்று மறத்த லின்றி
யிரைமிகு வேத நற்பாட் டிசையன்பி னிதய மூழ்கே. 10

## மாத்திரைச் சுருக்கம்

**வெண்பா**

மூவெழுத்தோர் புட்பேர் முதலட் சரங்குறுகின்
மாவெறிந்த மாவையன்பேர் மத்திகுறி—லாவெழுதின்

வாசந்திப் பேர்முதலு மத்தியெழுத் துங்குறுகிற்
பேசு நகரியென்று பேர். 11

**கலித்துறை**

(எழுசீரடி ஆசிரிய விருத்தமுமாம்)

பேசி யம்பொன் வண்ண வேலர்
பெருமை யன்பின் வண்ணமே
யாசி லன்பின் மல்கு சென்னி
யணித லுற்றங் கைகளைக்
காசி யொத்தல் கொண்ட மாவை
கடலி னற்கங் கையினான்
மாசி னீத்துண் மல்கு மன்பின்
வடிவ மாமா வையமே. 12

## எழுத்து வருத்தனம்

**வெண்பா**

மாவை நகர்வேண்முன் வஞ்சவினைச் சூர்படைக
ளேவு தொழிலுமுட லீர்கூற்றின் — மேவுமொன்று
மீருமவன் பாவத்துக் கெய்தி யதுமிரணம்
வாரணநி வாரணமாய் வை. 13

**கலித்துறை**

(கலிவிருத்தமுமாம்)

வையம்புகழ் நகுலாசல மாவைக்குக னிருதாண்
மெய்யன்பொடு சுனைசங்கம வேலைக்கடன் முழுகி
வெய்யன்விது குளிரோடெழ வேணீள்கழல் பணிவார்
செய்யும்வினை தவமாமவர் சேர்வார்சிவ பதியே. 14

## அக்கர சுதகம்

**வெண்பா**

பதிமாவை யார்மகிழும் பூஞ்சோலை பார்த்தி
முதலெழுத்தற் றாற்காற் றதினு — முதலற்றாற்
காடா மதின்முன் கழிந்தால் வணக்கமாஞ்
சேடமுன்னொற் றற்றானீர் செப்பு. 15



**கலித்துறை**

(அறுசீரடி ஆசிரியவிருத்தமுமாம்)

செப்பும் பரிசொன் றறியேன்
றென்வா ரிதிசே ரிலங்கை
வைப்பின் றிகழு மகுட
மாவைத் தனிவாழ் குகனே
அப்பின் வலிசா ரவுண
னங்கத் துணியாண் டருள்வா
யெப்பண் புரைசெய் திடினு
மீவாய் மிகுமா தரவே. 16

## கரந்துறைச் செய்யுள்

**வெண்பா**

**மாதரும வேரணிமா மாவையைய நன்காகு**
**நாமபர னேநா மயக்கமின் — நாகந**
**மல்லற்பா டேதமு மேக நயமதா**
**நல்லியன் மாபதமே தா.** 17

இதிற் கரந்த கவி வஞ்சித்துறை
தமரமாவையன், குமரநாயகன்
கமலபாதமே, நமநலின்பமே.

**கலித்துறை**

(கலிவிருத்தமுமாம்)

தாமரைநன் மலர்வேதன் மயல்கொடனி மறையை
வாமமுனி மனநல்கு மலரகித வடிவன்
தாமுகுக னிருபாத சலசமலர் சரண
மாமருள்செய் தனிமாவை யடைகுதிநீ யுளமே. 18

## மாலைமாற்று

**வெண்பா**

(ஈறு தொடங்கியும் படிக்க)

நீபா சரவணச தேச நிகழய
வாகா ருடமா நயமேவை — மாமாவை

மேயந மாடரு காவா யழகநிச
தேச ணவரசபா நீ. 19

**கலித்துறை**
(கலிப்பாவுமாம்)

நீர்த்தரங்கக் கடன்மாவை நிற்பாரை நிறைமதிசூழ்
தேர்த்திருவுற் சவயாமந் திக்காளர் திகழநின்று
தூர்க்குமல ரெனவிண்மீன் சுற்றாழ்ந்து சுடரிரதம்
பார்த்தடிதாழ் குவர்செல்வர் தாமாவார் பரனுலகே. 20

2, 10, 12, 14, 16, 18, 20 ஆகிய ஏழும்
பிறிதுபடு பாட்டாய்க் கலித்துறையாதல் காண்க.



**தேர்வெண்பா**

மாவார்பொன் சங்கமும்பூண் மாலம் புயனொலிசீ
ரோவா நபத்தினர்மற் றும்பலரு — மேல்வைதெரி
மாவைதினஞ் செல்லுமன்பர் வாழ்வுறப்பொற் பூவைகு
மாவைப் பதிபநம்முன் வா.

**மாவைத் திருவிரட்டைமணிமாலை முற்றிற்று**



உ

# இரத்தினகிரி பாலமுருகன் பாமாலை

## கா.பொ. இரத்தினம்

உன்பெருமை எல்லாஅம் உளமுருக அடியார்கள்
நன்குரைக்கக் கேட்டுன்னை நானெப்போது அடைந்திடுவேன்
என்றாவல் மிகக்கொண்டேன் இரத்தினப்பேர்க் கிரியிலுறை
துன்றுபுகழ்த் திருமுருகா! துயர்தீர்க்கும் சுடர்வேலா! 1

இன்றென்னை எதிர்பாராது இங்கிழுத்தாய் ஆட்கொண்டாய்
என்றுமுன்னை மறந்தறியா ஏழையரை வாழ்விக்கும்
அன்புருவே! இன்புருவே! அருளுருவே! எழிலுருவே!
துன்புறுத்தும் வினைதீர்க்கும் தூமணியே! திருமுருகா! 2

இருவினைகள் நன்குபோக்கி எனக்கருளும் தெய்வமே! என்
குருவாகி ஆண்டருளும் குமராஎன் உளத்தமர்ந்து
மருள்நீக்கும் நல்மருந்தே! மயிலூரும் மாமணியே!
உருகியுனை நாடுவாரை உய்விக்கும் வித்தகனே! 3

உன்னருளை நாடியுன்னை உள்ளும்போ தெலாம்அருளும்
இன்னமுதே! அருட்கடலே! எங்குமொளிர் பெருமானே!
என்பெயரைப் பூண்டுள்ள இரத்தினநற் கிரிதன்னில்
என்றுமுறை பாலனாக இலங்கிஅருள் பொழிவோனே! 4

முருகனையே எண்ணிஎண்ணி முற்றாத நம்பிநம்பி
உருகுகின்ற அடியார்கள் உய்ந்திடுதல் உறுதியன்றோ!
இரும்புநிகர் மனத்தரையும் ஈர்க்கு மிரத் தினகிரியோன்
அருள்நாடிச் சென்றடைவோர் அறிந்திடுவர் ஐயமின்றி. 5

அமைதியினை நாடுகின்ற அன்பர்காள் கவலைதரும்
சுமைகளினைத் தாங்கியிங்கு சோர்வில்லா உள்ளத்தோடு
எமைவாட்டும் துன்பமின்றி என்றுமின்ப வாழ்வுபெற
இமைப்பொழுதும் மறவாமல் இறைஞ்சுங்கள் முருகனையே! 6

வந்தேன்உன் அருளினாலே வலிந்தீர்க்கும் பாங்குணர்ந்தேன்
சிந்தனைக்கும் எட்டாத திருக்கோலம் கண்டபின்என்
நொந்தவுள்ளம் மகிழ்வெய்த நோயெல்லாம் தீர்ந்ததம்மா!
கந்தனேஎன் தவநிதியே கதிர்வேலா காத்தருள்வாய்! 7

திருமுருகா! ஒருமுதல்வா! தித்திக்கும் புத்தமுதே!
மருவுவார்க்குக் குளிர்மதியே! மறந்திடார்தம் மனவிளக்கே!
உருகுவார்க்குத் தெளிதேனே! உள்குவார்தம் உறுதுணையே!
அருள்நிதியே! அன்பூற்றே! அமரர்ஏறே! அருட்கடலே! 8

இரத்தினநற் கிரிதன்னில் இருந்தென்றும் அருள்சுரப்போய்
இரக்கமின்றி ஈழத்தில் இரவுபகல் ஓய்வின்றி
அரக்கர்போல் எம்மினத்தை அழிக்கின்ற ஆட்சியரைத்
துரத்திவென்று தமிழ்ஈழம் துலங்கிடப்பேர் அருள்புரிவாய்! 9

என்கண்ணும் உள்ளமுடல் எல்லாமே நிறைந்துநின்றே
இன்னுயிரில் ஊனதனில் இலங்குணர்வில் கலந்துளோனே
அன்புடனே நல்லருளும் அறமும்சேர் நெறியினிலே
நன்குசென்று நானிலத்தோர் நல்லமைதி பெற அருள்வாய்! 10

**இரத்தினகிரி பாலமுருகன் பாமாலை முற்றிற்று**



உ

# தொண்டமானாற்றுச் செல்வச் சந்நிதி

# முருகன் பாமாலை

(ஆசிரியர் பலரின் தொகுப்பு)

## சி. ஆ. வேதநாயகன்

### காப்பு

வாரண மாகடல் சூழ்சந் நிதித்தலம் வாழ்குகற்கு
வாரண மாதுவ சற்கோர் பதிகம் வருவித்திடும்
வாரண மாநகி லம்மை யரன்றரு மாணிக்கமாம்
வாரண மாமுகத் தோனிரு பாதமென் வாரிசமே. 1

### பஞ்சாட்சரக்குருக்கள்

செல்வச்சந் நிதியென்னச் செய்வினையெ லாம்மாளும்
செல்வச்சந் நிதியென்னத் தீராநோய் தீர்ந்துவிடும்
செல்வச்சந் நிதியென்னச் சித்தியெலாங் கைகூடும்
செல்வச்சந் நிதிவேலோன் திருவருட் சிறப்பினாலே. 2

#### பன்னிரு சீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்

அஞ்சுக மொழித்தெய்வ யானைவிளை யாடலுறு
மாறிரு புயாசலத்தா
யன்றில்வரை யொடுமாவி ரண்டுபிள வாகிட
வயிற்படை விடுத்ததீரா
செஞ்சரண வாரிசஞ் சூடுமடி யார்களைச்
சித்தியிற் சேர்க்குமீசா
செம்மறித் தகரூர் விசாககங் காசுத
சிறந்தமுற் கூடறன்னி

னஞ்சுகந் தருள்சொக்க ரீந்தமெய்ப் பலகையிடை
நல்லுருத் திரசன்மனாய்
நண்ணிமெய்ப் பொருளைவிழி நீரினாற் காட்டியரு
ணாதகுக கார்த்திகேய
தஞ்சமொன் றிலேற்குணர் வளித்திரட் சித்திடுகை
சாமியுன் பாரமாகுஞ்
சந்நிதித் தலமேவு மையனே துய்யனே
சரவணோற் பவமெய்யனே. 3

பசியினாற் பிணியினான் மிடியினா லிடியினாற்
பாந்தளாற் புட்கரத்தாற்
பகைவராற் கள்வராற் பில்லிசூ னியமதாற்
பாராளு மிறைவர்தம்மாற்
சுசியினாற் படையினான் மருத்தினான் மண்ணையாற்
சோர்விலா மிருகவகையாற்
றொடர்நமன் றூதரா லினையபிற வற்றினாற்
றுயருற்றி னைந்திடாது
வசியிலே னுய்ந்திடக் காப்பதுன் கடமைதென்
மலயமார் குறுமுனிக்கு
மறைமுதற் பொருள்செவி யுணர்த்து மாசாரிய
வரைசடாட் சரரூபனே
சசியினா சியதெய்வ யானைகுற மங்கைநற்
றவபரா பரசின்மய
சந்நிதித் தலமேவு மையனே துய்யனே
சரவணோற் பவமெய்யனே. 4

## ச. வயித்தியலிங்கபிள்ளை
## பிள்ளைத் தமிழ்

நாக மரத்திற் பிரவாள நல்ல கொடியால் யாப்புறுத்து
நறிய முத்தம் பொதிபலகை நாட்டு மூசன்
மிசைமட்வார்
மேக நிகர்த்த குழலவிழ வீசி யாட வத்துரும்ம்
விளங்கு முத்தா பலந்தரல்போல் வீயை யுகுக்கும்
வளமுடைய
சோக மொழிக்குந் தொண்டைநகர்ச் சோதி யுறுவேற்
கரமார்செஞ்
சுடரே தூய்மை யுறுமணியே சுருதி யோடு விண்ணவரும்



யோக விருடி களும்வணங்கு மொருவா முத்தந்
தந்தருளே
யுயர்செல் வச்சந் நிதிவாழு மொளியே முத்தந்
தந்தருளே. 5

வானிலுயர் வரைமீது திரிகரிக ளங்ஙனம் வந்துபடி முகில்
கிழித்து
வாரியுண் டிடியினை வெகுண்டெடுத் துதறியே
வருதடித் தைப்பிடித்தங்
கானபிடி மீப்போர்வை யென்னப் புனைந்தஃதை யன்புறச்
செய்துமிகுகா
மாசையொடு கூடிவிளை யாடிடு வளஞ்செறியு
மத்தொண்டை நாடதனில்வாழ்
மானமுறு வேலசுர ராஜகன் னிகைமேவு மருமமல
விருளகற்று
மாண்புபெறு சோதியடி மன்னவிரு வினையொப்பு
வருமடியர் தம்மையினிதே
வானவரு மேவல்புரி யுயர்நிலையின் வைத்தருளு மஞ்ஞை
வாகனவருகவே
வளமுற்ற சந்நிதியி லுளமுற்று வளருமொரு மழவுச்
செவ் வேள்வருகவே. 6

## அலங்காரம்

### கட்டளைக் கலித்துறை

திருவாரும் பொன்னக ரிந்திர னாதிய தேவர்தொழு
மருவாரும் வெட்சி புனையடி மாமயில் வாகனனைத்
தருவாருஞ் சோலை செறிசந் நிதிவளர் தற்பரனைப்
பரவார் வினையறு மோதெரி யார்பஞ்ச பாதகரே. 7

பெருவாழ் வடையுந் தவமுன் செயாதவிப் பேதமையேன்
கருவாழி தன்னைக் கடந்திட வேநற் கருணைசெய்வாய்
அருவா யருவுரு வாயுரு வாய்மன் னரன்மதலாய்
திருவாழுஞ் சந்நிதித் தேவே யமர சிகாமணியே. 8

காலா யுதக்கொடி யோன்மயில் வாகனன் கைத்தலஞ்சேர்
வேலாயு தன்றிருச் சந்நிதி வாழ்பரன் மேவடியார்
பாலாய தம்புரி சூருங் கழுதும் பகையரவுஞ்
சூலா யுதகர காலனும் பின்னிடத் தோன்றுவனே. 9

கோங்கரும் பன்ன முலையார்த மின்பைக் குறித்துமய
லோங்கு மடமன மேகதிர் காம வுயர்சந்நிதிப்
பாங்கமர் சேய்குகன் செவ்வேண் முருகன் பதாம்புயத்தை
நீங்க லிலாது குறிப்பாய் வருமுத்தி நிச்சயமே. 10

செல்வத் திருச்சந் நிதிவாழ் முருகன்றன் சிற்றடிச்சீர்
கல்விப் பயிற்சியி னாடொறு மோதிக் கடலுலகிற்
சொல்வைத்த புண்ணியர்க் கெட்டுணை யாயினுஞ் சோறிடுவார்
அல்லற் படாரடை வாரம ராபதி யந்தியத்தே. 11

சீரார் திருச்சந் நிதிவளர் தேவைத் தினந்தொழுதால்
வாராது தீயது நன்னருண் டாந்திரு மல்குநெஞ்சே
பேராத சீலம் பெறலா மதைவிட்டுப் பேதைமையிற்
சேரா வமயத்தை வாளா கழிப்பது சீரிதன்றே. 12

ஆதார மற்ற வெளியே னினதரு ளைப்பெறவே
நீதா னுஞ்சற்று மிரங்கிலை யேசந் நிதியில்வளர்
போதாரயன் முதற் புங்கவர் யாவரும் போற்றுதண்டைப்
பாதார விந்த முடையவ னேகிரு பாகரனே. 13

கதிர்காம மென்னுந் திருச்சந் நிதிவளர் கற்பகமே
முதிர்தீ நறுங்கனி யேகுற மாதுறு மொய்ம்பகலக்
கதிர்காம னார்செங் கடம்பணி வேணியன புயத்தாட்
பொதிர்தே மருந்து பதமெனக் கீந்தருள் புண்ணியனே. 14

எந்தாய் நமசெல்வச் சந்நிதி வாழு மிறைவநம
கந்தா நமசெங் கடம்பா நமசங் கரநுதற்கண்
வந்தாய் நமசெங்கண் மான்மரு காநம மாதுமையாண்
மைந்தா நமவென் பவரை யுறாது வருவினையே. 15

எண்ணற் கரும்பவ நண்ணுற் றலையுமெ னேழைநெஞ்சே
வண்ணப் பதம்பெற் றழிவின்றி வாழ வகையொன்றுகேள்
தண்ணுற்ற தண்டலை சூழ்செல்வச் சந்நிதிச் சண்முகனைக்
கண்ணிக் கசிந்து தொழுதிடு வாயது கைவருமே. 16



பேய்மன னேசெல்வச் சந்நிதி வாழ்பெரு மாள்கரமார்
காயயில் வேலுங் கொடிக்கோ ழியுமவன் கார்மயிலும்
ஆயவ னன்பர்க் குறுதுணை யேயவ னம்புயத்தாள்
மாய மலமறுக் கும்மருந் தேயவை வாழ்த்துதியே. 17

## மாலை

பூமேவு நற்சந் நிதிவாழும் புங்கவனைத்
தேமேவு செங்கடம்பார் திண்புயனைத் - தூமேவு
கூர்வே லனைப்புகழக் குன்றவினை தான்சிதையுஞ்
சூர்போ மென்னெஞ்சே துதி. 18

உடற்பிணிபோ முள்ளத் துறுதுயர்போம் பேய்போ
மடற்பகைபோ மின்மைபோ மையன் - றடக்கொற்ற
வேலன் றிருச்சந் நிதிவாழ் விசாகன்பொற்
காலைநெஞ்சே நித்தங் கருது. 19

தெய்வத்தா லன்றியொன்றுஞ் சேராதென உணர்ந்தோர்
மெய்வைத்த நூலால் விளக்கவும் - பொய்வைத்த
பொன்னா தியனாடும் புந்தியைநற் சந்நிதியின்
மன்னாவுன் றாணாட மாற்று. 20

## திருப்பள்ளியெழுச்சி

தோத்திர மிசைத்திடு மடியவ ரொருபாற்
 சுற்றியஞ் சலிசெயு மடியவ ரொருபாற்
காத்திடு கெனவரு மடியவ ரொருபாற்
 கைகுவித் தேதொழு மடியவ ரொருபாற்
பூத்திரள் சிந்திடு மடியவ ரொருபாற்
 பொற்புற வெங்கணு நிறையவந் தடுத்தார்
நேத்திர மணியன குருபர வளச்சந்
 நிதியர சேபள்ளி யெழுந்தரு ளாயே. 21

மணிமயி லதன்மிசை நீயிருந் தாங்கு
 மறிகடன் மிசையொருகதிரவ னுதித்தான்
அணியுறு மரைமலர் நினதரு ளடைந்த
 வன்பர்த முகமென விகசித மான

கணியுறு புனமதில் வருகுற மாது
 காதலொ டணைதரு வாகுமுந் நான்கா
நிணமுறு படைநிசி சரர்தமை யடுசந்
 நிதியர சேபள்ளி யெழுந்தரு ளாயே. 22

## அடைக்கலப் பத்து

சிந்தா மணியே தெள்ளமுதே தேனே தித்திக் குங்கழையே
நந்தா வொளியே யிருளகற்று ஞான வொளியே கயமுகத்து
கொந்தார் மதலை யணிதருமங் குசபாசக்கை யோன்றுணையே
அந்தா ரடவிச் சந்நிதியா யடியே னுன்ற னடைக்கலமே. 23

## சு. வெற்றிவேற்பிள்ளை

## நான்மணி மாலை

மாண்டும் பிறந்து மயங்குவ தன்றியுன் மாணடியை
வேண்டுந் தவங்கள் புரிந்து பரசுக மேவிலனா
லாண்டும்விண் ணாட்டை யவனியை யென்னவிர் சந்நிதியாய்
மாண்டுங்கப் போதி லயனைச் சிறைவைத்த மன்னவனே. 24

சேவிக்க வேண்டுந் திருமால் வணங்கிடுந் தேவரசை
யாவிக் கருமுயி ரானநற் சன்னிதி யந்தணனை
வாவிக்குக் கீரிமலைத் தீர்த்த மாவையின் மன்னிணுவிற்
பூவிக்கு நல்லூர் தனிற்கந்த மாவனப் பொற்பதிக்கே. 25

தாங்கற் கரிய வினையான திங்குத் தளருமெனைத்
தாங்கற் கரியகலை யுணரேனைத் தகித்திடுமா
லேங்கற் கரிய மலச்சேட்டை தன்னையின் றின்மைசெய்வா
யாங்கற் கரியவ னுந்துதி சந்நிதி யந்தணனே. 26

## சி.ஆ. வேதநாயகன்

## தனிப்பாடல்

இப்பவோ பின்னையோ மத்தியா னத்திலோ
 இரவிபடு நேரமதிலோ
 இரவிலோ பகலிலோ உதயகா லத்திலோ
 எந்தெந்த நேரமதிலோ



அப்பிலோ தீயிலோ பேயிலோ காற்றிலோ
 அரவுபெரு மிடியதனிலோ
 ஆறாத புண்ணிலோ நடைநோவு தன்னிலோ
 ஆயுதங் களினாலேயோ
செப்பரிய வீட்டிலோ காட்டிலோ மேட்டிலோ
 தெருவிலோ திண்ணைதனிலோ
 சிந்தைமய லில்லாம லெனதாவீ பிரியவே
 சித்தம்வைத் தெனையாளுவாய்
ஒப்புயர்வி லாதவென தப்பனே செப்பரிய
 உண்மையுணர் வானசெல்வம்
 உறைகின்ற சந்நிதியில் முறைநின்று காத்தருளும்
 ஓங்கார வடிவேலனே. 27

## வேலாயுதக் கண்ணி

செல்வமுறு சந்நிதிவாழ் செவ்வேளடி போற்றி
யல்லலகற் றப்பணிந்தே னானைமுகத் தையாவே

அஞ்சுக மாற்றியன்பர்க் காறுமுகங் காட்டவந்த
தஞ்சமலர்ப் பாதாபொற் சந்நிதி வேலாயுதனே

கல்லாத மூடனுக்கோர் காட்சியுண்டோ மாட்சிசெறி
சல்லாபா போற்றுசெல்வச் சந்நிதி வேலாயுதனே

ஆறுமுகத் தையாவே யன்பார்பொற் சந்நிதியாய்
தேறுமுக மாகவருள் செய்வாய் வேலாயுதனே

துர்க்குணங்க ணீக்கியெனைச் சுத்தநிலை மேவவைப்பாய்
சற்குணத்தர் போற்றுசெல்வச் சந்நிதி வேலாயுதனே

கண்கலக்கந் தீர்த்தென்னைக் காப்பா யெனவடைந்தேன்
விண்கலக்கந் தீர்த்தசெல்வச் சந்நிதி வேலாயுதனே

கொல்லா விரதநிலை கூடியினி வாழ்வதென்றோ
சொல்லாய்பொற் சந்நிதியார் சோதிவே லாயுதனே

ஏழா யெனவுலக மேசாமற் போதநெறி
தாழா தருள்செல்வச் சந்நிதிவே லாயுதனே

துரையே யுனைப்பணிந்தேன் றுன்ப மெலாந்தீர்க்கத்
தரையார்பொற் சந்நிதியிற் சார்வேன்வே லாயுதனே.

பூவனப்பொற் சந்நிதிவாழ் புண்ணியனே தொண்டுசெயாப்
பாவி யெனக்குமுண்டோ பண்புசொல் வேலாயுதனே

போற்றுசெல்வச் சந்நிதியாய் பொற்பார் நக்கீரருக்குச்
சாற்றரிய துன்பம் தவிர்த்தாய் வேலாயுதனே

கலியுகத்தின் தோஷமெலாங் காணாவே செல்வம்
பொலிசந் நிதியிலுனைப் போற்றிடில் வேலாயுதனே.

கந்தாகுகா செல்வச் சந்நிதிவாழ் கர்த்தாவென்
சிந்தைநோய் தீருந் திறமருள் வேலாயுதனே

நாய்போ லலைந்திளைத்தே னாதாபொற் சந்நிதியாம்
தாய்போலக் காக்கத் தகும்தகும் வேலாயுதனே

கண்ணீர் சொரியவிரு கைகூப்பித் தெண்டனிட்டார்க்
கண்மைய னாவான் செல்வச்சந்நிதி வேலாயுதனே.

**தொண்டமானாற்றுச் செல்வச் சந்நிதி முருகன் பாமாலை முற்றிற்று**



உ

# தயாநிதி மாலை

## கந்தப்ப அய்யர்

நீர்அணிமலர் கொண்டு அருச்சனை புரியேன்;
    நின்திருத்தாள் பணிந்து அறியேன்;
சீர்அணி தமிழால் ஏத்தவும் அறியேன்;
    தீவினை தொலைத்து, அருள்புரியாய்!—
பூரணி உலக காரணி, இமயப்
    பொருப்பு-இறை அளித்த முக்கண்ணி,
ஆரணி, விமலை, அருள்செருத் தணிகை
    ஆறு மாமுக தயாநிதியே! 1

நீதியும் அறியேன்; நெறிகளும் அறியேன்;
    நின்திருப் புகழ் அனுதினமும்
ஓதியும் அறியேன்; ஆயினும் வரங்கள்
    உகந்து எனக்குஅருள் புரிந்திடுவாய்!—
சாதியும் குரவும் வேங்கை குங்குமமும்
    சந்தனங் களும்மணம் குலவும்
ஆதிஎம் பரமன் அருள்திருத் தணிகை
    ஆறு மாமுக தயாநிதியே! 2

எண்ணிலேன், உனது சடக்கரம் அதனை;
    இருந்தவம், நோன்பு, நல்விரதம்
பண்ணிலேன்; துதிகள் படித்திலேன்; அதிக
    பாவியேன்தனக்கு அருளுவையோ?—
விண்ணில், வானவர்தம் சிறைதனைத் தவிர்த்து,
    வேண்டிய வரங்களை அளித்த
அண்ணலே! தணிகைப் பதிதனில் உறையும்
    ஆறு மாமுக தயாநிதியே! 3

முன்செய் தீவினையோ; பின்செய் தீவினையோ
மூண்டது? நல்குரவு—அதனுக்கு
என்செய்கேன், அடியேன்! துயர்களைந்து உயர்வீடு
எனக்குஅருள் செய்யும் நாள்உளதோ?—
மின்செய் நூல்இடையாள் வேடர்தம் சிறுமி
விரும்பிவாழ் தினைப்புனம்—அதனில்
அன்புசேர் கணியாய் நின்றிடும் தணிகை
ஆறு மாமுக தயாநிதியே! 4

காதரம் அனைத்தும் தொலைத்து, உனது அடியைக்
காட்டி,உன் அடியரில் கூட்டி,
சீதரன் பிரமன் அறியொணா வீட்டில்
சேர்த்தி ஆட்கொள்ளும் நாள்உளதோ?—
பூதரம் அனைய சிங்கமா சூரன்,
பொருகரிமுகன், அசுரேசன்
ஆதரம் அனைத்தும் தொலைத்திடும் தணிகை
ஆறு மாமுக தயாநிதியே! 5

மேருவைச் சேரும் காகம் பொன்நிறமாய்
விளங்கல் போல்,உன் அடிக்கமலச்
சாருவைச் சேரும் எனையும் நின்அடியார்—
தம்மொடும் கூட்டி ஆண்டருள்வாய்!—
தாருவைச் சேரும் வல்லிபோல் இருவர்
தனம்பட விளங்கு திண்புயனே!
ஆர்உவப் புடன்வா னோர்பணி தணிகை
ஆறு மாமுக தயாநிதியே! 6

சிவனடி யவருக்கு இடர்புரிந் தாலும்,
தீவினை பலபுரிந் தாலும்,
பவநெறிக்கு உரிய பாவமே செயினும்,
பஞ்ச பாதகங்கள் செய்தாலும்,
தவநிலை குலையத் தாழ்வு செய்தாலும்,
சமித்து, எனைப் புரந்து அளித்திடுவாய்!—
அவன்அவள் அதுவாய் அமர்திருத் தணிகை
ஆறு மாமுக தயாநிதியே! 7

சிறப்பொடு பூசை புரிகிலேன் எனினும்,
சினகரம் வலம்புரி யாமல்



மறப்பொடு நிலத்தில் துட்டரோடு இணங்கி
வாய்மையைப் புகல்கிலேன் எனினும்,
பிறப்புடன் இறப்புஆம் கடல் அழுந்தாமல்,
பிரசமா மலர்ப் பதம்தருவாய்!
அறப்பணி புரிவோர்க்கு அருள்திருத் தணிகை
ஆறு மாமுக தயாநிதியே! 8

பஞ்ச பாதகமே புரிகினும், முன்னைப்
பவம்தொறும் தீமை செய்திடினும்,
தஞ்சம்நீ எனவந்து, அடைந்திடும் கொடியேன்—
தன்பிழை பொறுத்து நல்வரங்கள்
விஞ்சவே அருளிஎனைப் புரந்தி டில்,உன்—
மேல்பிழை சொல்பவர் உளரோ?—
அஞ்சவா கனனுக்கு அருள்திருத் தணிகை
ஆறு மாமுக தயாநிதியே! 9

மழைஇலாப் பயிர்போல் வாடினேன் கருணை
மழைபொழிந்து, யான்முனம் புரியும்
பிழைஎலாம் பொறுத்துப் பெருவரம் அளித்து,
பேயனேன் காண வந்துஅருள்வாய்!—
தழைஎலாம் கீழாய் விண்ணில் வேர்ஓட்டும்
சலதி மாமரம்தனைப் பிளந்த
அழகனே! தணிகை மலையில் வீற்றிருக்கும்
ஆறு மாமுக தயாநிதியே! 10

மந்தரம் அனைய பாவமே செயினும்,
வல்வினை பலபுரிந் திடினும்,
பந்தனைப் பிறப்பில் அழுந்தினும், உனது
பங்கயப் பாதம் நான்மறவேன்—
சுந்தர முகுந்தன் மருகனே! அடியர்
துயர்எலாம் தவிர்த்த சற்குருவே!
அந்தரத்தவர் நின்று அருச்சனை புரியும்
ஆறு மாமுக தயாநிதியே! 11

துக்க சாகரத்தில் அழுந்தி எந்நாளும்
தொலைவுஇலாக் கவலை நோய்அடைந்து,
மிக்க பேர்அறிவு குலைந்து நான்புவியில்
வீணிலே திரிவதும் அழகோ?—

தக்க வாழ்வுஅருளி, உலகுஎலாம் மதிக்கும்
தனி—அரசு எனக்கு அருள்புரிவாய்!—
அக்கு மாலையன் ஈன்றருள் திருத்தணிகை
ஆறு மாமுக தயாநிதியே! 12

இந்திரன் பதமும் இமையவர் பதமும்
எண்திசைக் காவலர் பதமும்
சந்திரன் பதமும் சூரியன் பதமும்
சக்கர மாயவன் பதமும்
கந்தமா மலரோன் பதவியும் உனது
கடைக்கணால் உதவிய பதமே;
அந்த வாறு எனக்கும்அருள்—திருத்தணிகை
ஆறு மாமுக தயாநிதியே! 13

வேண்டிய வரங்கள் பற்பல உதவி,
வேண்டிய செல்வமும் அளித்து,
சேண்தரும் உனது பாதபங் கயத்தில்
செலுத்திடு பத்தியும் அருளாய்!—
தூண்தரு செம்பொற் புயங்கள் பன்னிரண்டும்
துதிப்பவர் பகைஅறுப் பவனே!
ஆண்டலைக் கொடியைப் பிடித்திடும் தணிகை
ஆறு மாமுக தயாநிதியே! 14

பெரியவர்தமக்குப் பிழைபுரிந் தேனோ?
பிறர்மனை தனைவிழைந் தேனோ?
குருமொழி இகழ்ந்து, பழித்து உரைத்தேனோ?
கொடியமா மிடியன்நான் மெலிவேன்!
திருவருள் புரிந்து, தீவினை அகற்றிச்
செல்வமும் கல்வியும் தருவாய்!—
அரிஅயன் பணியும் ஒருதிருத் தணிகை
ஆறு மாமுக தயாநிதியே! 15

மட்டுஇலாப் பாவம் தனைப்புரிந் தாலும்
மலர்அடிக்கு அன்பு இலாதுஉழலும்
துட்டரோடு உறவு செய்திருந் தாலும்
தூயநின் சந்நிதி அடுத்தால்,
விட்டிடாது இன்னும் இருக்குமோ? இதனை
விரித்து நீஎனக்கு உரைத்திடுவாய்!—



அட்டமா சித்தி அருள்செருத் தணிகை
ஆறு மாமுக தயாநிதியே! 16

வாசவன், மலரோன் வேண்டு நல்வரமும்
வாழ்வும் நீதந்தனை, முன்னம்;
நீசனேன் வேண்டும் வரம்உத வாமல்
நிற்பது நீதியோ? உரையாய்!
பேசியே கலியில் வரம்தரும் தெய்வம்
பிறர்இலை எனஉனை அடுத்தேன்—
ஆசுஅறு முனிவர் தவம்செயும் தணிகை
ஆறு மாமுக தயாநிதியே! 17

வெந்தநீறு அணியும் வேதியர் மறையுள்
விதித்திடும் விதிவழி நடப்பது
எந்தநாள்? உனது திருவடிக்கு அன்பாய்
இருப்பதும் எந்தநாள்? உரையாய்!—
இந்துசே கரனுக்கு ஓம்எனும் பொருளை
இருஞ்செவி யிடைப்புகல் குரவா!
அந்தம் ஆதியும் நீங்கிடும் திருத்தணிகை
ஆறு மாமுக தயாநிதியே! 18

மனம்தனில் உனது திருஉரு நினைக்க,
வாயினால் உன்புகழ் வழுத்த,
கனம்தரு தலையால் உன்கழல் இறைஞ்ச,
கசடனேற்கு என்று அருள்புரிவாய்!—
தனம்தரும் அளகைக்கு அதிபதி தோழன்
தந்தருள் மயூர வாகனனே!
அனந்தனும் பணியும் ஒருதிருத் தணிகை
ஆறு மாமுக தயாநிதியே! 19

பாயும் மாமதம் சேர்மத கரிபோலப்
பற்பல தீங்கு செய்திடினும்,
நீயும்ஓர் அறிவுஆம் அங்குசம் அதனால்
நிறுத்தி, ஆட்கொள்ளும் நாள்உளதோ?—
தாயுமாய் உயிர்க்குத் தந்தையாய் உலகம்-
தனைப்பு ரந்துஅருள் குருபரனே!
ஆயும் மாமறைகள் தேட அருந்தணிகை
ஆறு மாமுக தயாநிதியே! 20

காலமே எழுந்து,உன் திருவடி நினைந்து,
கரமலர் பறித்து, நின்பூசை
சாலவே புரியாது உழலும் நாயடியேன்
தனக்குஅருள் புரிவது என்று? உரையாய்!—
நீலமா மயில்மேல் ஏறி,ஓர் நொடியில்
நிலவுலகு எலாம்வலம் வருவாய்!
ஆலமா மிடற்றோன் அருள்செருத் தணிகை
ஆறு மாமுக தயாநிதியே! 21

மாஇரும் புவியில் மனிதராய்ப் பிறந்து,
வண்டரை மதன்எனப் புகழ்ந்து,
போய்இரந்து உண்ணும் புலவர் நின்கமலப்
பொன்அடி காண்பதற்கு எளிதோ?—
தாய்இரங் காத பிள்ளைபோல் அடியேன்
தவிப்பது நீதியோ? உரையாய்!—
ஆயிரம் கதிரோன் பணிதிருத் தணிகை
ஆறு மாமுக தயாநிதியே! 22

சாத்திரம் அறிந்து,உன் திருவடிக் கமலம்—
தன்னையும் அருச்சனை புரியேன்;
பாத்திரம் அறிந்து பிச்சைஇட்டு அறியேன்;
பாவியேன் உய்யும் நாள்உளதோ?—
காத்திரம் படைத்த சிங்கமா சூரன்
கவிழ்ந்திட, அயில்விடுத் தவனே!
ஆத்திரள் மேய்த்தோன் மருகனே! தணிகை
ஆறு மாமுக தயாநிதியே! 23

காகமும் நரியும் தமதுஎனும் உடலைக்
காதலித்து உலகுஎலாம் அலைந்து,
சோகமும் துயரும் படைத்த நாயடியேன்
துயர்கெட, அருளும்நாள் உளதோ?—
மாகமும் சுரரும் வாழ்ந்திட, சூரன்
மடிந்திட வேல்எறிந் தவனே!
ஆகமம் புகலும் உயர்திருத் தணிகை
ஆறு மாமுக தயாநிதியே! 24

நிலைஇலாப் பொன்னும் நிலைஇலா மண்ணும்
நிலைஇலாப் பெண்ணையும் நினைந்து,



கலைஇலா உணர்வோடு எங்கணும் மயங்கும்
கசடனேன் உய்யும்நாள் உளதோ?—
தலைஇலாக் கவந்தம் எண்இல நடிப்ப,
தகுவர்தம் சென்னியைத் தடிந்தோய்!
அலைஉலாம் சுனைசேர் தணிகைமால் வரைவாழ்
ஆறு மாமுக தயாநிதியே! 25

திக்குவேறு இலை,உன் திருவடி அல்லால்;
தீயனேன் குறைஎலாம் புகன்றும்,
மிக்கபேர் அருளைப் புரிந்திடாது இருந்தால்,
மெய்அருள் பொய்எனப் படுமால்;
இக்கணம் தனிலே வேண்டிய வரங்கள்
ஈந்து,நல் வாழ்வு தந்துஅருள்வாய்!—
அக்கம் ஈராறு படைத்திடும் தணிகை
ஆறு மாமுக தயாநிதியே! 26

உனதுமா மலையைத் தினம்வலம் புரிந்தும்,
உபாசனை செய்து இரந்திடினும்
எனதுதீ வினையைத் தடிந்துஅருள் புரியாது
இருப்பதும் உனக்கு அழகியதோ?—
சனகனே முதலாம் முனிவரும் கமலத்
தவசினோன் ஆதி விண்ணவரும்,
அனகனே!' என வாழ்த்து எடுத்திடும் தணிகை
ஆறு மாமுக தயாநிதியே! 27

பழிஇலா உடலும், பயம்இலா மனமும்,
பாதகத்து உடன்படாச் செயலும்,
கழிவுஇலா வயதும், குறைவுஇலாத் தனமும்,
கடும்பகை தான்இலா அரசும்,
ஒழிவுஇலா அறமும் இழிவுஇலாக் கதியும்
உனதுஅடி நம்பினேற்கு அருள்வாய்!—
அழிவுஇலாப் பதவி அருள்செருத் தணிகை
ஆறு மாமுக தயாநிதியே! 28

படைக்கலம் சுமந்து, பகைவரைத் தடிந்து,
பார்எலாம் ஒருதனி ஆண்டு,
மடைக்கலம் சுமந்த மகளிரைப் புணர்ந்து
மைந்தரும் வாழ்வுமே சிறந்து,

கொடைக்கு அலம்இலாது கொடுத்திடு நிதியும்
குலவும்உன் கருணைஎன்று அறிந்து,உன்
அடைக்கலம் புகுந்தேன்—அருள்புரி தணிகை
ஆறு மாமுக தயாநிதியே! 29

காலையில் எழுந்து, மஞ்சனம் ஆடி,
கால்களால் வலம்செய; உச்சி
வேலையில் அடியார் பசிகெடச் சமைத்து,
விருந்து செய்வித்திட; அந்தி
மாலையில் தூபம் தீபமும் ஏற்றி
மகிழ்ந்திடும் பேறுஎனக்கு உதவாய்!—
ஆலைஅம் கழனி சூழ்திருத் தணிகை
ஆறு மாமுக தயாநிதியே! 30

குங்குமம் புனுகு சந்தனம் அகரு
குற்குலு கற்புரம் மருவேர்
பைங்கருங் குவளை தண்புனல் கொடுநின்
பதமலர் அருச்சனை புரியும்
புங்கவர் அடிக்குற் றேவல் செய்துஒழுகும்
புண்ணியம் எனக்கு வந்துஉறுமோ?—
அங்குச பாசன் தம்பிஆம் தணிகை
ஆறு மாமுக தயாநிதியே! 31

நீதியோ உனக்கு? நான்வெகு நாளாய்
நின்திருச் சந்நிதி அடுத்தேன்;
சேதி யாவையுமே செப்பினும் கேளாச்
செவிடர்போல் இருப்பது இங்குஅழகோ?
ஓதுவாய் ஒருசொல், உண்டுஇலை என்ன!
உனக்குநான் அடிமையும் அலவோ?—
ஆதியே! நடுவே! அந்தமே! தணிகை
ஆறு மாமுக தயாநிதியே! 32

கார்த்திகை விரதம் தனைமறந் தேனோ?
கந்த சஷ்டியில் பிழைத்தேனோ?
தோத்திரம் செய்யும் தொழில்மறந் தேனோ?
துணைஅடிக்கு அன்பு ஒழிந்தேனோ?
பாத்திரம் கொண்டு பலிக்கு உழலாமல்
பாவியேன் துயர்களைந் திடுவாய்!—



ஆத்தர்கள் துணையாய் வளர்திருத் தணிகை
ஆறு மாமுக தயாநிதியே! 33

கொடியவர் உறவே கொண்டிருந் தேனோ?
கொடுவ ழுக்கிடை தவறினனோ?
குடிம னையவள் கற்பினை அழித்தேனோ?
குற்றங்கள் பலபுரிந் தேனோ?
மிடிஉறு தமியேன் துயர்எலாம் தவிர்த்து
வேண்டிய செல்வம் நீஅருள்வாய்!—
அடியவர் துணையாய் வரும்திருத் தணிகை
ஆறு மாமுக தயாநிதியே! 34

செங்கதிர் உலவும் உலகுஎலாம் உலவித்
திரிந்து, ஒருசாண் வயிற்றினுக்குக்
கங்குலும் பகலும் இரையினைத் தேடும்
கயவனேன் உய்யும்நாள் உளதோ?—
சங்கரன் மகனே! சதுமுகன் குருவே!
தயித்தியர் தம்குலப் பகையே!
ஐங்கரன் துணையே! உயர்திருத் தணிகை
ஆறு மாமுக தயாநிதியே! 35

நாரியர்க்கு இரங்கி, மதனநூல் படித்து,
நயம்பெறு சன்னைகள் பேசி,
போர்இயல் கலவிக்கு ஒருபெரும் புலிஆம்
புல்லியன் உய்யும்நாள் உளதோ?—
நீர்இயல் கமல மலரினோன் சிரத்தில்
நீண்ட அங்குலியினால் புடைத்தாய்,
ஆருயிர்க்கு உயிராய் வளர்திருத் தணிகை
ஆறு மாமுக தயாநிதியே! 36

குமரனாய் விருத்தக் கிழவனாய் உடலம்
கூனொடு நரைதிரை கொண்டு,
தமர்எலாம் இகழ, உயிர்அகல் பொழுதும்,
'சரவண பவ!' எனார் உடலம்
கமரிலே புகும்பால் எனப்படும்; அவர்க்குஓர்
கதியுமே இலைஎனப் படுமால்;—
அமர்எலாம் கடந்த தணிகைமால் வரைவாழ்
ஆறு மாமுக தயாநிதியே! 37

கருவி ஓர்முப் பத்தாறினால் விளங்கும்
காயமோடு இருநிலம் சுவர்க்கம்
மருவியே திரிந்து பிறந்து இறந்து,உழலும்
மடையனேன் உய்யும்நாள் உளதோ?—
குருவி ஓட்டிய வேட்டுவக் குலமகளிர்
குலவிய சாரலில் செந்தேன்
அருவி பாய்ந்து இழியும் தணிகைமால் வரைவாழ்
ஆறு மாமுக தயாநிதியே! 38

மாவிருந் தினர்தம் பசிகெட உதவும்
வண்மை தந்து, உடல்விடும்பொழுது,
பூவி ருந்தவனும், மாயனும் காணாப்
பொன்அடி நீழல் தந்தருள்வாய்!—
கோவி னம்பயில் செந்தூர், பரங்குன்று,
குன்றுதோ றாடல், சோலைமலை,
ஆவி னன்குடி, ஏரகம் பயில்தணிகை
ஆறு மாமுக தயாநிதியே! 39

செறுவியாய் அகந்தை பலபுரிந் திடினும்
கெண்டைவாள் விழியினார் கலவி
உறுவியா தியினால் உனைமறந் திடினும்,
உறுபிழை பொறுத்து அருள்புரிவாய்!—
மறுஇலாக் கற்பின் வள்ளி தெய்வானை
மணந்திடு மணிவரை மார்பா!
அறிவினோர் அறிவாய் ஒளிர்திருத் தணிகை
ஆறு மாமுக தயாநிதியே! 40

தேன்இலங் கியசொல் மாதரார் வயிற்றில்
திங்கள் ஈரைந்தும் உள்தங்கி,
நானிலம் தனிலே இனிப்பிற வாமல்
நாயினேற்கு அருள்புரிந் திடுவாய்!—
ஊன்இ லங்கிய வானவர்களும் அறியா
யோகியர் மனத்திலே விளங்கும்
ஆனில் ஐந்துஆடும் அரன்அருள் தணிகை
ஆறு மாமுக தயாநிதியே! 41

மன்னவன் மகனை அடுத்திடின், பெரிய
வாழ்வினை அடுத்தபோது அளிப்பான்;



பின்னல்அம்சடை உன்பி தாவினை அடுத்தால்
பெரிதுநாள் செல்லும் என்றுஅறிந்தே
உன்னைவந்து அடுத்தேன்; ஆதலால் செல்வம்
உரைத்திடும் முன்எனக்கு அளிப்பாய்!—
அன்னமென் நடையார் பயில்செருத் தணிகை
ஆறு மாமுக தயாநிதியே! 42

பகலினும் இரவும் உண்டு உடுத்துறங்கும்
பயன்அலாது ஒருபயன் அறியேன்;
புகல்அரும் பரமா னந்த வாரிதியில்
புகுவது எக்காலமோ? உரையாய்!—
இகலும் முப்புரங்கள் தழல்எழச் சிரித்த
இறையவன் நுதல்விழிப் பிறந்தோய்!
அகில்இடும் தூபம் முகில்நிகர் தணிகை
ஆறு மாமுக தயாநிதியே! 43

குருபரன் எனும்பேர் உனக்குஅலாது எவர்க்குக்
கூறும் நான்மறைகள்? ஆதலினால்,
திருவடி நிழலில் எனைவிடாது இருத்தத்
திருவருள் புரிகுவது அரிதோ?—
பொருகரி வதன னொடுகிர வுஞ்சம்
பொடிபட அயில்எறிந் தவனே!
அருவுடன் உருவாய் ஒளிர்திருத் தணிகை
ஆறு மாமுக தயாநிதியே! 44

நித்திரை தனிலும் குத்திரம் புரியும்
நினைவு ளேன்,உன் திருவடியைப்
பத்திரம் புனல்கொண்டு அருச்சனை புரிந்து
பரகதி அடையும்நாள் உளதோ?—
சித்திரக் கலாப மயில்மிசை ஏறிச்
செகம்எலாம் நொடிவலம் புரிவோய்!
அத்திர விழியார் நடம்செயும் தணிகை
ஆறு மாமுக தயாநிதியே! 45

கணுமுதிர் கருப்பஞ் சிலையினை வளைக்கும்
காமனை வென்ற மாதவர்கள்
நணுகுஇரு சரண பங்கய மலரின்
நறவினைப் பருகும்நாள் உளதோ?—

எணும்ஒரு நொடியில் மேருவை அணுவாய்
இயற்றுவை; இதற்கு மாறாக
அணுவையும் மேரு ஆக்கிடும் தணிகை
ஆறு மாமுக தயாநிதியே! 46

மனாதி ஐம்பொறியின் வழிக்கொடு நடந்து
மருவும் ஐம்புலன் நுகர்ந்திடினும்,
கனாவொடு பேய்த்தேர் எனப்படும் உலகைக்
கண்டு மெய்என மயங்குறினும்,
எனாதிஎன்று உனையே நினைத்து அனுதினமும்
ஏத்திடும் செல்வமே அருள்வாய்!
அனாதியே உயிர்க்குத் துணையதாம் தணிகை
ஆறு மாமுக தயாநிதியே! 47

வையம் முற்றினும் போய், கங்கை யேமுதலாம்
மாநதி பலபடிந் திடினும்,
துய்யநல் தலங்கள்தொறும் இனிது அடைந்து,
துணைக்கையால் தொழுது வாழ்த்திடினும்,
செய்யநின் தணிகைக் கிரியினை அணையார்
சிவகதி அடைகுவது அரிதே;—
ஐயம் இட்டுஉணும் மா தவர் உளத்து இருக்கும்
ஆறு மாமுக தயாநிதியே! 48

முந்தைநல் வினையால் வந்து மானிடராய்
முதுநி லம்தனில் அவதரித்தும்,
வந்தனை புரியாது, உண்டுஉடுத்து உழலும்
மக்களில் வானரப் பிறப்பே
நிந்தனை அறியா நல்பிறப்பு ஆகும்,
நீதி ஒன்று அறிகிலாமையினால்;—
அந்தணர் மகம்செய் தணிகைமால் வரைவாழ்
ஆறு மாமுக தயாநிதியே! 49

வேரலில் பிறந்த செந்தழல் அந்த
வேரலை முருக்கிடும் செயல்போல்
பேர்உடற் பிறந்த காமம் இவ்உடலைப்
பிணிபட முருக்குது, என்செய்வேன்!—
சாரலில் குறவர் கிழங்குஅகழ் குழியில்
தரளமொடு அணிகொள் வச்சிரமும்



ஆரவே நிறைக்கும் அருவிதாழ் தணிகை
ஆறு மாமுக தயாநிதியே! 50

பிறந்து இறந்து உழலும்பெரு வியாதியையும்,
பெரும்பசி நோய்சுடத் தளர்ந்து
நிறம்குலைந்து ஒருவர்பின் திரிந்து உழலும்
நிரப்பு எனும்குறு வியாதியையும்,
திறந்துஅருள் கடைக்கண் பார்வைஆம் மருந்தால்
தீர்த்துஅருள் புரியும்நாள் உளதோ?—
அறம்பொருள் இன்பம் வீடுஅருள் தணிகை
ஆறு மாமுக தயாநிதியே! 51

திரைக்கடல் உடுத்த நிலத்திடை அழியாச்
செல்வமும் கல்வியும் அறிவும்
இரப்பவர்க்கு இலைஎன்று உரைத்திடாது உதவும்
ஈகையும் எனக்கு அருள்புரிவாய்!—
புரக்கும் ஐந்தரு, மாநிதி, மணிகவர்ந்து
புலவருக்கு இடுக்கணே புரிந்த
அரக்கரை அழித்த செருத்தணி மலைவாழ்
ஆறு மாமுக தயாநிதியே! 52

பனித்து உடல்வெதும்பும் படிதவம் புரிந்து
பார்எலாம் வலம்புரிந்து உழல்வோர்
தனித்து இருந்துஉனது திருவடி நினைந்து,
'சரவண பவ!' என உரையார்,
கனிப்பழம் இருப்ப விடுத்து அருகுஇருந்த
காயினைப் பறித்து அருந்துவரே!—
அனித்தமும் கடந்து நித்தம்ஆம் தணிகை
ஆறு மாமுக தயாநிதியே! 53

விடுத்திடற்கு அரிய பஞ்ச பாதகமே
விளைத்திடும் எனக்குமெய் வரங்கள்
கொடுத்திடில், உனையார் தடுப்பவர்? புரளும்
குரைகடல் தன்னை யார்தடுப்பார்?—
முடுக்கருள் தவம்செய் யோகியர் தமக்கு
முசுக்கலை ஏவல் செய்துஒழுகும்
அடுக்கலில் சிறந்த திருத்தணி மலைவாழ்
ஆறு மாமுக தயாநிதியே! 54

குவிகரம் கொடுநின் தனைவலம் வரவும்,
குரைகழல் மனம்நினைந் திடவும்,
கவிஅறிந்து உன்சீர் பாடவும் எனக்குக்
கருணைநீ புரியும்நாள் உளதோ?—
புவியில் அந்தணர்கள் அனைவரும் சாரல்
புறத்திலே அணைந்து, அனுதினமும்
அவிசொரிந்து யாகம் விளைத்திடும் தணிகை
ஆறு மாமுக தயாநிதியே! 55

நச்சு மாமரமே ஆயினும், ஒருவர்
நானிலம் தன்னிலே விழைந்து
வச்ச மாமரமே ஆயிடின், தண்ணீர்
வார்த்திடாது உலர்த்திடு மவர்யார்?
துச்ச மாமாயை வினைஉடல் அடுத்தாய்,
சுத்தவீடு அருள்புரிந் திடுவாய்!—
அச்சனோடு அனையாய் துணைசெயும் தணிகை
ஆறு மாமுக தயாநிதியே! 56

விலங்கலை, கடலை, வெய்யசூர் உரத்தை,
விழுங்கிட வென்றிடும் அயிலால்
கலங்கலைப் புரியும் ஆணவம் மாயை
கன்மம் மூன்றையும் அழித்திடுவாய்!
உலம்கலைத் தகர்க்கும் பன்னிரு புயத்தின்
உம்பர் நாடு இறைதரும் கழுநீர்
அலங்கலைப் புனையும் ஒருதிருத் தணிகை
ஆறு மாமுக தயாநிதியே! 57

முகத்து இருவிழியும் மூக்கிடை இருத்தி,
மூடிவாய், மூச்சை உட்செறிந்து,
பகைத்த ஐம்பொறியும் அடக்கி, நெஞ்சிடைஉன்
பதமலர் இருத்தும் நாள்உளதோ?—
சகத்து இருள்கடியும் உதயமால் வரைபோல்
தணிகைமால் வரைமிசை அடியர்
அகத்து இருள்கடியும் ஞான சூரியன்ஆம்
ஆறு மாமுக தயாநிதியே! 58

நாண்துறந்து எழில்சேர் நாரியர் கலவி
நறவினை அனுதினம் நுகர்ந்து,



மாண்டு இறந்து உலகில்இனிப் பிறந்திடினும்,
மலர்அடிக்கு அன்பு எனக்குஅருள்வாய்!—
கோண்தரும் உலகம் நிலைகுலைந்து அழிந்து,
குரைகடல் மேருவும் அழியும்
ஆண்டுஉகம் பலவும் அழிவு இலாத்தணிகை
ஆறு மாமுக தயாநிதியே! 59

வெங்கொலை, களவு, காமமோடு, அரும்பொய்,
விளங்கு அறிவு அகற்று கள்அருந்தல்
இங்குஒரு தினமும் ஒழிந்திடாக் கொடியேன்
இடர்க்கடல் ஏறும் நாள்உளதோ?—
பைங்கருங் குவளை அனுதினம் மூன்று
பாக சாதனன் சுனைஅலரும்
அங்கு அதிசயம்சேர் அண்ணல் அம்தணிகை
ஆறு மாமுக தயாநிதியே! 60

வெஞ்சிறைப் பிறவி வேதனை ஒழித்த
மெய்த்தவர் சேரும் நின்பதத்து,என்
நெஞ்சு இறைக்குடியாய் நின்றிடும் படிக்கு
நீடு அருள்புரியும் நாள்உளதோ?—
மஞ்சு-இறை அளித்த மகள்தனக்கு இறையாய்.
வானுலகு எலாம்வலம் வருவாய்!
அம்சிறைக் கோழிக் கொடியனே! தணிகை
ஆறு மாமுக தயாநிதியே! 61

செம்புயம் பனிரெண்டு, இருபதம், ஆறு
திருமுகம், மயில்,அயில், சேவல்,
பைம்புயல் கூந்தல் வள்ளி தெய்வானை
பாகமும் காணும் நாள்உளதோ?—
கம்பு உயர்பருதி கரம்கொளும் முராரி
கவின்பெறு மார்பினில் பிரியா
அம்புய மலராள் மருகனே! தணிகை
ஆறு மாமுக தயாநிதியே! 62

பிழைத்தவை பொறுத்தல் பெரியவர் கடன்ஆம்;
பேயனேன் பிழைஎலாம் பொறுத்து,
தழைத்து அருள்புரிந்து உன்தாமரை மலர்த்தாள்
தலைமிசை இருத்தும் நாள்உளதோ?—

கழைத்தலை வளியின் அசைந்திடல், வரைதான்
  கைஎடுத்து அன்பரைக் கடுகி
அழைத்து அருள்புரிவது எனப்படும் தணிகை
  ஆறு மாமுக தயாநிதியே! 63

எவ்உலகமும் ஆண்டு இறந்திடாச் சூரன்
  இருந்திடு மயேந்திர புரிஆம்
தெவ்உல கத்தை அழித்த நின்கருணைச்
  செழுங்கடைப் பார்வை தந்துஅருள்வாய்!—
இவ்உல கத்தோர் பணிந்து எழுந்துஏத்தும்
  இதுஅலால் இந்திரன் உறையும்
அவ்உல கத்தோர் தொழுவளர் தணிகை
  ஆறு மாமுக தயாநிதியே! 64

பரிகரி இரதம் பதாதிகள் சூழ,
  பகைவரைத் தடிந்து, செங்கோல் கொண்டு,
ஒருகுடை நிழலில் உலகுஎலாம் புரக்க
  உனதுஅருட் பார்வை தந்துஅருள்வாய்!—
பொருகரி முகனுக்கு இளையவன் ஆகி,
  பொன்னுலகினைப் புரந்து அளித்தோய்!
அரிகரி முனிவர்க்கு ஏவல் செய்தணிகை
  ஆறு மாமுக தயாநிதியே! 65

மாதிரைக் கடல்சூழ் மண்ணக வரைப்பின்
  வாய்மையைத் துறந்து, சாண்வயிற்றின்
தீது இரைக்கு உரிய பொய்ம்மையே பேசி,
  திரியும் என்பவம் ஒழிந்திடுமோ?—
மீது இரைத்து எழுந்துவரு நிசாசரரை
  வென்று அமராபதி அளித்தோய்!
ஆதிரைக்கு இறைவன் அருள்செருத் தணிகை
  ஆறு மாமுக தயாநிதியே! 66

கருக்குழி படிந்து பிறந்திடு துயரும்
  கண்கள் பஞ்சடைந்து, வாய்குழறி,
நெருக்கிய கபத்தால் இறந்திடு துயரும்
  நீசனேன் ஒழியும் நாள்உளதோ?—
தருக்களில் உதிரும் பொன்மலர் கஞலித்
  தமனிய மலைஎனக் கருதி,



அருக்கனும் மதியும் வலம்வரும் தணிகை
  ஆறு மாமுக தயாநிதியே! 67

தீர்ப்ப தற்கு அரியஉடல் அபிமானம்
  தீர்ந்து, அருந்தவம் புரிந்தவரும்
பார்ப்ப தற்குஅரிய பங்கய மலர்த்தாள்
  பாவியேற்கு உண்டுகொல்?—கதிரோன்
தேர்ப்பரித் திரளை, வேங்கை மீதுஅகவும்
  செம்முக மந்தி வால்நீட்டி,'
ஆர்ப்பரித்து அடித்து நடத்திடும் தணிகை
  ஆறு மாமுக தயாநிதியே! 68

வெம்பிஆய் வயிற்றில் ஐயிரு திங்கள்
  மேவி,இப் புவிதனில் உதித்து,
நம்பி ஆயிழையார் கலவியில் திளைக்கும்
  நாயினேற்கு அருள்—இப முகத்தோன்
தம்பியாய் அடுத்த நீஇருத் தலினால்,
  தரணியோர் பிறவியங் கடலுக்கு
அம்பியாய் அடுத்து வளர்திருத் தணிகை
  ஆறு மாமுக தயாநிதியே! 69

வாள்இகல் புரியும் வடுவகிர் நெடுங்கண்
  மங்கையர் போகமே நுகர்ந்து,
நாள்இகந்து ஒருவி நரகிடை விழாமல்
  நாயினேன் தனக்கு அருள்புரிவாய்!—
கூளிகள் துரக்கும் தானவக் குழுவில்
  குஞ்சரக் குழுஇ ரிந்துஓட,
ஆளிகள் துரக்கும் சாரல்அம் தணிகை
  ஆறு மாமுக தயாநிதியே! 70

மெய்க்கு இனியனவே செய்து, நல்விரதம்
  விடுத்து,உழல் மடமையேன், வீட்டில்
புக்குஇனிது இருக்கும் அடியவர் கமலப்
  பொன்அடி கருதும் நாள்உளதோ?—
கொக்குஎனத் தினமும் கொலைகுறித்து ஒழுகும்
  கொடிய தானவர்களைத் துணிக்க,
அக்கினி கரத்தில் உதித்திடும் தணிகை
  ஆறு மாமுக தயாநிதியே! 71

கருடனை நினைக்கத் தொலைந்திடும் விடம்போல்
கானகத் தினைப்புனக் குறத்தி
திருடன் என்றுஉன்னைச் செப்புவோர் பிறவித்
தீவிடம் அக்கணத்து அறுமே!—
ஒருகணப் பொழுதின் மதுரையர் பெருமான்
உடல்உறு வெப்புஎலாம் அகற்றி,
அருகரைக் கழுவில் ஏற்றிடும் தணிகை
ஆறு மாமுக தயாநிதியே! 72

கொங்கைஅம் குவடும் கருவிழிக் கடலும்
கூந்தல்அம் காடும் சென்றுஉலவி,
மங்கையர் அல்குல்-பணிவிடம் தீண்டி
மயங்கும்என் உயிர்தனைப் புரப்பாய்!—
சங்கைஒன்று இல்லாப் பிரணவப் பொருளைத்
தமிழ்வரைக் குறுமுனி வனுக்கு
அங்கையின் நெல்லி எனப்புகல் தணிகை
ஆறு மாமுக தயாநிதியே! 73

வானகம் புரக்கும் வாழ்வையும் விரும்பேன்;
மண்ணக வாழ்வையும் விழையேன்;
கானகக் குறவர் போற்று நின்பாத—
கமலமே கருதுவன், தமியேன்—
போனகம் பதினால் உலகமும் ஆக்கும்
பூவை வண்ணன் திருமருகா!
ஆனகம் துடியோடு ஆர்த்திடும் தணிகை
ஆறு மாமுக தயாநிதியே! 74

கொவ்வைஅம் கனிவாய் மகளிரை அணைத்து,
கொம்மைவெம் முலைத்தடத்து அழுந்தி,
நவ்வி அம்பகம்ஆம் கூற்றினுக்கு இரையாய்
நான்அழிந்து ஒழிகுவது அழகோ?—
செவ்விய மறையோர் சோலைகள் தோறும்
தீயின் ஆகுதி மகம்புரியும்
அவ்விய கவியம் நுகர்திருத் தணிகை
ஆறு மாமுக தயாநிதியே! 75

கூம்பல்அம் கரமும் குழைந்திடு மனமும்
கொண்டு அனுதினம் வலம்புரிவோர்



தாம்பலன் பெறும்பேறு அரிஅயன் தனக்கும்
சாற்றரிது எனமறை . உரைக்கும்;—
பாம்பு அலங்காரப் பரன்என முத்தம்
பற்பல சொரிந்து, வான்ஓங்கும்
ஆம்பல்அம் சாரல் வளர்திருத் தணிகை
ஆறு மாமுக தயாநிதியே! 76

விடம்க லந்திடு தீம்பால் எனஉயிரை
விரவும் ஆணவத்தினைப் போக்கி,
நடம்க லந்திடும் உன்சீறடிக் கமல
நன்மருந்து அளித்து,எனைப் புரப்பாய்!—
மடங்கலும் கரியும் உழுவையும், தவம்செய்
மாதவர் தமக்கு வானரங்கள்
அடங்கலும் பணிசெய்து அகம்மகிழ் தணிகை
ஆறு மாமுக தயாநிதியே! 77

விடைமிசை வருநின் தந்தைதன் செவியில்
விளம்பிய பிரணவப் பொருளை
கடையனேன் செவியில் புகன்று, நின்கமலக்
கழல்துணை நீழல் என்றுஅருள்வாய்!—
தடைஅறு கதிர்த்தேர்ச் சாரதி பரியைத்
தாக்கும் முட்கோல் பட,வேய்த் தேன்
அடைகிழிந்து உகுதேன்—அருவி தாழ்தணிகை
ஆறு மாமுக தயாநிதியே! 78

வல்ல காத்திரம் சேர்மத கரிஎனவே
மறைநெறி கடந்து தீவினையால்,
பல்ல காத்திரமாய்ப் பிறந்து இறந்துஉழலும்
பாவியேன் உய்யும் நாள்உளதோ?—•
நல்ல காத்திரியாய் இந்திரன் தொட்ட
நறுஞ்சுனை நீலம் மேவுதலால்,
அல்ல காத்திரிஆம் பெயர்பெறும் தணிகை
ஆறு மாமுக தயாநிதியே! 79

நந்தினிப் பதும நிதியினைப் பழித்த
நறுங்கள முகத்தியர் கலவித்
தந்தினைப் படித்து, விடரொடும் திரியும்
தமியனேன் உய்யும் நாள்உளதோ?—

சந்தினை அகிலை வேங்கை குங்குமத்தைத்
தடிந்து எரிகொளுவி வேட்டுவர்கள்
அம்தினை விதைக்கும் சாரல்அம் தணிகை
ஆறு மாமுக தயாநிதியே! 80

மாடகத் திவவு யாழ்முனி உரைப்ப,
வள்ளிமால் வரைப்புறத்து அடைந்து,
காடுஅகக் குறமான் தனைப்புணர் வேடம்
கனவிலும் நனவிலும் மறவேன்;—
ஏடுஅகக் கழுநீர் என்று மூன்றுஅலர,
எனக்கு இலைஎனத் தலைஇறங்கி,
ஆடகக் கிரிநாண் உறும்திருத் தணிகை
ஆறு மாமுக தயாநிதியே! 81

சமயம் மூவிரண்டில் சார்ந்தவர் புகலும்
சமுசயப் பொருள்எலாம் நினைந்து,
கமைஅறு பிறப்பில் அழிந்திடாது, உனது
கழல்-இணை கருதும் நாள்உளதோ?—
இமையவர் வேடர்க்கு அமுதம்ஈந்து, இறாலின்
இரும்பிழி கவர்ந்து, எதிர்விருந்தாய்
அமைவுஉற விசும்பின் வளர்ந்துஎழும் தணிகை
ஆறு மாமுக தயாநிதியே! 82

பொருந்திடு கற்பின் மனைவியும் பொருளும்
புதல்வரும் இம்மையில், அளித்து,
திருந்தும் ஒண்கதியை அம்மையின் அளிக்கும்
திறத்தினைக் கண்டு, உனைஅடுத்தேன்;—
வருந்துறு பிறப்பில் அழுத்தும் ஆணவம்ஆம்
மலிபெரும் பகைகடிந்து ஓங்கும்
அருந்த வர்க்கு அரணமாய் அமர்தணிகை
ஆறு மாமுக தயாநிதியே! 83

கூனையும் தெரியாக் குருட்டையும் பணிவோர்
கொடியவெம் பிறப்பையும் நீக்கி,
வானையும் சிந்தா மணியையும் வேண்டும்
வரத்தையும் தருதல் கண்டுஅடுத்தேன்;—
தேனையும் மறையோர்க்கு அரசர் ஈந்திடுபொன்
திரள்உறு தானநீர் தனையும்



யானையும் மதநீர் கொண்டுஇழி தணிகை
ஆறு மாமுக தயாநிதியே! 84

முன்னைஎத் தவத்தோ வந்து மானிடத்தின்
முழுது உடல்தன்னை யான்எடுத்தும்,
பின்னர் உற்றிடுதற்கு அரிய இப்பொழுதே
பெருந்தவம் புரிந்து உனைநினையேன்;—
தென்இசைக் களிவண் டினங்கள் பற்பலஆம்
தேனடை மொய்ப்ப, ஆதுலர்சேர்
அன்ன சத்திரங்கள் நிகர்த்திடும் தணிகை
ஆறு மாமுக தயாநிதியே! 85

விரிந்திடும் பிறவிக் கடல்அகத்து அழுந்தி,
வினைஎனும் திரைகளால் அலைந்து,
திரிந்திடு காமச் சுறவினால் அயரும்
தீயனேன் துயர்களைந் திடுவாய்!—
வருந்திடும் பகையை மாய்க்கும் மன்னவர்போல்
வனசரர் விதைத்த செந்தினையை
அரிந்திடக் கணிகள் அலர்ந்திடும் தணிகை
ஆறு மாமுக தயாநிதியே! 86

தத்து அலைக்கடலின் வேறுவேறு ஆகும்
சமுசயச் சமய நூல்பலவும்
கத்தலை விடுத்து, உன்கழல் தலைச்சூட்டி,
கசிதலை அடையும் நாள்உளதோ?
முத்தலை ஏக பாத ருத்திரன்போல்
முத்தலை பொன்மை வெண்நிறமாய்
அத்தலை முதல்ஒன் றாய்எழும் தணிகை
ஆறு மாமுக தயாநிதியே! 87

வரம்பெறு மகவான் முதலியோர் ஒருபால்
வணங்க, மாமுனிவரர் ஒருபால்
சிரம்பெறு கரங்கள் கூப்புநின் அவையில்
சிறியனும் வரஅருள் புரிவாய்!—
மரம்பயில் சாரல் வளர்கழை வெடித்த
மணிகள், வாசவன் எதிர்ஆடும்
அரம்பையர் முலைமேல் தெறித்திடும் தணிகை
ஆறு மாமுக தயாநிதியே! 88

சுந்தரம் தனக்கோ, நினதுதோள் வலிக்கோ,
சொற்கலை வல்லபம் தனக்கோ,
சந்ததம் எனதுஆர் உயிர்எனும் மடந்தை,
சாமி! நின்கலவியே விழைந்தாள்;
மந்தரம் இமையம் கயிலை நீள்கந்த—
மாதனம் கண்டு அழுக்கறுப்ப,
அந்தரங் கமதாய் இருந்திடும் தணிகை
ஆறு மாமுக தயாநிதியே! 89

குறித்துஒரு கவிநீ பாடுஎன, பாடாக்
கொள்கை நக்கீரனை வேண்டி,
மறித்துஒரு கவிக்கா இரந்த நின்தனையான்
வலுவினில் பாடவும் இரங்காய்!—
கறிக்கொடி மிளகைத் தின்று இளமந்தி
கலங்கிட, கடுவன் மாங்கனியை
அறுத்துவந்து அளிக்க, மகிழ்திருத் தணிகை
ஆறு மாமுக தயாநிதியே! 90

நெல்விளைந் திடுதண் பணைதொறும் அறுப்பும்
நெல்முதல் நடவும் ஆனாற்போல்,
புல்லி அம்புயனால் பிறப்புடன் இறப்புப்
பொருந்து தீவினை துலைத்திடுவாய்!—
எல்லியும் பகலும் கழைஉதிர் முத்தம்
இளநிலாக் கதிர்ப ரப்புதலால்,
அல்லியும் குவளை யொடும்அலர் தணிகை
ஆறு மாமுக தயாநிதியே! 91

வேனில் வேள்எனவும் விசையனே எனவும்
வீமனே எனவும் ஈகில்லாப்
பாநலம் தெரியாச் சிதடரைப் புகழும்
பாவலர் பவப்பிணி அறுமோ?—
தேன்இறால் வருடை பாய்தரக் கிழிந்து
செங்கழு நீர்ச்சுனை பரப்பி,
யானைவீழ் குழியும் நிரப்புறும் தணிகை
ஆறு மாமுக தயாநிதியே! 92

கார்இருட் குழலார் கண்வலை துடக்கும்
கசடனேன் சிற்றறிவு ஒழித்து,உன்



பேர்அருட் பார்வைக் கடலகத்து அழுத்தி,
பிரிவுஇலா வாழ்வு எனக்குஅளிப்பாய்!—
கூர்இருள் படைத்த கிரவுஞ்ச கிரியுள்
குறுமுனி குறுகல்போல் முனிவர்
ஆர்இருட் குகையுள் புகுந்திடும் தணிகை
ஆறு மாமுக தயாநிதியே! 93

கரவினில் அருநூல் கற்பவர் உறவைக்
கடிந்து,மெய்த் தொண்டர்பால் மிகும்ஆ-
தரவினை மருவி, உடல்அபி மானம்—
தனைஒழிந் திடுநெறி அருள்வாய்!—
இரவினில் கரடி குரும்பி தேர்ந்துஅளையை
இடத்தலும் உற்கைபோல் எரியும்
அரவின் மாமணி கண்டுஅஞ்சிடும் தணிகை
ஆறு மாமுக தயாநிதியே! 94

வாரிஅம் கடல்சூழ் மலர்தலை உலகில்
வயிறுசாண் வளர்த்திடும் பொருட்டு,
பாரி என்று ஈயாதவரை யான்புகழாப்
பணிவிடை எனக்கு அருள்புரிவாய்!—
வீரியம் பெறுவெம் புலியினோடு இரலை,
வேழமோடு அரிபகை ஒருவி,
ஆரியம் புகல்வோர்க்கு ஏவல் செய்தணிகை
ஆறு மாமுக தயாநிதியே! 95

மலைஎன வளரும் ஆணவ மலத்தை
வளம்பெறு நின்அருட் பார்வை
இலைமலி வேலால் எறிந்து அதைப்போக்கி,
எனதுஉயிர்தனைப் புரந்து அளிப்பாய்!—
கொலைஅரி முழக்கும் குஞ்சர முழக்கும்
குலவும் அந்தணர் மறைமுழக்கும்
அலைகடல் முழக்கின் எதிர்எழும் தணிகை
ஆறு மாமுக தயாநிதியே! 96

கமல வேதனை முன்கற் சிறைப்படுத்தும்,
காங்கெயன் ஆம்உனை வணங்கா
மூமல வேதனையும் ஒருசிறைப் படுத்தி,
முண்டகப் பதம்எனக்கு அளிப்பாய்!

விமல வேதியர்செய் வேள்வி ஆகுதியில்
வீசு நெற்பொரி எனச்சாரல்
அமல வேய்முத்தம் சொரிதிருத் தணிகை
ஆறு மாமுக தயாநிதியே! 97

சந்திரன் கறைபோல், இந்திரன் விழிபோல்,
சந்தன மரத்துஉறும் அகில்போல்,
மந்திரம் பயிலும் உனது சன்னிதியில்
வரும்கொடி யேனையும் புரப்பாய்!
இந்திர நீலம் மருவலால், கருமை
ஏந்தலால், செவிஅடுத் திடலால்,
அந்தில் தெய்வானை விழிநிகர் தணிகை
ஆறு மாமுக தயாநிதியே! 98

பிணியினால், அழலால், அலகையால், விலங்கால்,
பில்லிசூ னியத்தினால், பித்தால்,
பணியினால், நீரால் கள்ளரால் மருவும்
பருவரல் அகற்றி, ஆண்டு,அருள்வாய்!—
கணியினால் ஆரம் புடைபரந்து எழலால்
காம்பினால் வம்பினால் காந்தள்
அணியினால் குறமான் முலைநிகர் தணிகை
ஆறு மாமுக தயாநிதியே! 99

வள்ளியும் தெய்வ யானையும் இருபால்
மருவிட, செங்கை வேல்ஏந்தி,
துள்ளிய மயில்மீது ஏறிநீ, அடியேன்
துணைவிழி காண, வந்துஅருள்வாய்!—
வெள்ளியங் கிரிபோல் நாரதன் தினமும்
வீணையின் கானம்ஆம் அமுதம்
அள்ளி அஞ்செவியில் நிறைத்திடும் தணிகை
ஆறு மாமுக தயாநிதியே! 100

**தயாநிதி மாலை முற்றிற்று**



உ

# திருச்சந்நிதித் தோத்திரமாலை

## ச. வயித்தியலிங்கம் பிள்ளை

### விநாயகர் காப்பு

**கட்டளைக் கலித்துறை**

தங்கச்சிற் சந்நிதி கல்லோடை சின்னக் கதிரைதன்பேர்
தங்கச் சினகர வேலோனைப் போற்றியெண் சார்பிணிக்கே
தங்கச் சிரிக்க வருடரு வாயன்பர் தஞ்சநன்மா
தங்கச் சிதாதனத் தென்மேற் றளியமர் தற்பரனே.

விக்கினந் தீர்க்கும் விநாயக னேயென் வினைகளெல்லாம்
உக்கிர மாக எனைவாட்ட வாட்ட உளம்பதைத்தே
இக்கண மேஎன் னுடல்பொரு ளாவியை ஏழைமையேன்
தக்கிணை யாகத்தந் தேன்சிவ மேயெனைத் தாங்கிக்கொள்ளே.

### நூல்

ஒன்றறி யேனென் னுளக்குறை யாவு முனக்குரைக்கச்
சென்றடைந் தேன்செல்வச் சந்நிதி மேவிய தேசிகனே
நன்றறி யாதபுன் நாய்நிகர்ப் பேனை நவையகற்றி
உன்றயைக் காளினி யாக்குவை யோவென் னுயிர்க்குயிரே. 1

ஆனேர்செல் வச்சந் நிதியர சேநின் னடைக்கலமென்
பானேசங் காட்டி யருளுமை யாவிந்தப் பாருலகிற்
றானேர் துணையொன் றிலாதேனன் னேதவப் பூரணனாங்
கோனே யடியார்க் கெளியவ னேயென் குலதெய்வமே. 2

பரிமளத் தீர்த்தம் படிந்தாடி யன்பர்கள் பாடுதுதி
அரிமல ரோன்சுரர்க் காரமு தாகவு மன்புகொள்ளாத்

திரிமனக் கேடு சகிக்கவொண் ணாதினிச் செய்வதென்யான்
சொரிமலர் சூழ்செல்வச் சந்நிதி நீதத் துரையரசே. 3

நீதாசெல் வச்சந் நிதிநேச னேயிரு நீருலக
மாதா வளித்த குமார வுதாரர் மனமலர்ந்த
பாதார விந்த சிவானந்த னேயிப் படிதனில்யான்
ஆதார மொன்றறி யேனடி யேனுன் னடைக்கலமே. 4

பத்தி நெறிக்கெனைப் பாரேலை யாபெரும் பாவியென்று
சித்தத் தயைகொண் டிரங்குபொல் லாச்சிறை சேர்சயந்தன்
புத்திக் கனவினி லோடிப் புரந்தருள் புண்ணியனே
சத்தி தருஞ்செல்வச் சந்நிதி மேவிய சண்முகனே. 5

வேலா லசுரரை வீட்டிச் சுரர்க்குவிண் ணாடளித்த
சீலாபொற் சந்நிதி வாழ்முரு காதிருக் கார்த்திகைமார்
பாலா வெனைக்கடைக் கண்பார் பசித்தபன் றிக்கிரங்கி
மாலா யமுதளித் தோன்கும ராமயின் மாணிக்கமே. 6

நல்லார்க்கு நல்ல துணையான ஞானத் தயாபரனைப்
பொல்லாங்கு தீர்க்குங் குருநா தனைமறை போற்றுகின்ற
கல்லா லமர்செல்வச் சந்நிதி மேவிய காவலனைச்
சொல்வா யுருகிப் பணிவா யினியென் றுயர்நெஞ்சமே. 7

அன்பா லுருகு மடியார் தமைக்கண் டுருகியருள்
மின்பால் விளங்கிய வேலவ னேவினை யான்மெலிந்தே
உன்பா லடைந்தே னுனக்கேயா னாமினி யோங்குதெய்வப்
பொன்பால னேசெல்வச் சந்நிதி மேவிய பூரணனே. 8

போதத் திருமணி போற்றிசைக் குஞ்செல்வச்
சந்நிதிபோய்ப்
பாதத் திருமணி கொஞ்சுமின் னோரிரு பாலமர்கோ
மேதத் திருமணி மஞ்ஞையின் மீதுசெவ் வேல்சிறந்த
வேதத் திருமணி யொன்றுகண் டாலென்கொல் வேண்டுவதே. 9

விண்பா லமரரை வாழவைத் தாயன்று வெற்பகத்திற்
பண்பார்ந்த கீரன் கவியான் மகிழ்ந்து பலர்பிழைக்கக்
கண்பார்த் தனையினி யானுமொ ரேழையுன் காவல்கண்டாய்
மண்பா லுயர்செல்வச் சந்நிதி மேவிய மன்னவனே. 10



பொய்ச்சாட்சி பொய்க்கை யெழுத்தாகி பாவப்
புலைத்தொழில்கள்
மெய்ச்சாட்சி யென்னப் புரிந்தே பிறர்பொருள் வேண்டிநின்றா
ரைக்காட்சி கண்டென் னறிவுகுன் றாம லருடருவாய்
செய்க்காட்சி சேர்செல்வச் சந்நிதி ஞானச் செழுஞ்சுடரே. 11

மத்தளம் யாழ்கொம்பு வார்குழல் கின்னரம் வாழ்த்தெடுப்புப்
பத்தியி னாற்பலர் போற்றநற் பாற்கா வடியுயர்த்தே
எத்தனை பேரிரு கண்ணீர் சொரிய விறைஞ்சிச்சென்று
சித்திபெற் றார்மன மேசெல்வச் சந்நிதித் தேவனுக்கே. 12

வஞ்சர்தஞ் சூழ்ச்சி மயக்க விரவும் வழக்கிரவுங்
கொஞ்சிப் பொருள்கொள் குழையாக ரிரவும் விடாக்கொடிய
பஞ்சப் படிதனிற் சஞ்சலந் தீர்க்கும் பரிசருள்வாய்
மஞ்சத் திருச்செல்வச் சந்நிதித் தூண்டா மணிவிளக்கே. 13

கன்னெஞ்ச ராயினுங் காமலர்ச் சோலைகை காட்டுச்செல்வச்
சந்நிதி நேருறி னாண்டவ போற்றிநற் சண்முகனே
மன்னவ போற்றியென் றன்பர்கள் போற்ற மகிழ்ந்துருகி
நன்னயப் பாதம் பணிந்திரு போகமு நண்ணுவரே. 14

சோதி மலைமருந் தொன்றான தெய்வச் சுவைமருந்தெய்
தாத மருந்துசெல் வச்சந் நிதித்தனி மாமதுரப்
போத மருந்தன்பர் கையார் மருந்தற் புதம்புரிவேள்
வேத மருந்தது கண்டுகொண் டார்க்கில்லை வெம்பிணியே. 15

ஆரணங் கோடி துதிப்பவ னேயெனக் கார்நரக
மாரண வேதனை தீர்த்தருள் வாய்மல ரோன்சுரர்மால்
சீரணங் கோடுதம் மூர்வாழ வைத்த சிவக்கொழுந்தே
பேரணங் கோட்டுபொற் சந்நிதி யார்த்த பெருமருந்தே. 16

ஒய்யார மான மயின்மீது வோங்கி யுயர்ந்ததெய்வக்
கையா றிரண்டுடை யானைப்பொற் சந்நிதிக் கற்பகத்தை
மெய்யாய்ச் சுருதி யடையவல் லார்க்கு விரும்பியதொன்
றெய்தாத தில்லைகண் டாய்மன மேயிவ் விருநிலத்தே. 17

அருளா லுலகுயி ராள்பவ னேயெனை யாதரித்தே
னிருளாம் பிணிகெடப் பாருமை யாவிம வானளித்த

வருளாண் முதல்வி புதல்வாதிக் கற்றவர்க் கார்ந்ததுணைப்
பொருளாள னேசெல்வச் சந்நிதி தோற்றிய பூரணனே.18

பிறந்தவ ராருயி ரோடிருந் தாரெனப் பேருலகோர்
துறந்தவர் போலச் சுடலையின் ஞானமுஞ் சொல்லியுமே
னறந்தவ மாற்றா திறந்தவ ராவரை யாவெனைநீ
சிறந்தவ னாக்குவை யோசெல்வச் சந்நிதித் தேசிகனே.19

மாபாத கம்புரி தீயோரை மாய்த்த மகிமைப்பிர
தாபா தவத்தர் மகிழ்செல்வச் சந்நிதி சார்முதலுன்
சீபாத கஞ்ச மறவாத தஞ்சத் திருவருள்வாய்
கோபாலன் மாமரு கோனேகிட் டாத குருமணியே. 20

அன்னை பிதாத்தெய்வ மியாவையு நீயென் றடைந்தவெனை
யின்ன றுணிந்து வருத்தலென் னோவிறை வேல்விடுத்துப்
பன்னக ராச னடுங்க வுயர்ந்த பழுமரச்சூர்
மின்னினிற் சர்ய்த்தவ னேசெல்வச் சந்நிதி மேலவனே.21

ஏற்காம லேற்பவர்க் கில்லையென் னாம லிழிந்தபொய்சூ
தாற்றாமற் றீயவ ரோடணு காமல மார்க்கர்களைத்
தோற்காம னன்றி மறவாமற் றோன்றுசெல் வந்தருவாய்
மாற்றா லுயர்செல்வச் சந்நிதி மாமயில் வாகனனே. 22

ஓலமென் றேசுரர் கூப்பிட்ட போதத் துயர்வடிவாய்ச்
சாலநின் றேயஞ்ச னீவிரென் றோதும் தயாபரநின்
பாலருள் கூட வடைந்தனன் பாவி புரிபவந்தீ
ஆலமுண் டார்மக னேசெல்வச் சந்நிதி யாண்டவனே.23

குற்றங்க டீர்க்குந் திருமுரு காவிக் குவலயத்தி
லுற்றலைந் தேனினி யாகிலுந் தானல் லுறுதிநிலை
சற்றரு ளாய்துரை யேசோலை சூழ்செல்வச் சந்நிதிவாழ்
கொற்றவ னேநற் றவர்போற்று ஞானக் குருபரனே. 24

தோகை மயின்மிசை மேவும் பிரானைச் சுரபதிக்கு
நாக வரசு நிலையீந்த நாதனை நல்லுயிர்க்குப்
போக முதல்வனைப் பொற்சந் நிதிசென்று போற்றியிந்தத்
தேகம் பெறுபயன் றேடலன் றோபெருஞ் செல்வமதே.25



விண்ணவர் சூரைத் தொலைத்தாண்ட நாதவென்
வெம்பிணியாந்
திண்ணவிச் சூருந் தொலைத்தருள் வாய்நினைத் தேடுகின்றார்க்
கண்மைய னாகி யவலந்தீர்த் தாறு முகங்கொடுக்கும்
பண்ணவ யார்செல்ச் சந்நிதி வாழும் பராபரனே. 26

சுப்ர மணியனைச் சூரசங் காரச் சுடர்வடிவேற்
கைப்பெரு மானைபொற் சந்நிதி யானைக் கசிந்துருகிச்
செப்பிப் பணிபவ ரன்றோ சிறந்த புகழ்நிறுத்தி
யிப்புவி போற்று முயர்போகந் துய்த்தங் கிருப்பவரே. 27

பண்கொண்ட கார்மயில் வாகன னேயொரு பாங்குமின்றி
மண்கண்டு போத நகையாட வோவெனை வைத்தனையாற்
கண்கண்ட தெய்வங் கலியுகத் தேயெனக் காசினியோ
ரெண்கொண்டு போற்றுபொற் சந்நிதி யார்த்த
விறையவனே. 28

தோத்திரம் பாடி யடியார் பணியத் துலங்கிரண்டு
நேத்திர நேச மழையா னனைந்து நினைந்துருகி
யாத்திரந் தீர்ந்தரு ளுக்கிலக் காவரஞ் ஞானிகளுந்
தீர்த்தன் றிருச்செல்வச் சந்நிதி யாலயஞ் சேர்ந்திடினே.29

தாய்போ லினிய முகங்காட்டி யன்பரைத் தாங்குகின்ற
காய்போது தேன்கனி மாறாது காட்டுசெல் வச்சந்நிதிச்
சேய்போல வேறொரு தெய்வமுண் டோவிந்தத் தேசத்திலே
நாய்போ லலையென் மடநெஞ்ச மேயினி நன்றெமக்கே.30

சங்கர பால சராசர ரூப சவுந்தரமா
மங்கல பாத மனோகர வன்பர் மனோலயனே
சங்கடந் தீர்த்தெனைக் காத்தரு ளாய்செல்வச் சந்நிதிவாழ்
செங்கடம் பாமலை மங்கைமைந் தாசச்சி தானந்தனே.31

செய்வதென் யானறி யேன்செல்வச் சந்நிதி சேர்முருகா
தெய்வமுன் னாலன்றி யொன்றணு காது சிறிதிரங்கி
யையவென் னாகுலந் தீர்மறை போலரு ளாறிரண்டு
கைவர வேல குமாரவுல் லாச கலாபத்தனே. 32

அஞ்ஞானி கட்கொழி யாநர கென்றறை வாரவர்க்கும்
மெய்ஞ்ஞான சைவத் திருமார்க்கங் காட்டிய மேலவனே

செய்ஞ்ஞான தேசிக னேநின் பெருமை சிறிதுணர
மெய்ஞ்ஞான மீசெல்வச் சந்நிதி நேச விழுப்பொருளே. 33

தம்பவம் போல வழியுமித் தேகஞ் சதமெனக்கொண்
டம்பலத் தாடி யருள்செல்வச் சந்நிதி யாண்டவன்றாட்
செம்பது மந்துதி செய்யா றரம்புரி யாச்சிறியோர்
கம்பமுற் றென்செய்பவர் காணம னார்வருங் காலத்திலே. 34

அடைக்கல மென்றடைந் தோர்தமைக் காக்கு மறுமுகன்வேற்
படைக்கல வேள்செல்வச் சந்நிதி வாழும் பராபரனா
ரடிக்கம லந்தலைக கொண்டார்தம் பாதத் தருந்துகளோர்
முடிக்கணி யாகக் கிடைத்தவர்க் கேகுறை முற்றறுமே. 35

ஆறுமில் லாதுகைக் கோறுணை யாக வடைந்தவெல்லாப்
பேறுமுன் னாலல்ல நீரவும் யானொரு பேதைகெட்டாற்
பாருமை யாசெல்வச் சந்நிதி யாய்பழு தாகுமன்றே
யூருமுள் ளாய்சர்வ பேருமுள் ளாய்நின் னுயர்ச்சிக்கதே. 36

திருமா லயனிந் திரன்சுரர் வாழச் சிறந்தவைவேற்
பெருமான் மகிழ்செல்வச் சந்நிதி மேலோன் பெரும்புகழை
யொருமா மனதுட னோதி யுருகி யுருகினன்றோ
கருமா மலைபிணி மாளநின் றாடிக் களிப்பதுவே. 37

அன்புகொண் டார்தமை யாதரிப் பாயென்ப ரன்புகொள்ளாப்
புன்பிழைப் பாலரைப் போக்குவை யோபுலன்
சோர்ந்துபொற்றாள்
பண்பது போற்குற்றம் யாதிருந் தாலும் பரிந்தெனக்கு
னன்புதந் தாள்செல்வச் சந்நிதி யோங்கிய வற்புதனே. 38

கல்லா லமர்ந்து மறைநூ லுரைத்த கடவுளுக்குஞ்
சொல்லார் பொருளுப தேசித்த சோதி சுடர்ப்பொதியை
யெல்லார் முனிக்கு மியலை யுணர்த்து மினியபெம்மான்
வெல்லார் பதமலர் சந்நிதி வேண்டு வினைநெஞ்சமே. 39

வேதச் சிரசில் விளங்கும் பிரானைவிண் ணோர்கலக்கம்
போதச் சிவனடி வேலேந்தி னோனைப் புனக்குறமா
னேசச்செல் வச்சந் நிதிமுரு கோனைநின் றேவணங்கிப்
பாதச்செந் தாமரை சூடவல் லோர்க்கில்லை பாவங்களே. 40



அந்தர நேரினு மல்லல்வந் தாலு மரசர்களாற்
றொந்தாரை நேரினுந் துட்டர்வந் தாலுந் தொடர்நமனார்
மந்தர நேரினு நேர்செல்வச் சந்நிதி வாழ்பெருமான்
சுந்தரப் பாலசுப் பிரமணி யாதுணை தோன்றுவையே. 41

என்புத்தி யொன்றையுங் கேட்கின்றி லாய்மன மேயினிநா
னுன்புத்தி கொண்டு வருத்த விடேனுனை யோர்கொடியோன்
றன்புத் திரர்குலஞ் சுட்டவெவ் வேள்செல்வச் சந்நிதிச்சேய்க்
கன்புத் திருத்தமிழ் விண்ணப்ப மாலை யனுப்பினனே. 42

ஐயா நமசிவன் செல்வா நமவெமை யாதரித்தாண்
மெய்யாநம செல்வச் சந்நிதி யாய்நம வேல்விளங்குங்
கையா நமசுப்ர மணியா நமவெனக் காதல்கொண்டான்
மையா ருலக வருத்தங்க டீர்த்து வரந்தருமே. 43

அஞ்சாத சூரை யமராடி வென்று மடைந்தவர்க்கே
துஞ்சா தருடந்து முய்யவைத் தாயென்ன சொல்லுமையா
மஞ்சார்செல் வச்சந் நிதியர சேபெரு மாருதத்தோர்
பஞ்சாய்ச் சுழன்று நிலைதடு மாறிய பாவிக்குமே. 44

வஞ்சப் பெருங்கொடுங் கூற்றுற னோக்கி வரும்பொழுது
தஞ்சத் திருமயின் மேலரு ளோரிரு சார்விளங்கக்
கஞ்சக் கரமலர் வேல்கொண்டு காட்டிக் கருணைதரக்
கெஞ்சிப் பணிமன மேசெல்வச் சந்நிதி கிட்டிநின்றே. 45

குணமுந் தனமு மறிவும் பதியுங் குலமுமில்லாப்
பணமுந் துணையும் பயன்றரு மோகொண்டு பார்க்கிற்சர்வ
கணமும் பணிகரு ணாகர நீயருள் காட்டினலல்லான்
மணமுந்து சோலை மலர்செல்வச் சந்நிதி மாணிக்கமே. 46

ஊரா ரிருந்துமென் னுற்றா ரிருந்துமென் னோமருந்துப்
பேரா ரிருந்துமென் பேணுவ ரோபிணி வந்துருமேற்
சாரா முதச்செல்வச் சந்நிதி சார்கந்த சாமிநன்னா
ளாராவிக் கஞ்சத் தடிமல ருண்டின்ன வற்றிடற்கே. 47

நாடுக டோறு மிருண்மூடி நிற்க நலிவிளக்கு
வீடுக டோறொரு கோடியிட் டாலென் விளங்கிடுமோ
தேடுங்கள் செல்வநற் சந்நிதி யாகிய சீபதியே
யாடுங் கலாப மயிலார்மெஞ் ஞானமெய் யாதித்தனே. 48

பச்சை மயில்வடி வேலோ னெனது பரிபவந்தீர்த்
தச்ச மகற்றி யருடரு மோதுய ரான்மெலிய
வைச்சிடு மோவறி யேனரு ளாழி வராசலநே
ருச்சித மாஞ்செல்வச் சந்நிதி வாழிறை யோன்செயலே. 49

ஐயா கவலைக் கிலக்காகி னேனிவ் வுலகத்துள்ளோர்
பேயாக் கணிப்ப ரிதுவோ வழகி துன்பொருட்கே
தாயா யுயிர்க்குயி ராகிப் புரக்குந் தனிப்பொருணீ
யாயாய்செல் வச்சந் நிதியர சேயென தாண்டவனே. 50

அத்தா வருக வருகபொற் சந்நிதி யாரகில
கத்தா வருக வருகசெவ் வேற்கரக் கார்மயிலார்
முத்தா வருக வருகவொ ராறு முகம்படைத்தே
நித்தா வருக வருக பராமுக நீத்தினியே. 51

உண்டே மயிலுண்டு வேலுண்டு சேவ லுருகிநின்றோர்க்
கண்டே யருள்பொழி யாறு முகமுண்டு காணநல்ல
தண்டார் துரைவீர வாகுண்டு தாமப் பணிபுரியப்
பண்டார்செல் வச்சந் நிதிமுத லாகிய பண்ணவற்கே. 52

கண்மணி யேயன்பர் காரிரு ணீக்கும் கதிபடைத்த
விண்மணி யேவிண் ணவர்வாழ வேல்கொண்ட
மெய்ப்பொருளாற்
திண்மணி யேசெல்வச் சந்நிதி யாருந் திருப்பதிவாழ்
தண்மணி யேதளர்ந் தேனெம் பிரானென்னைத்
தாங்கிக்கொள்ளே. 53

கொண்டாடி னார்மனத் துள்ளே புகுந்து குடியிருக்கும்
பண்டார மாஞ்செல்வச் சந்நிதி ஞானப் பராபரனே
கண்டாலுங் கண்கள் துயின்றாலும் உன்னிரு கான்மலர்மேல்
தொண்டா யிருக்கும் வரமரு ளாய்நின் றொழும்பனுக்கே. 54

கண்ணாரக் கண்டுன்னை வாயார வாழ்த்திக கருதுமன்பால்
எண்ணார வுன்றிரு நாமங்க ளேநிதம் எண்ணியெண்ணிப்
பண்ணார் பவப்பிணி தீர்ப்பதென் றோபக ராய்வடிவேற்
றண்ணார் திருச்செல்வச் சந்நிதி வாழுந் தயாபரனே. 55

ஆலத்தி னாலமு தாக்கிய நாதன் அருள்வடிவாஞ்
சீலத்தி னாற்பொலி சந்நிதி வாழுந் திருக்கந்தனே



காலத்தி னால்வரு தீமையும் பாவக் கடும்பிணியும்
கோலத்தி னாற்றொலைத் தேயெம்மை யாளுங் குருபரனே. 56

பதினா யிரங்குற்றம் செய்தாலு மென்னையுன் பாதத்திலே
பதமாக்கி வைத்தல் முறையல வோபதி னாலுலகும்
பதமாய் விளக்க மிகுகோர சூரபன் மாவினையோர்
பதமாக்கி யாண்ட குருவே கதிரைப் பராபரனே. 57

பாவலர் போற்றும் பழம்பொரு ளேயென்றன் பாவமெல்லாம்
பூவலர் போற்றும் பொறுத்தரு ளாய்புது நஞ்சையுண்டு
தேவர்கள் போற்றப் புரந்தருள் பூத்த சிவப்பொருளாம்
காவலர் போற்றுபொற் சந்நிதி யாகிய கற்பகமே. 58

பொல்லாத பாவி இவனென நீயெனைப் பூதலத்தோர்
எல்லாரு மேச இகழ்ந்துவிட் டாலினி ஏதுசெய்வேன்
கல்லா லெறியவும் சொல்லா லடிக்கவும் காவல்கொண்ட
சொல்லாளன் மாமுரு கோனேபொற் சந்நிதித் தூமணியே.59

மீதார் கதிரைப் பராபர னேயெம் வினையகற்றப்
போதா ரயனரி தேவர்கள் போற்றவிப் பூதலத்தே
தாதாருஞ் சோலை செறிசெல்வச் சந்நிதி சார்ந்துவைவேற்
பாதார விந்தம் பணியநின் றான்சென்று பார்மின்களே.60

நோயான தென்னை மிகவாட்ட வாட்ட நுவலுமுடல்
பேயாட்ட மாடத் துடித்தே புலம்பிப் பெரிதுமுன்னைச்
சேயான வேற்கந்த னேதுதித் தேனுன் செவியிலெல்லாம்
பாயா திருத்தலென் னேயரு ளாழிப் பராபரமே. 61

பெறுதற் கரியவிம் மானிடப் பேற்றினைப் பெற்றுமுன்னைக்
குறுகிப் பணிந்துயர் பேரின்ப வீட்டைக் குறித்தடையாச்
சிறுமக்கள் போலத் திரியாம லேழையுன் சீரடிக்கே
உறுதிப் படவன்பு தந்தெனைக் காத்தருள் உத்தமனே. 62

சுடச்சுட மாற்றுயர் பொன்னதைப் போலமெய்த்
துன்பமெல்லாஞ்
சுடச்சுடத் தொண்டர் தமைக்கரை யேற்றிச் சுருதிமொழி
திடப்படக் காட்டிச் சிவகதி சேர்க்குந் திருக்கதிரைத்
தடப்பதி யாஞ்செல்வச் சந்நிதி வாழுந் தயாநிதியே. 63

தேவேசெல் வச்சந் நிதிப்பதி மேவித் திருந்துமன்பர்
பாவே விரும்பும் பராபர மேபத மாமுனிவர்
கோவேயிவ் வேழை தனக்கிரங் காயெண் குணக்குன்றமா
மாவே சுகவடி வேலாயுதங் கொண்ட மாதவனே. 64

கல்லா கியவென் மனமது சாலக் கசிந்துருக
நல்லா யெனக்கு வரந்தரல் வேண்டும் நவிலுமன்பர்
சொல்லான பாடற் கிரங்குமை யாசொர்ணச் சந்நிதிவாழ்
வல்லாள னேதொல்லை மாமயி லேறிய மாணிக்கமே. 65

அருட்குடை யோன்செல்வச் சந்நிதியீச னடியவர்தா
மிருட்குடை யார்துன்ப மெய்தூர் பிறவி யெடுக்கினுநற்
பொருட்கொடை யாரென வாழ்ந்தே புவியிற்
பொருந்தியபொய்த்
திருக்குடை நீக்கியப் பேரின்ப மோட்சமுஞ் சேர்குவரே. 66

துணையின்றி வாடுந் தமியேனைப் பார்த்தென் றுயர்களைய
வணைகின்ற காலமெக் காலங்கொ லோவரு ளாயலந்தோர்க்
கிணைகின்ற தஞ்சமு மின்பது மாகி யிசைந்தசெல்வத்
திணைகொண்ட சந்நிதி யானே யமரர் சிகாமணியே. 67

வேல்போற்றி வேள்செல்வச் சந்நிதி யீசர் விளக்குதண்டைக்
கால்போற்றி சேவல் மயில்போற்றி போற்றி கருதுமன்பர்
மால்போற்றி ஞானத் திருவரு ளாகி மலர்ந்தபச்சைப்
பால்போற்றி போற்றியென் றெந்நாளு மோதப்
பயமில்லையே. 68

**வெண்பா**

நிதியுண்டாங் கல்வி நிலையுண்டா நேச
மதியுண்டாம் வாழ்வுண்டாம் வானோர்-துதிசெல்வச்
சந்நிதித்தென் மேற்பதிவாழ் தந்திமுகத் தெந்தைபத
முன்னிப் பணிய முறை. 69

வீராசெல் வச்சந் நிதிபூத்த விண்ணவனே
பாரா யெனைக்கடைக்கண் பாருமையா-நேரார்
திருமா லயன்றேடுஞ் சீராளா சோதி
தருபாலா நின்றாள் சரண். 70



பையாடு பாம்பின்வாய்ப் பட்டதனித் தேரையைப்போ
லையாநான் வாட லழகிதோ-மெய்யா
கலியுகத்திற் கண்கண்ட கர்த்தனே செல்வம்
பொலிசந் நிதியாய் புகல். 71

பொருளழப்பா லாழி புரிந்தளித் தார்சே
யருளலர்பொற் சந்நிதிவா ழத்த-னிருளழியப்
பார்ப்பானென் னெஞ்சே பதறேல் கருதையன்
சீர்ப்பாதப் போது தினம். 72

நவக்கிரக தோஷமெனை நண்ணாமற் காத்துத்
தவக்கிரமத் தாள்பணியத் தாதா-வநுக்ரகசெங்
கோலா லுலகாளுங் கோவே குருராஜா
வேலாபொற் சந்நிதிவாழ் வே. 73

எங்கே யிருந்தாலு மென்னவினை வந்தாலுந்
தங்குமன மேசெல்வச் சந்நிதிவாழ்-தங்க
வரைராசன் போற்றுலக மாதா வளித்த
துரைராச னுண்டே துணை. 74

தாயைப் பிரிந்தகன்று தானலையும் பெற்றியைப்போன்
மாயைப் புவியிலெனை மாழ்கவிடேல்-நேயத்
திருவாருஞ் சந்நிதியா செல்வா சுரர்க்கா
யுருவாகி வந்த வொளி. 75

சங்கத் திருந்து தமிழாய்ந்த பண்டிதனே
பங்கப் படாமலெனைப் பாருமையா-சங்க
வனவேடர் போற்றிசைப்ப வானுருவங் காட்டுங்
கனவேல நீயே கதி. 76

ஓதி யுணர்ந்தறியே னுன்புகழ்பொற் சந்நிதியாய்
காதிலே கேட்டறியேன் கைதவனிப்-போதுற்றே
னும்பர் குறைகேட் டுருகி யிரங்கியநற்
சம்புத்வு தேவா சரண். 77

தொண்டர்க் கெளியானே சோதிவடி வேலோனே
யண்டர்க் கருள்புரிந்த வண்ணலே-விண்ட
விதியால் வருந்திடுமிவ் வேழைக்கு மேசந்
நிதியா யருள்புரிய நேர். 78

இன்பமுறு மேவினைக ளெல்லா மொழியுமே
துன்பறுமே பொற்சந் நிதித்தூய-வன்பாளர்
கந்தா குகனே கதிர்வேலா கன்னியுமை
மைந்தா வெனமகிழு வார்க்கு. 79

பச்சைமயில் மேலோனே பண்ணவர்க்கு வாழ்வளித்த
நிச்சவடி வேலோனே நின்மலனே-யச்ச
மகற்றியெனை யாள்செல்வச் சந்நிதிவா ழத்தா
சதற்கா ரணசண் முகா. 80

பாற்கா வடியேந்திப் பாடிமகிழ்ந் தையாநின்
னாற்காக்கப் பட்டவரை நானுருகிப்-பார்த்தே
பணிந்துசெல்வச் சந்நிதியார் பண்ணவனே துன்பந்
தணிந்து சிறப்பவரந் தா. 81

விசய னுயிர்க்கிரங்கி வேடுவனாய்ச் சென்று
விசயனடி பட்ட விருண்மேலோ-னிசைசிறுவ
னெப்படியுங் காப்பா னிறைசெல்வச் சந்நிதியா
னிப்படியி லென்று மெனை. 82

முத்தி முதலே முழுமூல மந்திரமே
சக்தியுமை கந்தசெல்வச் சந்நிதியார்-முத்தே
பெருமருந்தே நாயேன் பிணிவீட்ட வுள்ளத்
தொருமருந்தே யாகி யுறை. 83

அஞ்சு முகங்காணி லாறு முகங்காட்டி
யஞ்சலென நின்றருளு மாண்டவனார்-செஞ்சரணே
தஞ்சமெனச் சென்று தழைக்கும்பொற் சந்நிதி
நெஞ்சமே நின்று நினை. 84

ஆட்டுக் கடாவரவுக் கஞ்சியவிண் ணோர்துதிக்க
ஆட்டுக் கடாவதுவே வாகனமாக்-காட்டுங்
கருணைபொற் சந்நிதி வாழ்கந்த சாமி
தருணத் துதவி தரும். 85

ஆமய வாழ்வி லடியேனைக் காத்துச்சா
காமயவாழ் வுங்காணக் காட்டுவாய்-சேமத்
திருச்சந் நிதிவாழுந் தெய்வமே தூய
வருட்சந் நிதானத் தமர்ந்து. 86



அடியார்க் கெளியன்பொற் சந்நிதிவா ழத்தன்
முடியாப் பெரும்புகழை முன்னிற்-கிடையாத
தொன்றில்லை கண்டா யுயர்வா யுழனெஞ்சே
சென்றிறைஞ்சு வாய்நீ தினம். 87

அஞ்சாத சூர னணிமயிலாய்த் தானமையத்
துஞ்சா வரங்கொடுத்த சோதியே-கஞ்ச
மலர்ப்பாத னேசெல்வச் சந்நிதியாய் வந்தே
னவப்பாவம் போக்கி யருள். 88

ஒருமான் மகிழ வொருமானைக் கொன்ற
வொருமான் மருக னொருமான்-பெருமான்
தருமான்செல் வச்சந் நிதிமானைச் சாற்ற
வருமா லிருமான் வசம். 89

தாராத் தனிக்கொடையாத் தந்தெனக்குன் சேமவருள்
தீராயென் சென்மத் திருக்கெல்லாஞ்-சீரா
ரனத்தோன்மால் காணா வணிசந் நிதியாய்
வனப்பூர் மயிலாய் மகிழ்ந்து. 90

மெய்யடியார் போற்றி விளங்குசெல்வச் சந்நிதிவா
ழையனருள் போற்றிதுணை யானமயில்-செய்யவேல்
போற்றி யுயர்சேவல் போற்றிதிருப் பாதமலர்
போற்றிநிதம் போற்றியெனப் போற்று. 91

திருச்சந்நிதித் தோத்திரமாலை முற்றிற்று

உ

# திருப்போரூர் முருகன் மாலை

## சிதம்பர சுவாமிகள்

### காப்பு

மருப்புநில வாலென் மலதிமிரம் போக்குங்
கருக்கோடை போக்குமதக் காரால் - திருப்போரூர்
நிம்பத்தின் கீழிருந்து நேயர்க்கு வாழ்வளிக்குங்
கம்பக் கடமா களிறு.

### நூல்

பூவார்ந்த கற்பகப்பூம் பொங்கரிடத் திற்சிறந்த
தேவாய்ந்த செல்வமுதற் செல்வமெல்லாம்-தூவாய்ந்த
வேள்பணிந்த பேரழகா மேதகுபோ ரூராநின்
தாள்பணிந்தார்க் குண்டாகுந் தான். 1

காழியிலே வந்து கணக்கிலாச் சீவரைநீ
டூழியின்பத் துய்த்த வொருவனே - யாழியெனுந்
துன்பத் திருந்தேனைத் தூக்கித்தென் போரூரா
இன்பத்துள் வைப்பாய் இனி. 2

இருட்டறையை நோக்குவிழிக் கேற்றுவிளக் கென்றூழ்
பொருட்டனையே காட்டும்அது போல - மருட்டனையும்
மாயையினாற் பேரருளால் மாற்றி யறிவளிக்குந்
தாயனையான் போரூரன் தான். 3

நாயேனுன் சீரடிக்கு நன்கல்ல செய்தாலும்
பேயேன் இழைத்த பெரும்பிழையை - நீயே
பொறுத்தாள்வ துன்கடனாம் போரூரா என்னை
ஒறுத்தா லெனக்கார் உறவு. 4



ஐம்பொறியாற் கண்டுபின்னர் அற்பித்தால் நாயடியேன்
எம்பெருமான் மிச்சிலுனக் கேறுமோ - வம்பனேன்
நீகாட்டக் காண்பதென நேயமுறப் போரூரா
ஆய்காட்டி தற்புதமே யாம். 5

விதிவழியே நின்றுன் மிளிர்கமலத் தாளை
மதிதழையும் அன்பால் வணங்கிக் - கதிதழையும்
அன்பரைப்போல் வேடம் அணிந்துநின்றேன் போரூரா
வன்பருக்குள் வன்பனேன் வந்து. 6

இல்லறத்தான் அல்லேன் இயற்கைத் துறவியல்லேன்
நல்லறத்து ஞானியல்லேன் நாயினேன் - சொல்லறத்தின்
ஒன்றேனும் இல்லேன் உயர்ந்ததிருப் போரூரா
என்றேநான் ஈடேறு வேன். 7

இன்போ ரணுவாய் இடரதற்கு மாமலையாம்
புன்போகம் வேண்டிப் புலம்பாதே - என்போடே
உள்ள முருகவரும் ஒண்போரூர் ஐயன்அருள்
வெள்ளமுற நெஞ்சே விரும்பு. 8

மயக்கமெலா நீங்கியுன்றன் மாமலர்த்தாட் கீழே
இயக்கமறு வாரிதிபோ லென்றே - தியக்கமறு
பேரானந் தம்பெறுவேன் பேணுதிருப் போரூரா
சீராருந் தேவா தெளிந்து. 9

அளகையர்கோன் வாழ்வும் அனங்கன்போல் ஏரும்
அளகவட மீன்போல் அணங்கும் - உளமதனில்
உன்னாது கைவிட் டுனைப்பிடித்தார் போரூரா
என்ஆ தரவுகொண்டேன் யான். 10

வள்ளிக் கொடிபடரும் மாகற் பகதாரு
தெள்ளிப் புகழ்தேவச் சிந்துரமே - உள்ளிக்
களித்துவிளை யாடுங் கன்கமலை போரூர்
அளித்துவிளை யாடும் அரசு. 11

மெய்ப்பொருளாம் நின்னை விரும்பியின்ப மேவாது
பொய்ப்பொருளை நாடியிடர்ப் போந்தேனைச்-செப்பரிய
மட்டழகார் சோலை மலிந்ததிருப் போரூரில்
கட்டழகா காத்தாள் கடன். 12

வள்ளையார் ஓடை மலிபோரூர் ஆறுமுகப்
பிள்ளையார் பாதம் பிடிநெஞ்சே - கொள்ளையார்
வன்பிறப்பு நீங்குநமை வாரிதிபோல் வந்தடருந்
துன்பிறக்குங் கூடுஞ் சுகம். 13

இருளிற் கிடந்த எனையன்றே தூக்கி
அருளைத் தரத்தனுவே யாதி - தெருளூற்றுத்
தந்தவன்நீ மற்றவையைத் தந்ததுபோல் நிற்கீதல்
எந்தவகை போரூ ரனே. 14

இடர்களையும் இன்பக் கரும்பை யெமது
தொடர்பிறவி நீக்குந் துணையைத் - தொடர்பாகி
உள்ளும் புறம்பும் ஒளிவீசும் போரூரில்
தெள்ளுமணி யைநெஞ்சே சேர். 15

சேர்ந்து நமதுசெய லற்றமுடி மேற்சேர்த்தி
ஆர்ந்தகளி மேன்மேலும் ஆக்கியே - சார்ந்தெவனும்
பொங்கி மணக்குமின்பப் போரூரன் தாட்பூவைத்
தங்கி மனமே தருக்கு. 16

முடித்தேன் களித்தேன் முசிப்பெல்லாம் மாறிக்
குடித்தேன் ஆனந்தக் கொழுந்தேன் - நடித்தேன்விண்
ஆர்ஊரர் போற்றி யடிபணிந்து நின்றுதொழும்
போரூரன் பாதாம் புயம். 17

அருளே வடிவாகி ஆனந்த வாரிப்
பொருளாய்யான் என்னதெனல் போமோ - மருளேதும்
இல்லானே போரூர் இறைவனே நாயேற்கு
நல்லானே சொல்லாய் நயந்து. 18

என்னை விழுங்கி யிருக்கநீ ஆனந்தந்
தன்னை விழுங்கி தருக்கநான் - அன்னையிலுஞ்
சால அருள்புரிந்த சற்குரவா போரூரா
ஏலமருள் செய்யேல் இனி. 19

படல முரித்தவிழி பானுவைக்கண் டாற்போல்
உடலமுத லாணவநோ யோட்டி - அடியிணையைக்
காட்டியநீ மீட்டுங் கனமயக்கிற் போரூரா
கூட்டியெனை யாட்டாதாட் கொள். 20



எனதபிமா னம்பிடித்த இந்தவுட லாதி
உனதபிமா னம்பிடித்தாய் உற்றே - எனதாகக்
கொண்டேன் மயக்கங் குலையுநாள் எந்தநாள்
கண்டபோ ரூரா கழறு. 21

எனக்கவலம் வாராமல் எந்நாளுங் காத்து
மனக்கவலை மாற்றும் மருந்தாம் - புனச்சிறுமி
முத்துவடக் கோடுழுத முந்நான்கு தோளுடையான்
தத்துபுனற் போரூரன் தாள். 22

பொருப்பெனவே பஞ்சின் பொதியெனினுஞ் சின்ன
நெருப்பணுகில் நீறாகு மாப்போல் - விருப்பமுடன்
உன்னைத் தொடர்வார்க் குறுபவநோய் போரூரா
பின்னைத் தொடரா பிறந்து. 23

கண்ணிற் கருமணியே கற்பகமே கற்றோர்கள்
உள்நிற்கும் ஓரொளியே ஓர்பொருளே - எண்நிற்கும்
போரூர் இறையே புனிதநிறை ஆனந்தச்
சீரூரில் நாயேனைச் சேர். 24

வேல்கண்டேன் தோளில் வியன்சதங்கை மொய்த்திருந்த
கால்கண்டேன் ஆறுமுகங் கண்டேனே - நீல்கொண்ட
மாயூரங் கண்டேன் வளமைதரு போரூரிற்
போயூரங் கண்டேன் புகுந்து. 25

தாயாம் எனக்குரிய தாதையாஞ் சற்குருவாந்
தேயாக் கருணைபொழி தெய்வமாம் - மாயப்
பொருள்நீக்கும் அன்பர் புனிதவீ டேற
இருள்நீக்கும் போரூர் இறை. 26

கேட்டதெல்லாம் பாலிக்குங் கேடிலாத் தாதாவும்
வீட்டுநெறி காட்டும் வியன்குருவும் - நாட்டமென
உள்நின்று நாயேற் கொளிகாட்டுஞ் சிற்பரனும்
எண்நின்ற போரூர் இறை. 27

ஐம்பொறியாற் போகம் அயின்றாலும் நாயேனுன்
செம்பதுமத் தாளிணையே சிந்திக்க - உம்பருக்குங்
காணஅரி தாம்இன்பங் காணத்தென் போரூரா
பூண அருளே புரி. 28

அன்பெலாம் நின்பாலே யாக்கி யடியேனுன்
இன்பெலாம் உண்டிங் கிளைப்பாறக் - கொன்புனைவேற்
கையாதென் போரூரிற் காங்கேயா வீடுதவும்
ஐயாநீ கண்பார்த் தருள். 29

நீலக் கடல்முகட்டில் நேருதய சூரியன்போற்
கோலக் கலாபக் குரகதமேல் - சாலவும்நீ
தோன்றி யடியேன் துயர்தீரப் போரூரா
ஊன்றியடி யென்முடிமேல் ஓது. 30

மலையரையன் ஈன்றபிடி வாழ்ந்துதவும் யானை
கலையரைய னைப்புடைத்த காளை - சிலையரையன்
மாப்பிளைதென் போரூரின் மாணிக்கச் செஞ்சதங்கைக்
கால்பிளைநா யேனார் கதி. 31

ஏதுபிழை செய்தாலும் ஏழையே னுக்கிரங்கித்
தீது புரியாத தெய்வமே - நீதி
தழைக்கின்ற போரூர்த் தனிமுதலே நாயேன்
பிழைக்கின்ற ஆறுநீ பேசு. 32

முக்கரணத் தாலும் முசியா துனைப்பணியுந்
தக்கவர்கள் தாள்தா மரைமீது - புக்கபொடி
ஒன்றினும்என் சென்னிக் கோரணியாப் போரூரா
சென்றுறுவேன் வீடு தெளிந்து. 33

மூவாசை கொண்டு முசிக்குநெஞ்சே போரூரில்
தேவாசை கொள்ளத் தெரியாதோ - தேவாசை
கொண்டாயேல் நம்தங் குறைகளெல்லாம் இக்கணமே
விண்டாயே கண்டாயே வீடு. 34

குழவி யழுத குரல்கேட்ட தாய்வந்
தழுதகண்ணீர் மாற்றிஅமு தூட்டுங் - கெழுதகைபோல்
நாயேன் இடர்களைந்து நல்லருளூட் டும்போரூர்ச்
சேயேநம் தாயாகுந் தேர். 35

கலங்கினேன் கண்ணீருன் கையால் துடைத்தே
அலங்கிலைவேல் ஆறுமுகத் தையா - புலன்கரணங்
கண்டறியா இன்பங் கடையேற்குப் போரூரா
உண்டறியத் தந்தாள் உவந்து. 36



மலைமுழையில் உற்றாலென் மாமருந்துண் டாலென்
கலைமுழுதுங் கற்றாலென் காணார் - இலைநிலவு
வேல்பிடித்த கையான் வியன்போரூர் ஐயன்இரு
கால்பிடித்தால் காண்பார் கதி. 37

விருப்பமுட னேபணியும் மெய்யன் பனையும்
இருப்புநெஞ்ச என்போ லியையுங் - கருப்பிரதக்
கட்டியார் தீஞ்சுவைபோற் காதலர்க்கீ யும்போரூர்ச்
செட்டியார் தாம்அறிவார் தேர்ந்து. 38

கோழிப் பதாகையுஞ்சீர்க் கோலமயில் வாகனமும்
ஆழிப் பெருக்குறிஞ்சி யார்வேலும் - வாழியெனத்
தோத்திரஞ்செய் போரூரிற் சுந்தரனார் பேரருளோர்
மாத்திரையில் நெஞ்சே வரும். 39

அயிலேந்து தோளானை ஆறுமுகத் தானை
மயிலேந்து தாளானை வாழ்த்திப் - புயலேந்து
தண்டலையார் போரூர்ச் சரவணனை நெஞ்சமே
கண்டலையா துற்றார் களி. 40

புயல்போற் கருணை பொழிவிழியான் தன்னை
மயல்போக்கு மாமருந்தை வந்தெஞ் - செயல்போக்கும்
போதானந் தச்சுடரைப் புண்ணியனைப் போரூரில்
நாதாந் தனைமனமே நாடு. 41

உரகபடந் தூக்கி உதறுபசுந் தோகைத்
துரகமிசைத் தோன்றுஞ் சுடரே - பரகதியில்
வாழ்ந்துய்ய நாயேன் வளமைதரும் போரூரா
சூழ்ந்தருளாய் சாலத் தொடர்ந்து. 42

கடலைச்சே றாக்கிக் கடுவரைநீ றாக்கி
மிடலுற்ற சூரனுரம் வீட்டி - அடலுற்ற
வேல்கொண்டார் தெய்வத்தை மெய்யாகப் போரூரின்
பால்கண்டார்க் குண்டோ பவம். 43

மறப்புநினைப் பாகி வருதிரையெந் நாளும்
புறப்படா இன்பப் புணரி - உறப்புகுந்தே
ஆடிக் களிக்கும் அருட்போரூர் ஐயனடி
கூடிக் களிக்குங் குழாம். 44

முத்துச் சிவிகையராய் மூரிமத யானையராய்த்
தத்துபரி மான்தேரில் தங்குநராய் - மெத்தும்
அரியா தனத்தாராய் ஆளுவர்பூம் போரூர்ப்
பிரியாதான் நீறணிந்த பேர். 45

பேய்போம் துயரம்போம் பித்தம்போம் போகாத
நோய்போம் மிடிபோம் நுவலுங்கால் - தாய்போல
நன்னிதியைப் போல நயந்திருப் போரூரன்
சன்னிதியைக் கண்டளவே தான். 46

குமரா நமாஎன்று கூறினார் ஓர்கால்
அமரா வதியாள்வ ரன்றி - யமராசன்
கைபுகுதார் போரூரன் கால்புகுவார் தாயுதரப்
பைபுகுதார் சேரார் பயம். 47

குற்றமிழைத் தாலுங் குணமாகக் கொண்டுநம்மேல்
பற்று விடாத பழம்பொருளாம் - முத்தமழைக்
காரூர் அரையனுக்குக் கற்பகநீ ழற்கொடுத்த
போரூர் அரையன்நெஞ்சே போற்று. 48

வேலும் மயிலும் விளங்குஞ் சிறுசதங்கைக்
காலும்ஈ ராறு கனதோளுஞ் - சால
அருளுதவும் ஆறு முகமும்உள போரூர்ப்
பொருள்நமது நெஞ்சமே போற்று. 49

சரவண வாவிச் சலமூழ்கி யன்பால்
குரவணிதாள் நாடிக்கை கூப்பிப்- பரகுருவே
என்றோதி வாழ்த்தி யிரும்போரூர் சூழ்ந்தவரை
நின்றோதி நெஞ்சே நினை. 50

வேலைநினைந் தாயோ வியன்கிண் கிணிசூழ்ந்த
காலைநினைந் தாயோ கனபோரூர்- வேலையாச்
சூழ்ந்துதொழு தாயோநீ சூரியா காரிருளைப்
போழ்ந்திடுவாள் ஏதோ புகல். 51

அம்புலியே போரூர்வந் தாறுமுகங் கண்டாயோ
நம்பும்அடி யார்சபையை நண்ணினையோ - எம்பரனைப்
பண்அளியாற் பாடினையோ பாற்கடல்போ லேவிளங்குந்
தண்அளிநிற் கேதுகாண் சாற்று. 52



கடவுட் பிடிக்கோர் களிப்பாகும் வள்ளிக்
கொடிசுற்றத் தானுங் குலாவும் - அடியர்க்கே
எண்ணுதொறும் உள்ளத்தில் இன்பூறும் போரூரில்
கண்ணுதலான் தந்த கரும்பு. 53

வாளைப் பகடு மடைவாய் அடைக்கவரும்
ஆளைப் பகட்டும் அணிபோரூர் - நீளிடத்தில்
ஐவண்ணம் உண்டங் கதிலோர் அரசிருக்கும்
நைவண்ணம் போகநெஞ்சே நாடு. 54

என்போதம் நின்பாலே யீதலே நல்லறனாம்
உன்போதங் கைக்கொள்வ தொண்பொருளாம் - உன்பாதத்
தானந்தம் இன்பமாம் ஆரமுதே போரூரா
மோனந்தான் வீடாகும் மொய்த்து. 55

சூக்குமையாம் வாக்குந் துனிஆ ணவவுடலும்
நீக்கரிய என்போத நெஞ்சமே - போக்கி
இருந்த படியிருக்க என்றுபோ ரூரா
திருந்தவரம் பாலிப்பாய் செப்பு. 56

ஐவாய் அவாவையும்உன் னாரடிக்கே வைப்பதலர்
மெய்யான அன்பே வியன்சலமாம் - பொய்யாத
உன்போதத் தாலறிவ தொண்சுடராம் போரூரா
என்போத நைவேத்தி யம். 57

அமரர்க்கின் பாகும் அவுணர்க்கே கைப்பாம்
இமயப் பிடிகரத்தில் எய்துஞ் - சமயத்
தலைவனார் மோந்துகொளச் சாரும்போ ரூரில்
கலைவலா ரேத்துங் கனி. 58

மரகத மாமலைமேல் மாணிக்க வெற்புத்
திரகதமாய்த் தோன்றுந் திறம்போல் - வருமுனது
காட்சியினை நாயடியேன் கண்டுதொழத் தந்தருளாய்
மாட்சிதரு போரூரா வந்து. 59

ஆணிப்பொன் என்கோ அருளாழி தானென்கோ
மாணிக்கம் என்கோ மதியென்கோ - பேணிப்
பணிவார் இருள்போக்கும் பானுஎன்கோ போரூர்க்
கணியாகுந் தெய்வத்தை யான். 60

ஆனந்த மாகடலே யாரா அமுதமே
மோனந் தருஞ்சுடரே முத்திவித்தே - தேனந்து
கஞ்சமலர் வாவிக் கனபோரூர் ஐயாஉன்
தஞ்சமெனைக் காத்தாள் சரண். 61

பாம்பாகத் தோன்றிற் பழுதைசற்றுந் தோன்றாதாம்
பாம்பின்றாத் தோன்றிற் பழுதையே மேம்பாடாய்ப்
பொய்தோன்றின் மெய்தோன்றா போரூரா நின்னருளால்
மெய்தோன்றிற் பொய்தோன்றா வீடு. 62

கானலைநீ ரன்றென்று காட்டக்கண் டானொருவன்
மாநலநீ ரென்று மயங்கல்போல் - நீநலமாய்ப்
பொய்யுலகம் பொய்யாகக் காட்டியும்போ ரூரானே
மெய்யெனவுள் நைந்தேன் மிக. 63

கும்ப முனிக்குக் கொடுமலங்கள் மூன்றறுத்துச்
செம்பதுமத் தாள்கொடுத்த தேசிகா - நம்ப
அறியேன் மலமறுத்தாய் அற்புதம்போ ரூரா
சிறியேன்மேல் என்னருளோ செப்பு. 64

அஞ்ஞான வல்லிருள்போய் அன்பர்குணக் குன்றின்மிசை
மெய்ஞ்ஞான பானுவெளி தோன்றச் - செஞ்ஞான
நாதத் தொனிகூவும் நற்கொடிப்போ ரூரன்இரு
பாதத்தை நெஞ்சே பணி. 65

பவளக் கொடியூசற் பன்னிரண்டின் மீதே
இவருற்ற சூரியர்போல் ஏய்ந்து - திவளுற்ற
குண்டலங்க ளாடவரு கோவைப்போ ரூரனைப்போல்
கண்டிலன்பொய் யாக்கருணைக் கார். 66

மூதண்ட கூட முகடுதொடத் தாள்நீட்டுங்
கோதண்ட பாணி குலமருகன் - தீதண்டா
வண்ணமெமை யாண்டான் மகிழ்போரூர் ஐயன்இனி
எண்ணமெனை நெஞ்சே யெமக்கு. 67

ஆம்பல்வாய் விள்ள அடியார் கரகமலங்
கூம்ப வுதிக்குங் குளிர்மதியே - தேம்பி
அழுதபிள்ளைக் காய்போல் அருட்போரூர் ஐயா
தொழுதஎற்கு நீயே துணை. 68



என்செயலாய்த் தோன்ற இருள்திரோ தம்புரிந்தாங்
குன்செயலாய்த் தோன்ற வொளிஅருள்செய் - துன்செயலால்
என்போதந் தோன்றாதுன் இன்பாரப் போரூரா
உன்போதந் தந்தாள் உவந்து. 69

உள்ளந் தனிலே உவமையிலா ஆனந்த
வெள்ளந் துளும்ப விளையாடும் - பிள்ளைகளே
சூழுந் திருப்போரூர்ச் சுந்தரனால் என்பிறவி
ஏழும்போம் நெஞ்சே யெமக்கு. 70

ஒளியாற் கதிரவுணர் ஊனடலாற் காலன்
அளியாற் குளிர்மதியே யாகும் - எளிதில்நனி
தூரம்போய் மீளுதலாற் சொல்மனமாம் போரூரில்
வீரன் கரத்தேந்தும் வேல். 71

கைக்குரிய கஞ்சமாங் கண்ணுக்கோர் காட்சியாம்
மெய்க்குரிய சென்னிக்கே மென்முடியாம் - பொய்க்காதென்
நெஞ்சத்துள் இன்பம் நிறைக்கும் பரஞ்சுடராந்
தஞ்சுற்ற போரூரன் தாள். 72

வள்ளவளச் செம்முளரி மாளிகையின் மீதிருந்து
பிள்ளைமட அன்னப் பெடைநோக்க - உள்ளலொடு
செவ்வாய்ச் சிரலாடும் தேன்வயற்போ ரூராளன்
எவ்வாய்ப்பும் ஆகும் எமக்கு. 73

வீதி மணக்கும் விரைக்குங்கு மச்சேறே
ஓதி மணக்கும் உயர்மாடந் - தாதுசெறி
பூமணக்குஞ் சோலை புகழ்மணக்கும் போரூரிற்
பாமணக்குஞ் செவ்வேள் பதம். 74

மயிலடையுஞ் சந்த மலைச்சாரல் எங்கும்
குயிலடையும் பூஞ்சோலைக் குள்ளே - புயலடையும்
பொன்மாட மெங்கும் புகழ்போரூர் வாழ்தெய்வந்
தன்மா டடைவார் தவர். 75

தன்னை மறந்துகண்ணீர்த் தண்தரள மார்பணியும்
பின்னைமுரு காவென்று பேசுமுளத் - துன்னும்
குயிலாலுஞ் சோலைக் குளிர்போரூ ரானை
மயில்மேல் வரக்கண்ட மான். 76

எத்திக்குந் தானா யிருந்தடியேன் உள்ளத்தே
தித்திக்குந் தேனளிக்குஞ் செட்டியாங் - கொத்தி
அரவமணிப் பைதூக்கி யாடுமயி லேறிக்
குரவமணி போரூர்க் குகன். 77

அன்புந் தருநல் லருளாழி யுந்தரும்பேர்
இன்புந் தருமெண் ணியதருமே - மன்பதையைக்
காக்கும்போ ரூரான் கடையேனைத் தன்னடியான்
ஆக்கும்போ ரூரான் அறிந்து. 78

நோவஉரை யான்எம்மை நோவக்கண் பார்த்திடான்
சாவ நினையான் தளரவிடான் - பாவனைய
சொல்வாய்க் குறத்தி துணைபிரியாப் போரூரன்
நல்வாய்ப்ப ரையன்நெஞ்சே நாடு. 79

திருவடிக்கே தோன்றுஞ் சிறியேன் துயரம்
ஒருவருக்குந் தோன்றாதென் னுள்ளே - சருவிளனை
எந்நாளும் வாட்டும் இடர்களையப் போரூரா
நன்னாளிந் நாளா நயந்து. 80

ஆசையும் அன்பும் அபிமான மும்உனது
பூசையிலே வைக்காது பொய்க்காளாய்ப் - பேசரிய
பெண்ணாசை யாதி பிடித்துழன்றேன் போரூரா
எண்ணாது நின்னை யிருந்து. 81

தீயவனென் குற்றந் திருவுளத்தில் நாடாதென்
தாயனைய போரூர்ச் சரவணா - தூயசுக
வீட்டுக்குள் வைப்பாய் வினையேனைப் பொய்க்காயக்
கூட்டுக்குள் வைக்கேல் குறித்து. 82

வேல்விடலா யென்றுமணி வீரக் கழல்புனைந்த
காலுடைய சூரடுகா ளாயென்று - மாலின்
மருகனே யென்று மடநெஞ்சே போரூர்
முருகனே யென்று முயல். 83

காதலித்த வாறுதவுங் காங்கெயனார் தாளிணையை
ஆதரித்து நன்றாய் அனுதினமும் - நீதரித்துக்
கள்ளமெலாம் போகக் கருதுநெஞ்சே போரூர்வந்
துள்ளமெலாம் இன்பம் உறும். 84



கருப்புச் சிலையானுங் கைகூப் பழகா
பொருப்புச் சிலையான் புதல்வா - விருப்புற்ற
என்னெண்ணத் தின்படியே யீந்தருளாய் போரூரா
உன்னெண்ணத் தின்பாய் உவந்து. 85

நாடுதனி லேயுழலும் நாயேனை வாவென்று
வீடுதனில் வைக்க விரும்புவாய் - பீடுதரு
காட்சியே போரூரிற் கற்பகமே ஆருயிர்க்கோர்
சாட்சியே உன்தாள் சரண். 86

ஆரியனாய் வந்தும் அறிவுக் கறிவாயுங்
கூரியநூல் தந்துங் கொடியேற்குப் - பேரறிவு
தந்தாய் மறந்து தளர்கின்றேன் போரூர்வாழ்
எந்தாய்என் செய்கேன் இனி. 87

என்றும் அபிமானம் ஏழையேன் மீதுவைத்து
நன்றுபுரி யுங்குமர நாயகா - இன்றுசுக
பூரணத்தில் நாயேன் புகவைப்பாய் போரூர்வாழ்
காரணத்தாய் உள்ளே கலந்து. 88

கைவிட்டால் நாயேனைக் காப்பா ரொருவரில்லை
பொய்விட்டார் போற்றும் புனிதனே - மையிட்ட
கண்ணா ரிருவர் கலந்த புயத்தழகா
தண்ணார்போ ரூரா தரித்து. 89

ஆனைமுகத் தாற்கிளைய ஆறு முகத்தானை
மானையிடத் தில்வைத்தோன் மாமகனை - மானுதவு
வேடிச்சி தோள்சேர்ந்த மெய்ப்புயனை நெஞ்சமே
நாடிச்சி போரூர் நயந்து. 90

மெய்யடியார் போல மிகநடிப்பேன் மெய்யடியார்
செய்யடிமைத் தொண்டேதுஞ் செய்திலேன் - பொய்யடியேன்
உன்னாட் கமலபதத் துள்நிறையப் போரூரா
எந்நாட் கிடைக்கும் எனக்கு. 91

நோயுற் றடராமல் நொந்துமனம் வாடாமற்
பாயிற் கிடவாமற் பாவியேன் - காயத்தை
ஓர்நொடிக்குள் நீக்கியெனை யொண்போரூர் ஐயாநின்
சீரடிக்கீழ் வைப்பாய் தெரிந்து. 92

குறைகளையுங் கோவே குணமளிக்குந் தேவே
மறைமுடிவு காட்டு மணியே - இறையவனே
போரூரா என்று புகழ்நெஞ்சே யெந்நாளுங்
காரூர் மயக்கமறுங் காண். 93

கோது படாத குணஞான சாரமே
ஏது படிறேன் இழைத்தாலுந் - தீதாகக்
கொள்ளாது போரூர்க் குமரவேள் நாயேனை
எள்ளாது காத்தாள் இனி. 94

மருளுடையேன் செய்தபிழை வண்போரூர் ஐயா
அருளுடைய நீபொறுத்திங் காளாய் - தெருளுடையாய்
வேறுதுணை காணேன் வினையேன் தனக்குரிய
ஆறுதுணை ஆறா னனம். 95

பஞ்சரத்தின் மூடிவைத்த பைங்கிளிபோல் நாயேனை
அஞ்சிரத்தக் கூட்டி லடையாதே - விஞ்சும்
அருளொளியிற் சேர்த்தி யமுதூட்டி வைப்பாய்
தெருளொளியே போரூரா தேர்ந்து. 96

எப்போதும் என்முடியுன் இன்பொன் திருப்பாத
மெய்ப்போதின் கீழிருக்க வேண்டுமே - மெய்ப்போத
வேதா வணங்கவரும் வித்தகா போரூரில்
நாதா மயில்வாக னா. 97

கன்றழைக்கும் முன்னே கருதிவரு மாப்போல
நின்றழைக்கும் நாயேற்கு நேர்தோன்றி - ஒன்றினுக்கும்
அஞ்சாதே வாவென் றழைப்பாய்தென் போரூரா
எஞ்சாத பேரருளா லின்று. 98

ஊழுக்கா ளாகி யுறுபோக மேகருதிப்
பாழுக் குழைத்த படிறேனை - ஏழுக்குள்
போகா வகைபுரியாய் போரூரா பன்னிரண்டு
வாகா வடிவே லவா. 99

உண்ணாத போகமில்லை யுற்பவியாக் காலமில்லை
நண்ணாத தேகமில்லை நாயினேன் - உள்நாடிப்
பண்டுவந்த துன்பமறப் பார்தொழுபோ ரூரானைக்
கண்டுவந்து நெஞ்சே கருது. 100



களங்கமெலாம் அற்றேன் கதிபுகுந்தேன் நாயேன்
உளங்குளிர ஆனந்த முண்டேன் - வளங்களெல்லாம்
உற்றேன் திருப்போரூர் உத்தமனார் சீர்பாத
நற்றா மரைதொழுத நான். 101

ஆறு முகம்வாழி ஆறிரண்டு தோள்வாழி
தேறுபதம் வாழியிரு தேவிமார் - வீறுபுடை
வாழிவேல் வாழி மயில்வாழி போரூரர்
வாழிசகம் வாழி மகிழ்ந்து. 102

**திருப்போரூர் முருகன் மாலை முற்றிற்று**

உ

# நல்லூர் நான்மணி மாலை

## சொக்கன்

### காப்பு

தாரோன் முருகன் தமிழ்த்தெய்வம் தங்கமணித்
தேரோன் அழகன் திறல்பாடக்—காரோன்
மருகன் கரிமுகத்தன் வந்தென் உளத்தில்
இருப்பின் உளதோ இடர்.

### நூல்

#### வெண்பா

பால்வாய்ப் பசுந்தமிழாற் பாடிப் பரவிடுவன்
வேல்வாய் நிணமளையும் வித்தகனை — நூல்வாயிற்
றேடியுங் காணாவென் தெய்வக் கனிமகவை
நாடியிந்த நல்லூரில் நான். 1

#### கலித்துறை

நானென தென்னுமொர் மையலில் வீழ்ந்திழி நாயெனவே
மானமி தின்றியிவ் வையக மீதினில் வாழ்ந்திடற்கே
ஏனெனை வைத்தனை ஏந்தெழிற் குஞ்சரி வள்ளியொடும்
வானமர் பேரிசை நல்லையில் வாழ்கின்ற மன்னவனே. 2



#### விருத்தம்

மன்னா உன்றன் பாதமலர்
மறவா நெஞ்சைத் தாராமே
பன்னாள் ஏய்த்துப் பாரினிலே
பாவக் குவியல் ஆக்கியெனைக்
கன்னார் உரிக்க வைத்தனையே
கந்தா நீதி இதுவேயோ?
அன்னாய் தாதாய் நல்லைவளர்
அன்பே அருளைத் தருவாயே. 3

#### அகவல்

தருவாய் என்றுன் சந்நிதி அடைந்தே
வருவாய் என்றுன் வழிபார்த் திருந்தனன்
செருவார் புரங்கள் செறுத்தவன் மதலாய்
குருவாய் இலங்கிடுங் குமரனே குகனே
இருளால் அலக்கணுற் றெய்த்திடுஞ் சிறியனை
அருளால் அருகணைத் தாற்றுதல் செய்யா(து)
உருளுஞ் சகடமாய் உலைந்திட வைத்தாய்
பொல்லா உலகப் புன்மையிற் சிதைந்து
நல்லார் இணக்கினை நாடிடா தொழிந்தே
எல்லாம் 'நான்'எனும் இழிமலப் பிணக்கிற்
கல்லாச் சிறியனேன் கதியிழந் துழன்றேன்
பன்னாள் இந்தப் பரிபவக் கடலில்
மன்னா உழன்ற மதியிலி இன்று
விழியினிற் குருடாய் மொழியினில் ஊமையாய்
அழிவுறுங் காலையுன் அருகணைந் துள்ளேன்
கண்களின் மடையைக் கரைத்துயிர் நீராய்
நண்ணிடப் புலம்பிநான் நாவெலாம் உன்பேர்
நிறைத்துநின் றையனே வருகவென் றழைப்பேன்
உறைத்திடு துன்பினை ஒழித்திட என்னருந்
தாயே வாஎனத் தயங்கிடா தழைப்பன்
சேயென் குரலினைச் செவிமடுத் தருள்வாய்
நாவலற் கருளிய நல்லூர்ச்
சேவலங் கொடியாய் வந்திடல் வேண்டும்.

#### வெண்பா

வேண்டு பொருள் நீயல்லால் வேறொன் றெனக்குண்டோ
ஆண்டபெரு நல்லூர் அமர்வோனே - யாண்டுமுளாய்

புள்ளிமயில் ஏறும் புனிதப் பெருமானே
வள்ளிமயி லோடிங்கு வா. 5

**கலித்துறை**

வாவென தின்னுயிர் உன்னடி வைத்து வணங்கிடுவன்
தாவென யானெதுங் கேட்கில னேனெனிற் றந்திடுநீ
யாவையு மேயுணர் வாலறி வுற்றவன் ஆதலினால்-
வாவெனக் கேட்பதொன் றேயெனக் குள்ளது வந்திடுவாய். 6

**விருத்தம்**

வாவென உன்னை வலியிலாக் குரலில்
வற்றிடா ஆசையால் அழைப்பன்
தூவெனச் சீறித் துயரினைப் பெருக்குஞ்
சூழலிற் கிடந்துளம் உருகிக்
கூவிடும் மகவாய்க் குரலெடுத் திடுவன்
குமரனே ஓடிவந் தருள்வாய்
பாவியென் றென்னைத் தள்ளுவை யாயின்
பாரினில் யார்கதி ஐயா!

**அகவல்**

ஐயா உன்றன் அருளதின் பெருமையும்
பொய்யா நீதிப் புகழதும் அடைந்தோர்க்(கு)
எய்யா தளிக்கும் இன்னுளச் சிறப்பும்
மெய்யாய் என்னால் விளம்பிடற் கரிதே
சொற்பல கடந்தவோர் சோதிப் பிழம்பே
கற்பனைக் கெட்டிடாக் கவின்பெறு வடிவே
வேதத் துச்சியில் விளங்கிடும் அறிவே
சீதக் கருணைச் சிவனார் நெஞ்சிலும்
வீரத் திருமகள் விமலையின் மடியிலும்
ஆருந் துதிக்கவுன் னடிகளை வைத்தாய்
நாதமும் விந்துவும் யாவையும் நீயே
ஓதும் புலவரின் உள்ளொளி நீயே
கலியுக விருளிற் கதிரவன் நீயே
மலிதுளி கருணையால் மாநிலம் புரப்போய்
விழவறா வீதியும் வியன்மிகு மூர்தியும்,
அழகமர் கோபுரத் தமைவதும், சிறந்த



மணமலர்ச் சோலையும் மலரணை தென்றல்
உணங்கிடு சேவலின் கொடியதும், சூழ்ந்த
வெண்சுதை செஞ்சுதை வீக்குநற் சுவரும்,
தண்ணொளி பரப்பிடு தீபமும், தம்பத்து
விளங்கிடு மின்னொளி விளக்குடன், அடியார்
துளங்கொளி விரித்திடும் சூடமும் அமைந்த
வேதியர் மந்திர ஓசையுந், தொழும்பர்
ஓதிடு பாடலின் ஓங்கிடும் ஒலியும்
கலந்தெழில் சுமந்திடும் கவின்பெறு நல்லூர்
அலங்கல் மார்பொடும் அமர்ந்தாய் போற்றி
மாற்றரும் பசும்பொனே மணியே போற்றி
கூற்றையும் ஆடல்கொள் குருவே போற்றி
என்றும் அழியா இளமையும் அழகும்
ஒன்றிய குமரநின் உயர்பதம் போற்றி
நல்லைசெய் தவமே நாடுவார் நெஞ்சம்
ஒல்லையில் அணைவாய் உயிரே போற்றி. 8

**வெண்பா**

போற்றியென வாழ்த்திப் புலனெல்லாம் நெக்குருகி
வேற்றுணையை வேண்டி விரைகின்றேன் - ஆற்றியெனை
ஆதரிக்க வேறார் அருகுள்ளார் உன்மயிலைத்
தூதனுப்பித் துன்பம் துடை. 9

**கலித்துறை**

துடைக்குந் தொறும்வழி நீராங் கடலினிற் றோய்ந்ததனைக்
கடக்கும் வழியினைக் காணா தலமருங் காலுனது
படைக்கும் பிணிமுகத் தூர்ந்துவந் தேயொரு பார்வையினால்
இடைக்கும் பவத்துயர் எய்தா வணஞ்செயல் ஏற்றதுவே. 10

**விருத்தம்**

ஏற்றதுன் பாதஞ் சூடுதற் கிந்த
இதயமென் றெண்ணியான் வீணே
மாற்றமொன் றிலாது மாண்பிலா ஊனை
வளர்த்தலில் நாளெலாம் முயன்று
கூற்றுவன் எனக்கே யானெனக் கிடந்தேன்
குயின்மணிப் பதாம்புயம் மறந்தேன்
சாற்றுவார் நெஞ்சுஞ் சரவணத் தடமும்
சார்ந்திடு நல்லையின் முருகே. 11

**அகவல்**

முருகலர் வதனத் தருளொளி காணவும்
திருவளர் விழியெழில் திகட்டிடா துண்ணவும்
கோதறு மாதுளை மொட்டெனச் சிவந்தஉன்
ஏதிலா இதழ்விரி முறுவல்கண் டுருகவும்
பிள்ளமை கனிந்துயிர் உண்டிடும் மார்பெழில்
உள்ளி உள்ளியென் உளங்குளிர்ந் திடவும்
செந்தழல் மதியின் தண்மையை உற்றென
அந்தமில் அழகுறை அங்கையின் முத்திரை
நோக்கி நோக்கிநின் றேங்கவும் ஆங்கொளி
தேக்கியே சுடர்வேல் திகழ்வது கண்டுயான்
பாகெனக் கரைந்துனைப் பாடியே நையவும்
வாகணி தோளெழில் வாங்கிஇன் புறவும்
குன்றியிற் சிவந்தொளி குயிற்றிடும் மென்மலர்
ஒன்றிய அடிகளில் ஒளிவிடுஞ் சலங்கைகள்
கல்கல் என்றுயிர்க் கணிசெயல் காணவும்
செல்வத் தண்டையின் சிற்றிசை கேட்டுயான்
ஆவியை உன்பொருள் ஆக்கவுந்
தாவெனக் கருளைத் தமிழின் வேளே. 12

**வெண்பா**

வேளே குறமகளை வெல்லல் கருதியவள்
தாளே தலையிற் றரித்திடுவாய் - ஆளாய்
உனைவெல்ல யானும் உனதடியைப் பூண்பேன்
எனைவெல்ல யாரிங் குளர். 13

**கலித்துறை**

உளரெம் உயிர்ப்பிணி போக்கும் மருத்துவர் ஓங்குதிரு
வளரும் புராதன நல்லூர்ப் பதியிடை வாழுநரென்(று)
உளமும் உயிரொடு நெக்குற் றுருகி உரைத்திடுவன்
தளரும் பிறவியிற் றாங்கிடும் அன்னவன் தண்ணளியே. 14

**விருத்தம்**

தண்ணளி துதைந்த நெஞ்சத் தழலொளி இறைவன் முன்னாள்
எண்ணரு மதலை கந்தன் என்னினிற் பிறனே அல்லன்
நண்ணரு ஞான மூர்த்தி நல்குவன் அனைத்தும் என்றே
விண்ணமு துமைக்குச் சொல்லின் வேலனே முதல்வன் நீயே. 15



**அகவல்**

நீயே புவிக்கு நிழல்தரும் தருவாம்
நீயே மயக்கினை நிலைத்திடா தொழிப்போன்
நீயே காலமும் கருமமும் உயிர்ப்பும்
நீயே விநாயகன் நீயே நிமலன்
நீயே உமையவள் நீயே திருமால்
ஆயும் அறிவெலாம் அழகனே நீயே
தாயுந் தந்தையும் தமையனும் தம்பியும்
சேயும் மனைவியும் செல்வமும் நீயே
பாயும் புனலெனப் பரிந்தருள் புரிவோய்
செந்தமிழ்க் கிறைவ அந்தமில் புகழோய்
நொந்தவர்க் குருகிடும் குன்றமர் கடவுள்
வந்தனை இயற்றிட வருமருட் பிழம்பாய்ச்
சிந்தையில் நிறைந்திடுஞ் செம்மைசால் சிறுவ
இடபக் கொடியினை ஏற்றியிவ் வீழத்
தடையலர்த் தொலைத்திடும் அருந்தமிழ்க் காவலர்
திசையெலாம் வளர்த்தநல் லிசையென ஓங்கிய
வசையிலா நல்லூர் வாழிடங் கொண்டோய்
உலகம் உவப்புற அருளி
நிலவுவை என்றன் நெஞ்சினில் நிலைத்தே. 16

**வெண்பா**

நிலைத்தபெரும் பாரிடையே நீளுந் துயர்கள்
அலைத்துயிரை அல்லற் படுத்தின் - மலைத்தலிலா
துன்றன் பதமலரை உள்ளும் படிசெய்வாய்
குன்றம் எறிந்திட்ட கோ. 17

**கலித்துறை**

கோவென துள்ளமர் குற்றங் களைந்திடு கூவுதற்கே
நாவினி வேவலி தந்திடு வாய்நம வாதனையைப்
போவென வோட்டிடு புன்மைகள் நீக்கிடு பூதலத்திற்
றேவுனை யல்லதொர் தேவிலை எங்களின் தென்னவனே. 18

**விருத்தம்**

தென்னவன் சோம சுந்தரன் மகனாய்த்
திருவளர் கூடலிற் றோன்றிப்

பன்னரும் வேலைப் பாய்ச்சியே கடலைப்
பவிசற வாட்டிய மேலோன்
முன்னவன் பிரமன் முனைப்பினை ஒட்டி
மூலமாம் பிரணவம் உரைத்தோன்
வன்னமார். தமிழில் வைதவர் தமையும்
வாழவைத் தவன்கழல் ஒலிக்கும். 19

**அகவல்**

ஒலித்திட மறந்ததென் உள்ளத் திசையும்
நலியா நின்றதென் நரம்பறு யாழும்
மழைமுகில் இடியென ஒலிதரு பேரிகை
பழைமய தாகிநின் றுடைவினை யுற்றது
மூவரின் பாவொடு முனைப்பறு மணிமொழி
தாவருஞ் சீர்த்தியின் சேக்கிழார் தமிழும்
வாயிடை அமராது வலியிழந் தொழிந்தன
காற்றிடை ஒலியிலைக் கண்ணிடை ஒளியிலை
மாற்றலர் நகைசெய மாண்பெலாம் இழந்து
கூனியுங் குறுகியும் குமைந்துமே நாளெலாம்
வீணினிற் கழிந்தன வேதனை மலிந்தது
ஒல்லையில் உன்னடி எண்ணிடாப் பழியால்
தொல்லைசேர் வல்வினைத் துயருழந் திருந்தேன்
அந்நாள்,
கல்லையுங் கனியவைத் தென்னையும் இளக்கிடும்
நல்லையான் தண்ணருள் என்றதாம் உண்மை
உணர்ந்தோர் உணர்த்திட உணர்ந்துன்
துணைமலர்த் தாளிணை சூடுதல் குறித்தேன். 20

**வெண்பா**

குறித்தேன் உனையல்லாற் கூடற் குரியார்
வறித்தாம் புவியிதனில் வள்ளி - மறித்தே
தனதடிமை ஆக்குகின்ற தாளல்லால் வேறே
எனதடிமை போக்க இலை. 21

**கலித்துறை**

இலையென் றிரப்பவர்க் கின்னருள் செய்திட ஏந்திழையார்
மலையுற் றொளிர்மணி போலரு குற்றிட வந்திடுவன்
தலையுந் இருகரந் தாள்களும் மார்பொடு சாய்த்தவனை
வலையில் விழுத்திட வந்திடு வீர்புவி வாழ்பவரே. 22



**விருத்தம்**

வாழ்பவ ரேபுவி மன்னவரே
மாலென ஓங்கிய மெய்யவரே
ஆழ்பவ வேலையில் வீழ்பவரே
ஆணவ மாயையிற் சேர்பவரே
சூழ்கலி பற்றுதல் எண்ணாது
சூரர்என் றேநினை சோதரரே
வாழ்விது மின்னலென் றோர்ந்திடுவீர்
வானவர் தலைவனை ஏத்திடுவீர். 23

**அகவல்**

ஏத்திடு வீரே இகத்திடை உள்ளீர்
சாத்துணை வரையவன் தாளிணை சார்ந்து
நானெனும் உணர்வினை நசுக்கிடும், அன்பால்
ஊனினை உருக்கிநின் றோலமிட் டழுமின்
வானவர் தமக்கும் மற்றுளோர் எவர்க்கும்
மூலமாய் நின்றவிம் மூர்த்தியை உணர்மின்
கோலமார் குமரா குருபரா கந்தா
ஏலமார் குழலியர்க் கேந்தலே குகனே
ஆலமர் கடவுளின் அரும்பெறல் மகனே
வேலனே கடம்பா வித்தகா முருகா
பார்வதி பாலகா பத்தர்கட் கெளியாய்
ஆர்வலர்க் கருளும் அறுமுகப் பெருமான்
காலமும் நினைவுங் கடந்திடு கடவுள்
சோலைவாய் தோறுந் துலங்கிடும் எழிலே
குறிஞ்சியின் செல்வக் குவையிலும் மருதத்
திறைஞ்சிடு கதிர்வயல் இருப்பினும் ஈண்டிய
பசுமைசார் முல்லையின் பருமரக் காட்டிலும்
அருமைசேர் நெய்தலின் அவலக் குரலிலும்
பாலையின் கொடுவிழிப் பார்வையி னிடத்தும்
பாலனாய் நின்றருள் கூட்டுவை நீயெனில்
யாவுமுன் ஆடல் நீ யாவினும் ஒளிர்வோய்
தாவுமுன் சேவடி தன்னிடை எம்மைச்
சேர்த்திட ஆவன செய்வையென் றுரைத்துக்
கூத்துக்கள் ஆடிக் குலவுக
சூத்திர நாதனாம் வேலொடுஞ் சேர்ந்தே. 24

**வெண்பா**

சேர்ந்தே குமரன் திருவிழியின் தீக்கையினை
ஆர்ந்தே அளப்பரிய ஆனந்தம் - கூர்ந்தே
தலையால் நடந்தாலும் தண்டிக்கா தெம்மை
நிலையாக வைத்திடுவன் நீடு. 25

**கலித்துறை**

நீடெமை வைத்துயிர் மேவிடு துன்பினை நீக்கிடுவாய்
நாடென மாடென வீடென ஓடென நச்சியதாற்
பாடுறும் இவ்வுடல் ஓடிட இன்றுனைப் பார்த்தழுது
வாடிடும் எங்களை உன்னடி வையென வாழ்த்துமினே. 26

**விருத்தம்**

வாழ்த்துமின் எங்கள் வரைமகள் பெற்ற
வள்ளலின் மணமலர்ப் பாதம்
தாழ்த்துமின் தலையைக் கூப்பிடுங் கரத்தைத்
தயாபரா வருகஎன் றழைமின்
பாழ்த்திடும் பிறவிப் பவப்பிணி போக்கப்
பரிந்தவன் புகழினை உரைமின்
வீழ்த்திநின் றசுரர் வீறினைத் தொலைப்பான்
வேலினும் பெரியதொன் றுளதோ. 27

**அகவல்**

உளதோ இலதோ மெலிதோ வலிதோ
நுளைநுண் அணுவிலும் நுண்ணிதோ பெரிதோ
ஒளியோ இருளோ உருவோ அருவோ
களியோ துயரோ கனவோ நனவோ
எனவுனை எண்ணியிவ் வுலகிடை ஆய்ந்து
மனத்திருட் குகையிடை மயங்கியே கிடந்து
தாமெலாம் அறிந்தவர் என்னவே தருக்கி
நேமியின் பரப்பிடை நீள்துயர் நல்கி
அரைசியல் பேசியும் அறத்தியல் துறந்தும்
உரையியற் றிறத்தால் உலகினை மருட்டிக்
காக்கையில் வெண்மையும் கடலினிற் சிவப்பும்
யாக்கையில் நிலைப்பும் நஞ்சினில் உயிர்ப்பும்
கண்டனம் என்றிவர் காட்டிடுந் திறத்தை
உண்டனன் ஆதலின் உலகியல் இதுவென



எண்ணியே இவரின் இருக்கையை நீங்கி
நண்ணியே உன்பதம் நாடுதல் குறித்தேன்
ஆனால் ஒருகணம் அவர்நிலை ஓர்ந்தால்
தேனார் சோதரர்த் துறத்தலுங் கொடிதாம்.
என்னவர் என்னரு கிருப்பவர் என்பதால்
அன்னவர்க் காயும் அழுதிடல் என்கடன்
பொன்மலர்ப் போதினிற் புரண்டுநின் றிவர்கள்
மையலைப் போக்கிடு மன்னவ என்பனேல்
தையலாம் பரையின் தனயனே இவர்கள்
செய்வன அறியாத் திறத்தினர்
உய்வினை அளித்திடல் உன்கட னன்றோ. 28

**வெண்பா**

கடனன்றோ காத்தெமையுன் காலடியிற் சேர்த்தல்
விடனொன்று கண்டத்தான் வீரா - மடனொன்று
வள்ளி குறமாதின் வாழ்வே வழங்கிடுவாய்
உள்ளியுனை ஓதவொரு சொல். 29

**கலித்துறை**

சொல்லிற் குழைத்துயர் சோதிக் கவிபல சொன்னவர்தம்
அல்லற் கடலினை இல்லை யெனச்செயும் ஆதவனை
நல்லைப் பதியுறை செல்வக் கனியினை நாயகனைப்
புல்லற் குளையுமென் நெஞ்சமும் மெய்யும் புதுமையிதே. 30

**விருத்தம்**

புதுமைக் கவிமலர் சூட்டியுனைப்
புந்தியில் வைத்திட முனைவாரும்
கதுவுநின் மேனியைக் கண்களினாற்
கவ்வி யுளத்திடை வைப்பாரும்
கதியை நாடிய காதலினாற்
கண்களில் மடைதிறந் தழுவாரும்
நதிபோல் உன்றனை நாடுகிறார்
நல்லையின் கடலே ஏற்றிடுவாய். 31

**அகவல்**

ஏற்றிடற் குரியவுன் இன்னருள் பெறாமல்
நாற்றமார் சடத்தினில் நாளெலாங் கிடந்து

பொய்யிலும் புனைவிலும் பொழுதினைப் போக்கி
நையும் நையுமிந் நலமிலா மாக்களைப்
பைய வுன்னருட் கதிர்களை நீட்டி
உய்ய வைப்பதுன் உயர்கட னன்றோ
கலியுக வரதனாங் கந்தனே நாமுன்
வலியினைத் தாங்கிடும் வல்லமை இல்லாத்
தூசுகள் ஆதலின் துன்பந் துடைப்பாய்
மாசுகள் ஒழித்தெமை மாண்பிடை வைப்பாய்
எறிதிரைக் கடலிடை அலைப்புறும் அலையாய்
மறித்தெமை வாட்டிடும் மாயைகள் பலவாம்
தலைவராய் நின்று தருக்கிடல் குறித்தும்
கலைஞராய்த் திறனினைக் காட்டுதல் கருதியும்
பலகலை கற்றிடு பண்டிதர் இவரென
நிலவுல கழைத்திடும் நீர்மையைப் பெறவும்
முல்லை மூரலள் மதியொளிர் முகத்தி
இல்லை என்றிடும் இடையினள் தன்னைப்
புல்லி இன்பப் புதுப்புனல் வீழவும்
செல்வச் சிறுவரின் சிறப்புக்கள் காணவும்
உள்ளி உள்ளி உலகிடை உழலும்
எள்ளற் குரியராம் எமக்கொளி காட்டி
உண்மையை உணர்த்திடல் உன்கடன் அன்றோ?
மஞ்சுதொடு கோபுர நல்லூர்
அஞ்சொ லாருடன் அமர்ந்திடும் அழகே. 32

### வெண்பா

அழகுள்ளம் நல்லறிவோ டன்பாகும் நீர்மை
பழகுந் தமிழிடத்தே பற்று - குழைகின்ற
பத்தியுறை சிந்தை பரன்சேய் அளிப்பானேல்
இத்தரையே முத்திக் கிடம். 33

### கலித்துறை

இடமென் றெழில்நல்லை எய்திடும் எங்குகன் எண்ணுவனேல்
விடமென் றுறுதுயர் விக்கினந் தொல்லைகள் வீழ்ந்திடுமாம்,
குடனீர் மலரொடு சிந்தையும் அன்பதுங் கொண்டவனை
மடவார் தழுவிடு மன்னனை ஏத்தி வணங்குவமே. 34



### விருத்தம்

வணங்குவம் எங்கள் வள்ளிதெய் வானை
  வரித்திடும் இளைஞனைக் குகனைப்
பிணங்கிடு நெஞ்சே பேதையே வீணிற்
  பின்னென வைத்திடா தணுகி
உணங்கிய அன்பால் விழியெலாம் நீராய்
  உடலினிற் புளகம தூர
அணங்கரொன் றில்லா தாடியே பாடி
  அவனடிப் போதினில் வீழ்வாய். 35

### அகவல்

வீழ்வாய் மனமே வீழ்ந்துநின் றுன்னில்
ஆழ்வாய் அமைந்தொளி அணைந்திட முயல்வாய்
சொல்லொடு மொழியறுந் துரியா தீதத்
தெல்லையில் நின்றுனை இழந்திடல் குறிப்பாய்
கல்வியும் பயனுங் கலைகளும் யாவும்
தொல்லைகள் சுமையாந் தொலைத்துநீ ஏதுஞ்
சொல்லா தடங்கியே சும்மா இருப்பாய்
வல்லவன் ஒருவனே வலியிலர் நாங்கள்
நல்லவன் எமக்கவன் நல்லவே செய்வான்
படைத்தும் இருத்தியும் பார்வையிற் காத்தும்
துடைத்தும் அருளியும் துயர்களை முருகனை
யாவனென் றெண்ணினை யாதுநீ குறித்தாய்
ஏவரும் துதித்திடும் ஈரறு தோள்களைப்
போற்றுதல் ஒன்றே பிறவி
மாற்றுதற் குளதாம் மருந்தென ஓர்வாய். 36

### வெண்பா

ஓர்வாய் மனமே உனக்கொன் றுரைக்கின்றேன்
சேர்வாய் முருகன் திருக்கோயில் - தேர்வாய்
அவனல்ல தொன்றும் அசையாதென் றெண்ணிச்
சிவனென்றே சேவித் திரு. 37

### கலித்துறை

இருவென் றுலகிடை வைத்தவன் தாள்களை எண்ணியிசை
மருவும் வகையினில் வாழ்ந்திடல் வேண்டுமிம் மாநிலத்தில்

உருவும் எமக்கென நல்லையில் வைத்திடும் உத்தமனின்
அருளுக் கெமதுயிர் ஆட்செயின் ஒப்பரும் ஆனந்தமே. 38

**விருத்தம்**

ஆனந்தப் பெருஞ்சுனையிற் றுளைந்தே ஆடி
ஆலமர்வான் மகன்புகழை நாளும் பாடி
நானென்ற வல்வினையைப் போக்கிப் பாடி
நாதாந்தத் துச்சியிலே நின்று பாடித்
தேனொன்று மொழியாரின் பங்கன் சீர்த்தி
தேரோடும் வீதியெலாம் தெரிந்தே பாடி
வானொன்று புகழ்நல்லூர்த் திறங்கள் பாடி
வாழ்த்தியதாற் குமரனிங்கு வந்திட் டானே. 39

**அகவல்**

வந்தனன் முருகன் வளரெழிற் குமரன்
அந்தமில் புகழோன் அருந்தமிழ்க் கிறைவன்
சந்தமர் கழலொடு சதங்கைகள் ஒலிக்கக்
கந்தமார் கமலக் கவின்பதங் காட்டி
வந்தனன் சிறுவன் வரைமகள் புதல்வன்
ஆயிரம் ஆயிரம் சூரியர் வந்தென
மாயிருள் போக்கிஇவ் வையந் தழைக்க
வந்தனன் ஒருவன் வானவர் தலைவன்
பொன்கல நன்கல மணிக்கலம் பூண்டு
மென்மலர் மாலைகள் மேனியில் நிறைத்து
தீச்சுடர் ஏய்த்திடும் திகழுடை அணிந்து,
மாச்சுடர் மேனியில் நீறொடு சாந்துற
வந்தனன் இறைவன் வள்ளியின் கணவன்
அறுமுக மலர்களில் முறுவலை இறைத்தும்
நறுமலர் விழிகளில் திருவருள் நிறைத்தும்
மடநல் லாரிரு மங்கையர் அருகுறச்
சுடர்நெடு வேலொடுந் துதைபடைக் கலத்தொடும்
வந்தனன் அருளோன் வரையினில் உறைவோன்.
வெண்சங் கூதுமின் வெற்றிகொண் டாடுமின்
நண்ணியே தீபமுந் தூபமுங் காட்டுமின்
தோரணம் நாட்டுமின் சூடமும் ஏற்றுமின்
ஆரணம் ஓதுமின் பேரிசைத் தமிழிற்



றிருப்புகழ் தன்னை விருப்புடன் பாடுமின்
பகழிக் கூத்தனின் பாடல்கள் உரைமின்
குருபரன் கவிகளைக் கூறுவீர் இசையுடன்
அரகர வென்றுங் குருபர வென்றும்
சிரமதிற் கரம்வைத் தருள்முரு காற்றுப்
படையினைப் பாடிப் பரவசம் எய்துவீர்.
நல்லான் அவனை நயந்து
செல்வீர் யாவிரும் நல்லூர்ப் பாலே. 40

**நல்லூர் நான்மணிமாலை முற்றிற்று**

உ

# குன்றக்குடி
# சண்முகநாதப்பெருமான் வகுப்பு

## தண்டபாணி சுவாமிகள்

### காப்பு

**வெண்பா**

வீறுகுன்றை மாநகர்ச்சேய் வேண்டிஎன்னைக் கேட்டபடி
ஆறு வகுப்பும் அறைகின்றேன்—கூறும்
கடன்தீர்த்துப் பொன்விளைத்துக் கற்கிணற்றில் நீர்தந்(து)
அடம்போக்கி வீட்டில்வைத்தற் காம்.

### 1. குன்றக்குடித்தல வகுப்பு

*தந்ததன தந்ததன—தந்தத் தனத்தனனா*

அம்புவிம டந்தையணி யுந்திலக மென்றுணரும்
அன்பர்கள்வி ரும்பும்வரம் - மிஞ்சக் கொடுப்பது,மேல்
அண்டபகி ரண்டமும்நி றைந்தகுகன் என்றுதினம்
அஞ்சலிசெய் கின்றவர்கள் - நெஞ்சத் தைஒப்பது,மால்
அன்றவுணன் முன்புவிய ளந்திடவ ளர்ந்திலகும்
அந்தவுரு வம்பொருசி - லம்புற்ற பொற்பினதே
அஞ்சமொடு சங்கினமும் வண்டு(ம்)மது வும்பொலியும்
அம்புயம லர்ந்ததடம் - ஒன்றிச் சிறப்பதுவே
ஐங்கணையு டன்கழைநெ டுஞ்சிலைகொ டெங்கும்அடர்
அங்கசனை வென்றவரும் - வந்தித் திடப்பெறுமே
அந்தமுத லின்றிநிறை யுங்கலைமின் இன்பநுகர்
அந்தணன்வ ரைந்தவிதி - யும்பிற் படச்செயுமே
அண்டலர்நி ணங்குருதி உண்டுமகி ழும்படையொ(டு)
அங்குறுக ணம்பலநெ - ருங்கித் துதிப்பதுவே



அந்தரர்வெ ருண்டழவெ குண்டமுசு குந்தன்இணை
யன்றியிலை யென்றுளதொ - ழும்பர்க் குவப்பினதே

சிம்புள்உரு வங்கொடுபி றந்துவெறி கொண்டுளதொர்
சிங்கம்நுக ரும்பரன்உ - ணர்ந்துற்ற தைத்தருமே
செண்டுகொடு தங்கமலை அஞ்சமுனி யும்பெருமை
சிந்தையில்நி னைந்திடினும் - இன்புற் றிடற்கிடமே
செங்கணர வின்குலம்வ ருந்தஅக வுந்தொனிகொள்
செஞ்சிகிவி ழைந்தபடி - அன்றெக் களிப்புறலே
திண்புவிவ கிர்ந்தநகம் ஒன்றுபுள்வ ரைந்தகொடி
திங்கள்தொறும் அம்பொனவிர் - கம்பத் திடத்தகுமே
தென்றிசையி டங்குடிகொள் அந்தகன்வி டுங்கொடியர்
சென்றுயிர்க வர்ந்திடுவி - தஞ்சற்றும் அற்றுளதே
சிந்துநுவல் புங்கவன்அ ருந்தமிழ்உ ணர்ந்தபலர்
சிந்துரமு ழங்கலின்மு - ழங்கிக் குதிப்பதுவே
தின்பனவும் உண்பனவும் இன்றியவ ரும்பழுதில்
செந்திருவ மைந்தமரும் - அம்பெற் றிமைத்திடலே
சிங்களக லிங்ககுட(கு) அங்கமுதல் எங்குமுளர்
தெண்திரைகொ ணர்ந்தளவு - பொன்குப்பை துற்றதுவே

கம்புநிக ருங்களம்இ யைந்தகுற மங்கையர்கள்
கங்குல்பக லும்பறைய - றைந்திட் டிசைப்பதுவே
கந்தனிரு செஞ்சரணம் நம்புவது நன்றெனும்மெய்
கண்டவரில் விண்டவர்க - ளுஞ்சித் தியற்றுவதே
கஞ்சமுத வுஞ்சதுமு கன்றன்வத னங்கள்தரு
கண்டுறழ்பெ ருஞ்சுருதி - யின்சத்த முற்றியதே
கங்கையணி யுஞ்சடில நம்பர்மொழி கின்றபல
கண்டமுள தந்திரம்வி - ளங்கிப் புகழ்ப்படுமே
கண்கள்மலி யும்பொருவில் அங்கமுறும் இந்திரர்கள்
கம்பமத தந்திமிசை - வந்துற்று மெச்சுவதே
கந்தரமெ னும்படித ருந்தொழில்மு யன்றவர்கள்
கன்றலில்சு கம்பெறவு - ழங்கத் தொடுத்ததுவே
கஞ்சுகம ணிந்தமுலை கொண்டமயி லென்றவிர்சு
கந்தியர்ந டஞ்செயும்அ - ரங்கத் துயர்ச்சியதே
கந்துகம்அ னந்தமும்வெ ருண்டிடம கஞ்செய்பவர்
கண்பொரமுன் வந்ததகர் - ஒன்றிற் கிருக்கை,விணோர்

கொம்புதவு மைந்தர்புரை யுங்கரும விஞ்சையினர்
கொண்டநினை வுஞ்சரதம் - என்கச்செய் பெட்பினதே
குஞ்சரமி கும்பொழில்வ ளந்திகழ்கு றிஞ்சிகமழ்
குங்குமப தம்புனைசி - லம்புத்தொ னிக்கொள்வதே
கொன்றிரையு ணுஞ்சிலர்கு - றுங்குடில்வ ளர்ந்தகுயில்
கும்பிதரு மைந்தர்நிகர் - தொண்டர்க் குயிர்த்துணையே
கொஞ்சமும்இ ரங்கலில்ம னங்கொள்ஒரு வன்பிளவை
குன்றிடமு யன்றஅருள் - பொங்கிக் கிடப்பதுவே
கொந்தவிழ்க டம்புகுர வம்பொரும ரங்கள்பல
கும்பன்முதல் அன்பரென - நின்றிட்ட சுற்றினதே
கொன்றைஅண வுங்கவினு றுங்கழைவ னந்தருமொர்
கொண்டலுற ழுங்கவியை - வஞ்சித் தழைத்ததுவே
கும்பலென வந்துபல்அ னந்தர்சொலி னும்பெருகு
கொன்கொடுது லங்குவது - வென்றித் திருக்கைவைவேல்
குண்டகரெ னுந்தகுவர் தங்களுயிர் உண்கவிடு
குஞ்சுரு வுறுங்கடவுள் - குன்றக் குடித்தலமே. 1

## 2. முருகேசன் ஆடல் வகுப்பு

***தனனதன தானதன - தனதான தானனா***

இருடியர்அ னேகர்பர வியபரம னார்நுதலின்
எரிவிழியில் நீடுபொறி - யினமாகி வீழுமே
இமையவரெ லோருமகிழ் வுறவனச வாவிநடு
இளமதலை யாமுருவம் - உடனேகு லாவுமே
இமகிரணன் ஆர்வமிகும் உடுமகளிர் மூவிருவர்
இதயமெலி யாதவர்கள் - மடிதோறும் மேவுமே
இடபமிசை யேறிஅகல் ககனவெளி யூடுவரும்
இருவரிடை நாளுமவர் - உயிர்போல்நி லாவுமே
இகபரமும் வாழவொரு மயில்முதுகில் ஏறியினி(து)
எழுகடலும் ஏழுவிதம் - உறுதீவும் ஏகுமே
எமன்முதலி னோரும்வழி படுதகுவர் சூழவரும்
இபமுகனை மாயமலை - யொடுதூளி காணுமே
இறைவன்மொழி தேறிஒரு சபதம்நுவல் சீயமுகன்
எளியதெனும் ஓர்குலிசம் - அதைமாய வீசுமே
இடிவெருளும் ஓசையொடு வருகொடிய சூரனெனும்
இருள்நசியு மாறுகதிர் - வடிவேலை ஏவுமே



அருவபர மோனிகளும் உருவபர யோகியரும்
அறிவரிய தானபொது - அநுபூதி யீவதே
அரவணிம யேசுரனும் மலயமலை யாதிபனும்
அருணகிரி நாதனிகர் - பெரியோரும் நாடலே
அலகையத னால்மெலியும் அவர்பலரும் ஓர்குகையில்
அடிபரவு கீரனொடு - களிகூர நேருமே
அதிரசமும் மோதகமும் வடைபயறு தோசைமுதல்
அனையனவும் வாரிநுகர் - பவன்நாண நீடுமே
அலர்கமல நாண்மலரின் மிசைகுலவும் நான்முகனை
அழுதலற மோதிஒரு - குகையூடு போடுமே
அகிலமுண வாம்ஒருவன், வசமழியும் வானவர்கள்
அகமகிழ வேசமர்செய் - களமீது பேசலே
அழிவில்அம ராபதியின் முதல்வனுறும் வேயுருவம்
அதுதவிர மாமகுடம் - முடிசூடும் நீரதே
அலையுததி நீர்பருகு முகிலினமெ லாமுலவும்
அசலமொடு சாரலினும் - அகலாது சார்வதே

ஒருகயிலை நாலுபத மொடுதிரிதல் போல்நிலவும்
உருவமத வேழமகள் - அநுராக சீலமே
உழையுதவ வேடர்சிறு குடியில்வளர் வாள்கலப
உடைதழுவு தேர்கருதி - முதியோனும் ஆனதே
உயருமறை நூல்களுணர் கவுணியர்க ளூடொருவன்
உயிரனைய சேயெனவும் - வருமேன்மை தோய்வதே
உறியிலுறு பாயுடையர் கரமருவு பீலியுடன்
ஒளிர்கழுவி லேறிமடி - தரவாது கூறலே
உலகமுழு தாளும்வலி பெறும்வழுதி யாகிஅரன்
உறையுமக மேருஅழ - இடிபோல மோதலே
உரகபட மேயனைய கடிதடமி னாள்சிறுகை
உதவமயில் மீதுநொடி - யிடைபோகி மீளுமே
உரைதவறி ஆசைகொடு மனைவிமக வாதியரொ(டு)
உணமுடுகி னான்உணவு - கெடுமாறு தேறலே
உருளுமொரு தூணடியில் - மரணபயம் ஏதும்இல(து)
உறுதியுட னேதலையை - இடுவாளை ஆள்வதே

கருமபர வாதியர்கள் அறிவிலறி யாதநிலை
கருதும்அடி யார்களது - நினைவூடு லாவலே
கனல்வரைகு லாவும்முது நகரிலொரு தூணினிடை
கலபமயி லேறிவரு - வதுகோதில் நீதிசேர்

கரியநெடு மாலனைய அரசொருவன் வாள்விழிகள்
கழியஉடன் வேறுவிழி - பெறுமாறு காணலே
கனிதமிழ்வி னோதமுறு கிளியைமதி யாமலிகழ்
கயவர்களை நூறிஅவர் - குலமீது சீறுமே
கவிகள்பல பாடிஅன லொடுபுனலி லேஇடுமோர்
கடையனுடன் ஈயுமொழி - சொல்நாணு றாததே
கனவிசன மோடுமலை மிசையுருளும் நாளிலுடல்
கழுகினம்உ ணாதநல - முறநாடி யீகையோர்
கடைகள்தொறும் ஏகவிடு வதுபெரிய பாறையிடை
கவின்மருவும் ஓர்கிணறு - தொடுமாண்பை சேர்வதே
கவுரிதரு பாலன்அறு முககுமரன் ஈடில்பர
கதிதரும யூரகிரி - முருகேசன் ஆடலே. 2

## 3. திருவருட்சத்தி வகுப்பு

***தனதனத் தத்ததன - தனதனத் தத்தனா***

உளதெனப் பற்றுநரும் இலையெனத் தர்க்கமிடும்
உரைபடித் தெய்ப்பவரும் - இலகவைத் திட்டதே
உலகவுற் பத்திசெயும் அயனெனப் புட்பமிசை
உயர்மொழிச் சத்தியொடு - தினமுறத் தக்கதே
உததியிற் பச்சைமுகில் அனையபொற் புற்றருளொ(டு)
உரகமெத் தைக்கண்நனி - துயிலுறத் தக்கதே
உழையணிக் கைப்பரமன் எனவுருப் பெற்றிணையில்
உமையிடத் திற்றிகழ - விடையுகைத் துற்றதே
உருவெனச் செப்புநரும் அருவெனத் தக்கவரும்
உணர்வினுக் கொத்தபடி - மிகஅருச் சிப்பதே
ஒளிமலர்ச் செச்சைகுர வலர்கடப் பத்தொடையல்
உறுபுயத் திற்பொருவில் - அயிலெனத் துற்றதே
உவகைமுற் றித்தவள இபமெடுக் கக்குளிரும்
உதகபுட் பத்தவிசில் - மதலையிற் புக்கதே
உரியவிற் கைக்குறவர் பரணிடத் திற்குயிலொ(டு)
உறழ்வனப் புச்சிறுமி - யெனவுறக் கற்றதே

களபமெத் தப்புனையும் முலைவனப் புற்றசசி
கணவன்முற் பட்டஅம - ரரைவதைத் தற்றைநாள்
கனகவெற் பிற்பரவு பனவனுக் குச்சிறிது
கருணைவைத் துப்பழைய - படியிரட் சித்ததே



கடலுடைத் துப்பரிதி மதிபெயர்த் துத்துருவ
கரமணிச் சக்கரம - தனைமுறித் துச்சிலோர்
களிபெறப் பற்பலர்தம் வசமறச் செப்பரிய
ககனவட் டத்தைஅரை - நொடியினிற் சுற்றுமே
கவலைவிட் டுக்கொடிய பொறியடக் கச்சிறிது
கருதுநர்க் குச்சிறிய - பதமெனக் கிட்டுமே
கனிதமிழ்ச் சொற்கள்கொடு பனுவல்செப் பிப்பரவு
கவிஞரைச் சுற்றிஅழ - லெனமிகச் சுட்டதோர்
கலியொழித் துப்பதும மகள்இணக் கத்தில்மகிழ்
கருமுகிற் கொத்தபுகழ் - உறமுயற் சிக்குமே
கடுகெனத் தக்கபொருள் தரவுநட் பற்றபல
கயவர்முற் றுட்டர்செயும் - இகல்மிகக் கொட்டுமே

தளமிகுத் துக்கமழும் மலர்முகத் துற்றவிதி
தனைஅதட் டிப்பெரிது - முறையிடக் குட்டுமே
தகுவரைச் செற்றமரர் குலமுவக் கச்செயுமோர்
தழலொளிச் சக்கரம - தனையுரத் திட்டுவாழ்
தடமருப் புக்களிறு பொருகளத் திற்பகைவர்
தமதுமுற் பட்டலறி - விழஒறுத் திட்டதே
சபதமிட் டுக்குதிகொள் அரிமுகற்(கு) அச்சமொடு
தளர்வுறச் சத்தமிடு-மகிமையைப் பெற்றதே
சலதியிற் புக்குவெளி முகடுமுட் டிக்கறுவு
தனிமரத் துக்குருதி - சொரிதரக் குத்துமே
சகுணபத் தித்துறையி னிடைநடத் திப்பொருவில்
தவமுடிக் கத்துணியும் - அவருளத் திச்சையே
சகலர்அற் பக்குணமொர் பொருளெனற் கொப்புகிலர்
சரதசித் தித்திரளி - னதுவிதைக் கொத்ததே
தடிமுரட் டுக்குணமொ டுயிர்வதைத் துட்கொள்பவர்
சமயமொத் தத்தினையும் - ஒருவுமெய்க் கற்பதே

வளமெனப் பட்டவைகள் முழுதுமுற் றுத்திகழும்
மலைகளுக் குக்குவடு - தொறும்வியப் புய்ப்பதே
வறுமைமுற் செப்புபல பிணியொழித் துத்தினமும்
மனதிலிச் சித்தபடி - பெரிதுதித் திப்பதே
மறியறுத் துக்குருதி அரிசியிட் டுப்பிசையும்
வகைபடித் திட்டபுல - வனும்உயத் தொட்டதே
வளரொளிக் கற்பகமும் நிதிகள்முற் பட்டனவும்
வலியிளைக் கக்கொடையை - நிதம்நடப் பித்ததே

வனசமொக் குட்புரையும் முலையினர்க் குட்டளரும்
மகவினுக் குக்கிளியின் - உருவமைத் திட்டதே
மலையவெற் புக்கருகில் நிலவுபொற் புற்றகழை
வனமதிற் பத்தனொடு - பிழைமிகச் சொற்றதே
மறைகளுக் கெட்டரிய செயல்படைத் துச்சமய
வழிகள்கற் பித்தபல - குரவரைத் துய்த்ததே
மயில்வரைச் சுப்பிரம ணியனெழிற் கட்கடையில்
விதிதரப் பெற்றதொரு - திருவருட் சத்தியே. 3

## 4. வேலாயுத வகுப்பு

*தானன தத்தன - தானதனனா*

ஆதிமு தற்பெரு மானிடம் உற்றுல
காயிரம் அற்புதம் - மேனாள்தருமே
ஆறுவ கைப்படு மாயையி னுக்குற(வு)
ஆகிய வற்றிடை - தோயாதுறுமே
ஆரண வித்தகர் ஆகம விற்பனர்
ஆமிரு வர்க்குமொர் - ஆகாரமதே
ஆசறு பத்தியி னோடுது திப்பவர்
ஆகுல முற்றற - வேமோதிடுமே
ஆனைமு கத்தொரு தாரக னைத்துணை
யானபொ ருப்புட - னேசாடியதே
ஆழ்கடல் மத்தியில் மாமர மொத்தெழும்
ஆணவன் வச்சிர - மேல்கீறியதே
ஆயுள்மி கப்பெறு தேவர்த ளைப்படும்
ஆகவ மற்றிடு - மாறேவியதே
ஆவிய தைத்துள கீரன்மொ ழித்தொடை
யால்அல கைக்கெம - னாம்வீறுளதே

கோதில்வ ளத்தரு ணாபுரி யிற்கிளி
கூறிய முத்தமிழ் - நூல்பாடியதே
கூதள நற்றொடை சூடிவ னத்தமர்
கோதைவி ழித்துணை - போல்நீடியதே
கோகன கத்திரு வேநிகர் பொற்புறு
கோமளை கற்பினை - நேர்கூர்மையதே
கோபமி குத்துல கோரைவ ருத்திய
கோலவு டற்பிள - வாமாறடலே



கோளறு முத்தலை யாதிய சத்திர
கோடிக ளுக்கொரு - தாயாகியதே
கோரம னத்தொடு சூதுரை செப்பிய
கோளரி யைக்கொல - நாடாததுவே
கோழியு ருப்பொலி தானைவ யக்கொடி
கோளகை உச்சியில் - வாழ்சீர்தரலே
கூவுதொ னிச்சிகி யோடுநி னைப்பவர்
கூசுதொ ழிற்பரி - தீயோர்பகையே

மேதினி சுற்றிய சேலையெ னத்தகும்
வேலையும் வற்றிடு - மாறேகியதே
வேள்விம லைக்கரு கானபு னத்துறும்
வேடர்வி ழச்செயும் - ஓராடலதே
வேசிம யக்குறு வான்வகிர் வெற்றிலை
மீதும்உ ருக்கொள - நாணாததுவே
மேதிந டத்தும்அ கோரப லச்சிமன்
வேகம றப்புகழ் - வார்பால்உறுமே
மேதகு சத்திய சீலர்த மக்குயர்
வீடுமு தற்றரும் - ஞானாகரமே
வீரர்மு தற்பல பூதர்க ளுக்குறும்
வேதனை யைச்சுடும் - வீறார்வதுவே
வீசுத டக்கையில் ஓர்கனி பற்றிய
வேழவ யிற்றிடை - போய்மீள்வதுவே
வேணதி ருப்புகழ் பாடுமொ ருத்தன்நெல்
வேலியி னிற்செயும் - மாபூசையதே

ஓதிமம் ஒத்துள வாணிமு தற்சிலர்
ஊறுகெ டத்தொழு - தேபேணுவதே
ஓர்புளி யிற்கிளை வீழவெ னக்கவி
ஓதிய பத்தனை - நேர்வார்உறவே
ஊழ்வினை யைப்பெரி தாகநி னைத்தயர்
ஊமர்க ளுக்குத - வாமேன்மையதே
ஓகைமி கப்பெறு சீர்திகழ் சித்தரும்
யோகப தத்திடை - நேர்காணுவதே
ஊகந லத்(து)அற வோரைந கைப்பவர்
ஊறுதி ரத்திடை - யேமூழ்குவதே
ஓவரும் அற்புதம் நீடுகு றிச்சியென்
ஊர்க ளிடத்துவெ - வேறாஉறுமே

ஊடுள கற்கிரி ஏழும்இ டித்தறல்
ஓதைந லத்தின்ஒ - ரா(று)ஈவதுவே
ஓலமெ னப்பணி வாரைய ளிக்கு(ம்)ம
யூரகி ரிக்குகன் - வேலாயுதமே. 4

## 5. பாதாரவிந்த வகுப்பு

*தானான தந்ததன - தானான தந்தனா*

ஆனாத விஞ்சைதிகழ் வேதாக மங்கள்மிசை
ஆறாறும் இன்றியது - தானாகி நின்றதே
ஆனேறி அம்பிகைமி னோடேவ ரும்பரமன்
ஆறேறு செஞ்சடில - மீதேக மழ்ந்ததே
ஆகாயம் ஒன்றும்இம வானால்வ ளர்ந்தமகள்
ஆர்தானை அம்பொன்மடி - மீதேயி ருந்ததே
ஆழாழி யின்றலையில் வாழ்மாசு ணன்றன்மிசை
ஆவான்வி ரிஞ்சன்முத - லோர்பேணு கின்றதே
ஆராயும் அங்கியித னூடேஎ ழுந்துருமும்
ஆடேறி அந்தண்உல-கீரேழும் வந்ததே
ஆயாச மின்றிமகிழ் மேலோர்ம னம்புரைவ
தாம்வாவி ஒன்றில்நடு - மேனாள்ம லர்ந்ததே
ஆலால வெம்பணிகள் வாழ்பாத லங்குலைய
ஆடோர்சி கண்டிமுது - கூடேப திந்ததே
ஆவேசம் ஒன்றிமத நீரால்ந னைந்துலவும்
ஆண்வேழம் ஒன்றின்அகல் - காதூடு(உ) தைந்ததே

கானாறு டன்குலவு சீர்சால்கு றிஞ்சியிடை
கார்வேட ரும்பணிய - மாறாதி லங்குமே
காமாயு தம்பொருத தோளால்வி ளைந்ததினை
காவாஇ ருந்தசிறி - யாள்பால் நடந்ததே
காவாளி தந்தமக ளாம்ஆனை மங்கைகுறை
காணாது செங்கைமல - ராலேபி சைந்ததே
கால்வேலை யுண்டமுனி யேபோலும் அன்பர்பலர்
காகாள னுஞ்சொலுட - னேநாடு பண்பதே
காகூள னுஞ்சமய நூலால்ம யங்கிஉயிர்
காதாந லந்தருத - யாவால்உ யர்ந்ததே
காயாம ரம்பொருவும் மாலோப வஞ்சரெதிர்
காய்வார் வனைந்தபல - பாமாலை கொண்டதே



காயாச முந்தவள நீறாதி யுங்கொளும
காமோன தந்திரருள் - ஓவாத மைந்ததே
காளாமு கன்பொருவில் வீராக மன்கொடிய
காபாலி யென்பவரும் - ஏசாத பண்டமே

ஊனார்உ டம்(பு)உயிரில் வேறாம்எ னுஞ்சரதம்
ஓராத அன்றுமுத - லாநான்வி ழைந்ததே
ஊழாம்அ யன்கைவிதி பாழாம்வி தஞ்செய்திறல்
ஓவாத தென்றருணை - வாழ்சாரு விண்டதே
ஓகார மென்றதுட னேகூடும் விந்துநடு
ஊடாடி டும்பொருள - தாநூல்ப யின்றதே
ஊறேதும் இன்றியகு ணாதீத முங்குணமும்
ஓயாதெ ழுந்துபிற - ழாதேபி றழ்ந்ததே
ஊர்தோறி ரந்தலைகு வேன்ஈன நெஞ்சினிலும்
ஓர்வேளை வந்துவிளை - யாடாம றைந்ததே
ஊனாவ தன்றழையி னாலேவ ணங்கும்எளி
யோர்தாமும் இந்திரனில் - வாழ்வான்மு யன்றதே
ஓடாது வண்டுபயில் கூதாள முங்குரவ
மோடார மும்புனலி - நேர்பூவும் ஒன்றுமே
ஓதாது ணர்ந்தபெரி யோர்காமு றுங்கழல்கொ(டு)
ஊணாகு மென்றவரை - நாடோறும் உண்பதே

மானாமெ னுங்கண்மட மாதேசல் கண்டுருவம்
மாறாடி யுங்கயல்கொ(டு) - ஓர்நாள்வி ரைந்ததே
வாயால்மொ ழிந்தவிதம் நாடாத தொண்டன்மனை
மாவூண்வி ழைந்துமுதி - யோனாநு ழைந்ததே
வாளார்க ருங்கண்உமை பாலாள னுஞ்சொல்பகர்
வார்போய்வ ரும்பல்வழி - தோறேகு கின்றதே
மாடாடு கொன்றுநுகர் வார்தீம கங்கள்அறு
மாறேமு யன்றுருகு - வார்தேறு பண்பதே
வானாதி ஐந்துவித பூதாக ரங்கள்மகம்
மாயாம லங்களெனும் - வீண்வாதொ ழிந்ததே
மாணார்த டம்பொழில்கொள் சீகாழி யின்கண்ஒரு
மாவேதி யன்றன்மனை - யாள்தோள்அ ணிந்ததே
வாசாக யிங்கரிய மாயேமு யன்றிடினும்
மாதாவில் வந்துசின - வாதாளும் நன்றதே
வாடாத வென்றிமலி சீர்மேவு குன்றைநகர்
வாழ்வான கந்தனிரு - பாதார விந்தமே. 5

## 6. சருவசாதனக்காரன் வகுப்பு

***தந்தனா தனனதன - தந்தனத் தானன***

அன்பரா மவர்கருது கின்றசீ ருருவமுடன்
அங்குபோய் வருசகுண - பாவனைக் காரனும்
அந்தமா தியும்நடுவும் இன்றிநா டரியபல
அண்டகோ ளிகளின்நிறை - ஆகரக் காரனும்
அஞ்சம்ஏ றியபிரமன் விண்டநான் மறைமுடிகள்
அண்டொணா நிலையுதவு - தாரகக் காரனும்
அம்புயா தனைகணவன் உம்பரா தியர்களுடன்
அன்றுகூ றியபெருமை - வாசகக் காரனும்
அந்திவான் மதிநிலவு செஞ்சடா டவிஅமலன்
அங்கணால் உதவும்அதி - மான்மியக் காரனும்
ஐந்துபூ மருவுகழை கொண்டநா ரணியின்முதல்
அங்கமா மெனஒளிரும் - வேல்வலிக் காரனும்
அம்பரா திபன்மகளும் வென்றிவே டுவர்குயிலும்
அன்றில்சேர் பெடையைநிக - ராகுமெய்க் காரனும்
அந்துலா வியசிறுநெல் என்றுவா டியஅமரர்
அஞ்சிடா தமர்பொருத - சேவகக் காரனும்

வன்பராம் அவுணர்குல பங்கம்நா டியதவள
மந்தரா சலமனைய - வாரணக் காரனும்
மங்குல்போல் உருமிஅழல் கொண்டநா ரதன்வெருள
வந்தஆ டதன்முதுகில் - ஏறுமற் காரனும்
வஞ்சமீ றியசமண ருந்த(ள்)ளா தணிகலப
வண்குலா வுறும்நெடிய - கேகயக் காரனும்
வண்டறா இதழிபுனை சிம்புளே அனையதிறல்
மண்டுசே வலையெழுது - கேதனக் காரனும்
மந்தமா ருதம்உலவு குன்றின்மா முனியனைய
மங்களா கரர்உணரும் - ஓர்பொருட் காரனும்
வம்பனால் ஒருகரம்இ ழந்தபோ தினும்நினையும்
மங்கைபால் விரைவில்வரும் - ஆதரக் காரனும்
மண்டலீ கருமிகவ ணங்குகீ ரனைஅளவில்
மைந்தரோ டருளும்நலம் - ஆர்புகழ்க் காரனும்
வந்தியேன் எனும்ஒருவன் முன்புபா லையில்எயின
வண்டனா வருகபட - நாடகக் காரனும்



மின்படாம் அணியுமத தந்திஊர் பவன்உறையும்
விண்புகா மலரினொடு - மீள்கிளிக் காரனும்
வென்றிவேல் வழுதியென வந்தநா ளினும்நினையும்
விந்தையா வையும்நடவு - தோள்நிரைக் காரனும்
வெங்கண்வாள் அரவெனஎ திர்ந்தசா ரணமுனிவர்
விண்டவா தறவெகுளும் - வீரியக் காரனும்
விண்டுவோ டவன்உதவும் மைந்தனா கியமதனும்
வெம்பிநா ணுறஇலகு - கோமளக் காரனும்
மிஞ்சுதீ யனையசினம் ஒன்றுசூர் முதல்நுவலும்
மிண்டர்மாய் வுறநொடியில் - மோதுகைக் காரனும்
விம்பம்நே ரிருமகளிர் பங்கில்மே வலின்அவர்தம்
வெண்பல்வாள் நகைவிழையும் - வேதனைக்
காரனும்
விஞ்சையோ கியரு(ம்)மட மங்கைமார்
களும்நனிவி
ரும்புசீர் திகழ்வசிய - மோகனக் காரனும்
விந்துநா தமும்விரவு தண்டையார் கழலிடைவி
ளைந்தசீர் மலையில்விடு - கேவலக் காரனும்

இன்பசா கரநடுஎ ழுந்தபே ரமுதமென
எந்தலோ கரும்அறிய - நீடிசைக் காரனும்
எண்கைவே தியன்விதி,என் அன்பர்பால்
வருவதிலை
என்றுமார் தொடும்இணையில் - ஆணவக்
காரனும்
இண்டைசூ டியைஅனைய நந்திநா யகன்வெருள
என்சொனாய் எனமுனிவு - கூர்அடக் காரனும்
எந்தைநீ யலதுதுணை ஒன்றிலேம் எனமறுகும்
எங்கள்கா ரிய(ம்)முழுவி - சாரணைக் காரனும்
இம்பரார் உயிரிலுயர் செம்பொன்மால்
பெருகுதலின்
இந்தவா றுழலவிடு - சோதனைக் காரனும்
எஞ்சுறா விழைவினொடு வந்துபா டுதியெனஇ
யம்பநா ணறுபழைய - வாசனைக் காரனும்
என்று(ம்)மா மதியும்நுழை யுந்தண்வேய் வனநகரி
டங்கொள்வான் எழுதுகவி - மாலிகைக் காரனும்

இந்திரா தியர்பரவு குன்றைமா நகரினிடை
என்று(ம்)மே வியசருவ - சாதனக் காரனே. 6

வெண்பா

குன்றுளுயர் குன்றக் குடிக்குமரன் கூறென்றான்
இன்றுவகுப் பாறும் இயம்பினேன் - பொன்றுயரம்
தீர்ப்பானோ இன்னம் திகைத்துழலச் செய்வானோ
பார்ப்பார் உலகிற் பலர்.

குன்றக்குடி சண்முகநாதப்பெருமான் வகுப்பு முற்றிற்று



உ

# கலவிமகிழ்தல் (இன்பத்துறை) வண்ணம்

## தண்டபாணி சுவாமிகள்

ஆண்டானுக்கும் அடிமைக்குமுள்ள ஒருமைப்பாட்டின்
பேரின்பாநுபவத்தை உள்ளுறையாகக் கொண்டது

### குழிப்பு

*தானதனத்தந் தனந்தானன தானதனத்தந் தனந்தானன*
*தானதனத்தந் தனந்தானன தானதனத்தந் தனந்தானன*
*தனதன தானதத்த தனதன தானதத்த*
*தனதன தானதத்த தனதன தானதத்த*
*தானதந்தத் தனத்தானன தானதந்தத் தனத்தானன*
*(தொங்கல்) தனனதன தனதான தந்தனா*

### ஆண்கலை-முற்பகுதி

தலைவன் புகழ் மூன்று கலைகளில்

ஆரணமெச்சும் பரன்; கோதறும் ஆகமமுற்றும் பகர்ந்தோன்,
அலர்
பூவிலிருக்கின் றவன்கோஎன ஓர்தலையைக்கொண்டிரந்தோன்,
அலை
கடல்நடு வேவிரித்த பணியணை மீதுறக்கம்
உறும்நெடு மால்வழுத்தும் இருகழ லாளன் நித்தன்
ஆதியந்தத் தடக்கமிலாதவன்
மானணிந்திட் டகைக்கருணாகரன்

ஈடில்எழுத்தைந் தையுங்கூறிடும் நேயர்களுக்கன்
பன்எண்டோளியொடு
ஈமமதிற்சென் றுநின்றாடிய பூரணன் இக்கொன் றுடன்
போர்பொர
மருமதன் ஆகமுற்றும் நொடியினில் நீறுபட்டு
விழவிழி யாலெரித்து மகிழ்சிவ யோகிஅத்தன்

ஆனைஒன்றைச் செகுத்ததுளாகிய
போர்வைகொண்டுட் களித்தமனோகரன்

ஆலநிழற்கண் புகுந்தேஒரு நால்வர்களுக்குஞ் சுகஞ்சேர்அநு
பூதியளிக்கும் பெருந்தேசிகன் ஆலமிடற்றந் தணன்கூர்விழி
உமைமண வாளன்எட்டு வகையுரு வாகிநிற்கும்
ஒருபொரு ளானகத்தன் மதியணி கோடிரத்தன்
நீடுகொன்றைத் தொடைத்திருமார்பினன்
வீறுசங்கக் குழைச்செவிவானவன்
அமலனது தவமீற வந்தசேய். ⅛

ஆறுமுகப்புங் கவன்தோகையில் ஏறிநடத்துங் குகன்காசறும்
நாரதனச்சங் கொளுஞ்சீரொடு தீயிலுதித்தண் டரங்கோலிட
வருதகர் வாகனத்து முருகன்வி ணோர்துதிக்கும்
அரசிவர் ஆனையிற்செய் பவனிவி னோதன்வெற்றி
வேலுறுங்கைச் சமர்த்தன்மகாரதன்
வீரர்கெஞ்சித் தொழத்தகும்நாயகன்

மாயையினைக்கண் டுமுன்காசிப மாமுனிசித்தந் தளர்ந்தேபதி
னாயிரலட்சந் தரந்தாள்தொழும் மோகமிகுத்தன் புடன்சேரலின்
விதிவலி யோடுதித்த அவுணர்கள் மூவருக்கும்
ஒருநம னாமெனச்சொல் பெருமைகு லாவுசித்தன்
வானமங்கைக் குரித்தறுகாவலன்
ஏனலின்கட் குறக்கொடிமோகனன்

ஆகுலமுற்றுந் தவிர்ந்தேபர ஞானவிருப்பங் கொளுஞ்சீரியர்
யாவர்களுக்குந் துணிந்தேஉயர் தாரகநுட்பம் பகர்ந்தாள்பவன்
அதிகவி லாசமுற்ற கடல்களை யேநிகர்த்த
தமிழைமு னாள்அளித்த குறுமுனி நாதன்மெச்சு
சீல விந்தைக் குணத்துவிசாகன்அ
கோரவிஞ்சைச் செபத்தர்முனேர்பவன்
அறிவரிய விளையாடல் கொண்டவேள். ¼

வாரணமுற்றிந் திரன்சேனையுள் ஆர்வமிகத்திண்
பெறுந்தானவர்
தானைநடுக்கஞ் சுமந்தோடிட ஓரிருபக்கங் களின்பேரொலி



யொடுகுகு கூவெனச்செய் தொனிமலி கேதனத்தன்
அருணையி னூடுதித்த துணையுட லான்ஒருத்தன்
ஓதுசந்தத் திருப்புகழானம
தாணிதுன்றிச் சிறப்புறுமார்பினன்

வீரமிகுக்குங் கொடும்பேய்மக ளால்மிகும்அச்சங்
கொளும்பாவலன்

ஆண்மையொழித்தங் கவன்பாடிய பாடலினைப்பைங்
கடம்போடணி
தருகும ரேசன்,இச்சை வழிதிகழ் ஆடலிட்டு
மலைதொறும் வாழுமுத்தன் ஒருபதி னாறுருக்கொள்
ஏகன்,இன்சொற் றமிழ்க்கிழிவோதிடும்
மூடநெஞ்சத் தரைக்கடிவார்துணை
மாழைவரைக்கன் றகம்போய்அடி தாழஅடிக்கின்
றசெண்டாயுதன்
ஏழுபொருப்பும் பிளந்தேஒரு மாநதியைத்தந் திடுஞ்சேவகன்
எனதுக னாவிடத்தில் ஒருமொழி யானதைப்பல்
வதளிவி டாதுசெப்பி யருளிய தேவன்,அக்கும்
நீறுமிஞ்சத் தொடுத்தணிவார்எம
வாதையின்றிப் பெறக்கதியீவன்
விமலமன தினர்தேட நின்றகோ. ⅜

**சோலை, கோவில், மலை இவற்றின் சிறப்பு**

வானைஅளக்கும் பசுஞ்சோலையி னூடுகுதிக்குங் குரங்காயிரம்
மாரன்மிகச்சிந் திடுந்தேமலர் வாளியினிற்சிந் தைநொந்தேவரும்
மயல்வெறி யாடல்முற்றி உவகையொ(டு) ஊடலிட்டு
மதுநிறை வானபுட்ப வகைமுத லானவற்றை
வீசிஅம்பொற் பதித்தருமீதினும்
ஏறிஉம்பர்க்(கு) உவப்புறஆடிடும்

ஆணவமுற்றுந் தவிர்ந்தேடண்ணை மூவகையிற்றொந்
தமும்போய்அபி
மானமுதற்சங் கடங்கோடியும் நீறுபடக்கண்
டு,பொன்போல்மனம்
ஒளிர்பெரு வாழ்வுபெற்ற முனிவரும் ஓகைமிக்க
கவிபகர் சீர்படைத்த புலவரும் மாநிலத்தை

ஆளும்வென்றித் தனிக்குடைவீரரும்
நாளும்வந்துட் களிப்புறநீடும்

மாசறுபொற்குன் றமுன்பாம்மலை யாவினுமிச்சம்
படுஞ்சீர்கொளும்
யாவர்விருப்பம் பெறும்போகமும் ஈயும்வனப்பொன்
றிடுந்தேவையில்
வணிகர்மு னாவுரைக்கும் அளவறு கோடிபத்தர்
வழிபட லால்வளப்ப மிகுமொரு கோயிலுற்ற(து)
ஆகும்என்சொற் கவித்தொடையாதிய
சூடுகுன்றக் குடிக்கிரிமேல்வளர்
விடலைதிரு வருள்போலும் மங்கையாள். ½

## பெண்கலை-பிற்பகுதி

### முருகனையே தலைவியாக்கொண்ட அடிமை, இங்குத் தலைவனாம்

நாரணனுக்கின் பமுந்தோள்வலி ஆதியபெட்புந் தருஞ்சீரொடு
மார்பிலிருக்கின் றபெண்பாவையும் நாவினிடத்(து)அம்
புயன்தோய்தரும்
வனிதையும் வானகத்து மகபதி நேயமிக்க
சசிமுத லாயுரைக்கும் விழியிமை யாதுபற்பல்
கோடியின்பப் பெறுக்குறுமாதரும்
நாணுறும்பொற் புடைக்கிளி போல்பவள்
கார்முகில்வெட்குங் கவின்றோய்குழல், மாமலரொக்கும்
பொலன்கூர்முகம்
வாளெனவெட்டுந் திறஞ்சேர்விழி, வீழியுகுக்கும்
பழம்போலிதழ்
கமுகது போலவிர்ச்சி தருகளம், மாரனுக்கும்
அவள்மனை யாளினுக்கும் அணிமுடி நேர்வனப்பு
மீறுகொங்கைத் துணைப்பொலிவாதிய
கோலமிஞ்சப் பொறுத்துளகோமளம்

நாகரிகத்தந் திரந்தேர்பவள் பாலொடுகற்கண் டினுஞ்சீரிய
தாமொழிசற்றன் பொடும்பேசியும் மோகம்விளைத்தங்
கசன்சேனையுள்
அதிபதி யாமெனச்சொல் பெருமைகொள் வாள்,அளப்பில்
மதகலை யாவினுக்கும் உரைதெரி வாள்,மிகுத்த



தோதகங்கற் றிருப்பவள்மாதவர்
தாழும்வந்தித் திடத்தகுமோகினி
குமரியர்கள் அரசான பண்பினாள். 5/8

நானவளைக்கண் டுடன்போய்இரு தாளும்நிலத்தென்
றிடுஞ்சீர்முத
லாவனவற்றின் திறங்காணுத லான்மனிதப்பெண் களின்சேகரம்
எனமிகும் ஆவலுற்று மயல்வெறி யேறிடப்பல்
உதடுட னேபிடிக்க உடலமெ லாம்நடுக்கம்
ஆகிநெஞ்சத் திடுக்கமதோடிரு
வாறுமின்றித் தவித்திடும்வேளையில்

மாதுரியத்திங் கிதம்பேசிய தோழியர்முற்றும் பிரிந்தேதனி
யானதனைக்கண் டுள்அஞ்சாதெனை நாடியும்வெட்குங்
குணம்போல்ஒரு
விதநகை யோடுநிற்கும் நிலையையும் வேர்வைகொட்டும்
நுதலையும் நாடிஇச்சை வழிமுடி வாமெனக்கொ(டு)
ஆர்வமிஞ்சித் திருக்கணிவாய்மொழி
கூறவுஞ்சற் றிரக்கம்இலாததென்?

நாணமிகுக்கின் றதென்றால்என(து) ஆருயிர்நிற்கின்
றதன்றாகும்மெய்
காமரசத்தின் சுகந்தான்அறி யாயிதுகைப்பன்
றுபின்தோணிடும்
எனதுக ணே!பழிப்பில் மதனகு டாரிஒத்த
மதுமினி யே!பழுத்து வரும்அமு தே!உனக்கொர்
ஆளெனும்சொற் பொறுத்தலைவேன்என(து)
ஆவிஉன்றற் கடைக்கலமாம்அடி
கொடுமைதவிர் எனநான்நெ ருங்கலால் ¾

நீரணிபொற்பொன் றிடுந்தாழ்சடை நாதனடுக்கின்
றஅன்றோடிய
பாவையெனக்கொஞ் சமுந்தோணலு றாததிருட்டன்
புடன்போயினள்
இதுசரி யோஉனக்கென் மனதைவி டாதுகைக்கொ(டு)
உரிமையி லார்கள்ஒத்து விலகுவ தேது?சற்று
வாடி!அஞ்சப் பெடைக்கிணையாம்நடை
போதும்என்சொற்(கு) உருக்கம்உறாததுஎன்?

மோகமிகுக்கின் றதந்தோ! பழி சாருமெனக்கண்
டுநின்(று)ஓர்தரம்
நானுனைமுத்தங் கொடுன்தோள்அணை வாகிடுமட்டின்
றிசைந்தால்என
குறைபடு மோ? உனக்கும் அதுசுக மேஎனச்சொல்
வதுபிழை யே? சுகித்த பிறகறி வாய்தனித்த
வேளைஇந்தப் படிக்கெனைநீவிடல்
நீதம்அன்றொப் பெனச்சொலிவாடலும்

நீலியும்வெட்குந் தரஞ்சேர்பவள் கோபமிகுக்குங்
குணம்போல்ஒரு
காலுமுனைக்கண் டதுண்டோஎன ஏசினள்அச்சந்
தவிர்ந்தாளெனும்
நிலைமையி னோடுகிட்டி அளவறும் ஆணையிட்டுன்
அடிமையெ னாஉரைத்து விழ,உட னேமகிழ்ச்சி
மீறிஅங்கைத் தொடிக்குலம்ஒலிட
ஓடிவந்துற் றெடுத்துறவாகினள்
இமயநிகர் முலைமார் பழுந்தவே ⅞

நேயம்வளர்த்தங் கசன்றான் அட! நீஎனமெச்சும் பதம்பாடினள்
சோகமொழிக்குங் குகன்சீர்மிக வாழிஎனக்கும்
பிடும்போதமொ(டு)
இதழ், கவுள், மார்பு, நெற்றி, முலைமுத லாயவற்றின்
உறுசுவை தேறிமுத்தர் பகர்தரும் நூலுரைத்த
வாறழுந்த கடித்ததனோடுகிர்
யாவையும்பொற் புறப்பதிவாதல்செய்(து)

ஏகமயத்தொன் றிடும்பேரறி வாளரெனச்சிந்
தையொன்றாய்மிகு
தாடனமிட்டம் புயந்தேர்பணி தேனுறுதட்டென்
றிடுஞ்சீர்திகழ்
கடிதட மாமுறுப்பு முதலிய தேறிஇச்சை
மணியதன் மீதிருக்கும் மதனனும் நாணிஅச்ச
மோடுகெஞ்சித் தொழப்பலவாகிய
லீலையுஞ்சித் திரப்படியேசெயும்

நேரமதிற்கண் சிவந்தோர்மயல் போலெதிரிட்டங்
கசைந்தாடிய



பேதைகழுத்தெண் புளின்சீரொலி யோடுகுகுக்குங்
குகுங்கூவென
எழுதலின் ஆகமுற்றும் வெயர்வைகு லாவமிக்கு
மதனக லாஉணர்ச்சி ஒருசம மாகஇச்சை
நோயுமங்கிச் செலத்தருமாமலர்
தூவிஉம்பர்த் தலத்தினர்பேசிட
இனிதுபெறும் அநுபோகம் இன்பமே. 1

**கலவி மகிழ்தல் (இன்பத்துறை) வண்ணம் முற்றிற்று**

உ

# ஆறுமுக சுவாமிபேரில் அலங்கார விருத்தம்

பன்னிரு சீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்

சந்திரமுருகா நல்ல தந்திரமுருகா ஞான
சற்குரு நாதமுருகா
சாரிமுருகா வறுமை தீருமுருகா சுவாமி
சச்சிதா னந்தமுருகா
சுந்தரமுருகா மயில்உ கந்தமுருகா எங்கள்
சூரசங் காரமுருகா
சோதிமுருகா ரத்ன வேதிமுரு காநிதம்
தேவர்கள் துதிக்குமுருகா
மந்திரமுருகா என்முன் வந்து முருகா வரந்
தந்துகாத் தருளுமுருகா
வாருமுருகா கிருபை பாருமுருகா உன்றன்
மைந்தனைக் காருமுருகா
அந்தமுருகா சத்தி மைந்தமுருகா எங்கும்
அழகான நீதிமுருகா
ஆறுமுரு காகுறை தீருமுருகா பழனி
ஆனந்த மானமுருகா. 1

செய்யமுருகா ஈராறு கையமுருகா தேவர்
செல்வனாய் வந்தமுருகா
செட்டிமுருகா தங்கக் கட்டிமுரு காகுல
தேவாதி தேவர்முருகா
மெய்மைமுரு காமயில் ஏறுமுருகா செய்த
தீவினை தீர்க்குமுருகா
வேலுமுருகா என்னை ஆளுமுருகா சீடர்
வேண்டுவரம் ஈயுமுருகா



தையல்முருகா அம்பு எய்யுமுருகா கல்வி
சகலகலை யோதுமுருகா
ஐயமுருகா சோதி வையமுருகா வீர
அசுரரை வென்றமுருகா
துய்யமுரு காசுயஞ் சோதிமுரு காதவத்
தோர்தொழும் ஆதிமுருகா
ஆறுமுரு காகுறை தீருமுருகா பழனி
ஆனந்த மானமுருகா. 2

பொன்னுமுருகா பாது காக்குமுரு காதிருப்
புகழோதி உன்னைமுருகா
போற்றுமுரு காவனங் காத்தமுருகா வள்ளி
பொற்புயம் அணைந்தமுருகா
கன்னிமுரு காமெய் சொன்னமுரு காஎன்
கலியெலாந் தீர்த்தமுருகா
காந்திமுருகா தணிகை வாழ்ந்தமுரு காசிவ
கைலாச நின்றமுருகா
மன்னர்முரு காபணி மின்னமுருகா வேங்கை
மரமாக நின்றமுருகா
மயிலுமுரு காமொழி குயிலுமுருகா தேவர்
மகிழுஞ்சங் கீதமுருகா
அன்னமுருகா பஞ்ச வர்ணமுருகா உந்தன்
அடியவர்க் குதவுமுருகா
ஆறுமுரு காகுறை தீருமுருகா பழனி
ஆனந்த மானமுருகா. 3

செம்மைமுருகா நம்மைக் காக்கும்முருகா விருது
சேவலங் கொடியமுருகா
செல்வமுருகா இனிய நல்லமுருகா எங்கும்
சோதியாய் நின்றமுருகா
நன்மைமுருகா லோக மேன்மைமுரு காதிரு
நாரணன் மருகமுருகா
ஞானமுருகா அரி தானமுருகா திவ்ய
நாகமணி யானமுருகா

வண்மைமுருகா எனக்கு உண்மைமுரு காவரம்
மகிழ்ந்தருள் தாருமுருகா
வாலமுருகா நீறு பாலமுருகா யானை
முகனுக்கு இளையமுருகா
அம்மைமுருகா வள்ளி யம்மைமுருகா வினை
அடிகரு வறுக்குமுருகா
ஆறுமுரு காகுறை தீருமுருகா பழனி
ஆனந்த மானமுருகா. 4

சாரிமுருகா வித்தை யுரைசெய்முரு காஇது
சமயம்வர மருளுமுருகா
சத்திமுருகா உமையாள் பெற்றமுருகா இந்த
தரணிபுக ழோதுமுருகா
கௌரிமுருகா நல்ல சரவண்முருகா எந்தன்
கிலேசமும் தீருமுருகா
கீர்த்திமுரு காசிறை மாற்றுமுருகா மனத்துக்கு
ஏற்றவரம் ஈயுமுருகா
கவனமுருகா உந்தன் தயவுமுருகா என்னைக்
கடைத்தேறப் பாருமுருகா
காசிமுருகா முன்னில் பேசுமுருகா வீர
காபாலி சூலமுருகா
அவனிமுருகா லோகப் பழனிமுருகா தேவர்க்கு
அருள்மய மானமுருகா
ஆறுமுரு காகுறை தீருமுருகா பழனி
ஆனந்த மானமுருகா. 5

தெள்ளுமுரு காகுறை சொல்லுமுருகா செவியில்
கேட்கவே இலையோமுருகா
தேனுமுரு காவரம் வேணுமுரு காமயில்
தெரிசனம் தாருமுருகா
வள்ளல்முருகா பொன்னு வள்ளிமுருகா சரணம்
வந்துகாத் தருளுமுருகா
வாய்த்தமுரு காநிதம் போற்றமுரு காஒரு
மரமாயிராத முருகா



சொல்லுமுருகா சுற்றி நில்லுமுரு காவொளி
தங்கநவ ரத்னமுருகா
சோலைமுரு காவடி வேலுமுருகா வேண்டித்
தொழுதவர்க் கருளுமுருகா
அல்லுமுரு காபகல் நல்லமுருகா சாமி
ஆம்கவிக் குதவுமுருகா
ஆறுமுரு காகுறை தீருமுருகா பழனி
ஆனந்த மானமுருகா. 6

**ஆறுமுக சுவாமி பேரில் அலங்கார விருத்தம் முற்றிற்று**

உ

# ஆறுமுக சுவாமிபேரில் ஆசிரிய விருத்தம்

**எண் சீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்**

ஆறுமுகம் பன்னிரண்டு கையும் வேலும்
அலங்கார ஆபரணம் அணிந்த மார்பும்
திருமுகமும் வெண்ணீறு புனைந்த மெய்யும்
செகமெலாம் புகழ்படைத்த சுப்ர மண்யா
முருகாசர வணபவனே கார்த்தி கேயா
முக்கணனார் புத்திரனே உக்ர வேலா
இருவருமே உனைப்பணிந்தோம் பழனி வேலா
இதுசமயம் அடியாரை ரட்சிப் பாயே. 1

மயிலேறி விளையாடும் சுப்ர மண்யா
வடிவேலா உன்பாதம் நம்பி னேனே
உயிரிழந்து அபகீர்த்தி யாகும் வேளை
உன்செயலால் இதுசமயம் உயிரைக் காத்தாய்
தயவாக இனிமேலும் உயிரைக் காத்துச்
சண்முகமே அடியார்தம் துயரம் தீர்ப்பாய்
வைபோக மானமலை பழனி வேலா
வரமளித்து உயிர்காத்து ரட்சிப் பாயே. 2

வருந்துமடி யாருயிரைக் காக்குந் தெய்வம்
வையகத்தில் வேறொருவ ரில்லை என்று
அறிந்துநான் உனைப்பணிந்தேன் சுப்ர மண்யா
ஆதரித்துப் பிராணபயந் தீரு மையா
திரிந்தலைந்து அறுமூன்று திங்க ளாகச்
சிறையிருந்து மனைபூண்டு சின்ன மானேன்
பறந்துவரும் மயிலேறும் பழனி வேலா
பரயுகமே உயிர்காத்து ரட்சிப் பாயே. 3



பெருவேங்கைப் புலிபிடித்த பசுவைப் போலப்
பிதுர்கலங்கி மனந்தளர்ந்து புலம்பி னோமே
இருவருமே உனைக்கூவச் செவிகே ளாதோ
இதுசமயம் தாமசமா யிருக்க லாமோ
குருவாகித் தந்தைதாய் நீயே யாகில்
குமரேசா பிராணபயந் தீரு மையா
முருகேசா இதுசமயம் பழனி வேலா
முன்வந்து உயிர்காத்து ரட்சிப் பாயே. 4

பாம்பின்வாய்ச் சிக்கியதோர் தேரை போலப்
பதைபதைத்து வாடுகிறோம் பாலர் நாங்கள்
தேம்பியே புலம்புகிறோம் துயர தாகித்
தென்னவனே உன்செவிக்குக் கேளா தோதான்
நான்புவியில் உன்னைநம்பி மகிழ்ந்தி ருந்தேன்
நாயேனுக்கு அவதிவர நியாய மோதான்
சாம்பசிவன் புத்திரனே பழனி வேலா
சமயமிது உயிர்காத்து ரட்சிப் பாயே. 5

வலைபட்ட உயிரதுபோல் மயங்கு கின்றோம்
வடிவேலா இதுசமயம் துயரந் தீர்ப்பாய்
கொலைகளவு பாதகங்கள் பொய்க ளெல்லாம்
கொடும்பழிவஞ் சனைபில்லி சூன்ய மெல்லாம்
தொலையாத சிறுபிணிநோய் வினைக ளெல்லாம்
துரத்துமையா மயிலேறும் சுப்ர மண்யா
மலையிலுறை வாசனே பழனி வேலா
வரமளித்து உயிர்காத்து ரட்சிப் பாயே. 6

நாகமது கெருடனைக்கண் டலைந்தாற் போல
நான்பயந்து அலைதுரும்பாய் அலையு றேனே
தாகமது தீருமையா தவிக்கும் வேளை
சண்முகமே இதுசமயம் அடியே னுக்கு
மேகமது பயிர்க்குதவி செய்தாற் போலே
வேலவனே பிராணபயந் தீரு மையா
வேகமுடன் வரவேணும் பழனி வேலா
வினைதீர்த்து உயிர்காத்து ரட்சிப் பாயே. 7

பூனைகையில் சிக்கியதோர் கிளியைப் போலப்
புலம்புகிறோம் பிராணபயம் மிகவு மாகி
நானடிமை உம்மைநம்பி இருக்கும் வேளை
நாயகனே பராமுகமாய்ப் பார்க்க லாமோ
மானீன்ற வள்ளியம்மை தெய்வ யானை
மணவாளா சரவணனே கருணை செய்வாய்
கானமயில் வாகனனே பழனி வேலா
கடவுளே உயிர்காத்து ரட்சிப் பாயே. 8

தூண்டில்பட்ட உயிரதுபோல் துடிக்கி றேனே
சுப்ரமண்யா இதுசமயம் அடியே னுக்கு
வேண்டுவரங் கொடுப்பதற்குப் பார்த்து நீயே
வேறொருவ ரில்லையென்று நம்பி னேனே
மீண்டுவரும் வினைதீர்த்துத் துயரம் தீர்ப்பாய்
வேலவனே சூரசம்மா ராசங் கார
ஆண்டவனே உனைப்பணிந்தேன் பழனி வேலா
அடியார்கள் உயிர்காத்து ரட்சிப் பாயே. 9

நஞ்சுபட்டு விடமேறி ம்யங்கு மாபோல்
நடுநடுங்கிக் கிடுகிடென்று பயந்து நாங்கள்
தஞ்சமென்றே உனைப்பணிந்தோம் தணிகை வாசா
சற்குருவே பிராணபயந் தீரு மையா
பஞ்சைதனைச் சிறைவிடுத்து அலையை வாங்கிப்
பாதகத்தைப் பரிகரித்துப் பதமே தந்து
வஞ்சனைகள் செய்யாமல் பழனி வேலா
வரமளித்து உயிர்காத்து ரட்சிப் பாயே. 10

அத்திமுகனே முக்கணனுக்கு இளைய வேலா
அறுமுகனே தணிகையிலே அமர்ந்த வாசா
வித்திறத்திற் பேசாத மூடன் நானும்
வேலவனே நின்னருளால் கவியைப் போலே
பத்துமே பதிகமாய்ப் பாடிச் சொன்னேன்
என்மீதிற் பிழைகள்மனம் பொறுத்தே ஆள்வாய்
சத்தியமாய் உனைப்பணிந்தோம் எங்கள் ஐயா
சண்முகனே அடியாரை ரட்சிப் பாயே. 11

**ஆறுமுக சுவாமிபேரில் ஆசிரிய விருத்தம் முற்றிற்று**



# சுப்பிரமணியர் விருத்தம்

**பதினான்குசீர்க்கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்**

மாமேவு நவரத்ன கேயூர மணிமகுடம்
மன்னிப் பொலிந்த முடியும்
வச்சிர நுதல்திலக வெண்ணீறும் ஓராறு
வதனவிம் பத்தின் அழகும்
பாமேவு பத்தர்க்கு மடைதிறந் தன்பொழுகு
பன்னிரு விழிக் கருணையும்
பகரரிய பழமறை பழுத்தொழுகு சிறுநகைப்
பவளம் சிறந்த வாயும்
காமேவு கரகமல பந்தியும் சேவலும்
கனகமயி லுங்கிண் கிணிக்
காலுமுந் நூலும்வடி வேலுமென் மேலுமெக்
காலுந் துலங்க வருவாய்
தாமோத ரானந்த கோவிந்த வைகுந்த
சரசகோ பாலன் மருகா
சதுர்மறைக ளேதந்த பரமகுருவாய் வந்த
சரவணப வானந்தனே. 1

கண்கொண்ட பூச்சக்ர வாளகோ ளத்தையொரு
கதிகொண் டெழுந்து சுற்றிக்
ககனகூ டந்தடவி யுகசண்ட மாருதக்
காலொடு சுழன்று பின்னி
விண்கொண்ட மேகபட லத்தைச் சினந்துதன்
மெய்யன்ப னெனவு கந்து
விடஅரவின் மகுடமுடி சடசடென உதறிநெடு
மேருவொடு பாய்ந்து கொத்தித்

திண்கொண்ட வல்லசுரர் நெஞ்சுபறை கொட்டத்
திடுக்கிட விழித்து மோதித்
திறைகொண் டடித்தமரர் சிறைகொண் டணைத்துலகும்
திறைகொண்ட மயில்வா கனா
தண்கொண்ட நீபமலர் மாலையணி மார்பனே
சரசகோ பாலன் மருகா
சதுர்மறைக ளேதந்த பரமகுரு வாய்வந்த
சரவண பவானந்தனே. 2

துன்னுகயி லாயகிரி மேருகிரி கந்தமலை
தோகைமலை கயிலை மலைவான்
சோலைமலை மேவியவி ராலிமலை மன்னிய
சுவாமிமலை யுஞ்சி றந்த
சென்னிமலை வேளூர் கடம்பமலை மேலவயல்
திருவருணை யின்கோ புரம்
திருவாவி னன்குடி பரங்கிரி திருத்தணிகை
சிவாலயம் திருவே ரகம்
இன்னில மதிக்குந் திருச்செந்தில் முதலான
எண்ணப்ப டாத கோடி
எத்தலமும் நின்கருணை வைத்துவிளை யாடல்விதம்
எத்தனை எனச்சொல் லுவேன்
தன்னைநிக ரொவ்வாத பன்னிருகை வேலனே
சரசகோ பாலன் மருகா
சதுர்மறைக ளேதந்த பரமகுரு வாய்வந்த
சரவணப வானந்தனே. 3

நதியெங்கு மூழ்கித் தலந்தோறும் சுற்றியும்
நல்லநிய மங்கள் செய்தும்
நானென்ற ஆணவந் தள்ளினோ மென்றுசிவ
ஞானங்கள் பலபேசியும்
கதிகொண்ட மவுனியாய் அட்டமா சித்தியொடு
கற்பந் தனைப்பு சித்தும்
கண்ணிறுக மூடிச் சிவானந்த மென்றுசெயல்
கண்டி ருந்தோ மென்னவும்
எதிரொருவ ருக்கொருவர் தர்க்கித்து மற்கட்டி
இப்படி அனந்த கோடி



இதுவல்ல அதுவல்ல என்றுபோ ராடுவது
என்னவகை யோஅறி கிலேன்
சதமென்று உன்னைநான் நம்பினேன் நம்பினேன்
சரசகோ பாலன் மருகா
சதுர்மறைக ளேதந்த பரமகுரு வாய்வந்த
சரவணப வானந்தனே. 4

நாரதப் பிரமாதி அமரர்கின் னரருரகர்
நாரணன் முதற்பண் ணவர்
நடுக்கம் பொருந்திய இடுக்கண் களைந்திட
நடக்கும் குழந்தை வயதில்
சூரபத் மாசுரன் கயமுகன் தாருகன்
துன்முகன் பானு கோபன்
துட்டகிர வுஞ்சக்ர வுஞ்சா சுரன்சிங்கன்
சுற்றிய அரக்க ரையெலாம்
கோரசங் காரண தூளிபட லங்கொண்டு
கூறாடி உனது வெற்றிக்
கொடியேற இந்திரன் முடியேற வானாடு
குடியேற வைத்த துரையே
தாரணியின் மேவுபரி பூரணவுல் லாசனே
சரசகோ பாலன் மருகா
சதுர்மறைக ளேதந்த பரமகுரு வாய்வந்த
சரவணப வானந்தனே. 5

சீலமிக தற்பரனை யுன்னித்த தேகத்
தியானத் தெழுந்து பொங்கிச்
சில்லென்று மெய்மறந் தானந்த மவுனம்
செனிக்கக் குவிந்து கண்ணீர்
ஆவிபொழியக் கருணை யுள்ளங் கனிந்துருக
அன்புருக என்புரு கவே
அங்கங் குழைந்துபுள கிக்கநின் றுருகுவார்
அப்படியும் ஒன்றறிவ னோ
காலங் கழித்துண்டு வீணுக் கலைந்துபல
காலப்ர பஞ்ச மாயக்
கடற்குட் படிந்தே கிடக்கின்ற பாசம்
கடக்கும் படிக்கருளு வாய்

தாலமுது கண்டுநிலை கண்டகோ தண்டமால்
சரசகோ பாலன் மருகா
சதுர்மறைக ளோதந்த பரமகுரு வாய்வந்த
சரவணப வானந்தனே. 6

கல்லா லெறிந்துமுன் எச்சிலைத் தந்துபின்
கண்ணைப் பறித்து வைத்தும்
கருதுவசை சொல்லியும் செய்யசிறு மைந்தனை
கறிசமைத் துண்ண வைத்தும்
வில்லா லடித்துமோர் பாயலில் தன்னுடைய
விரதம் செலுத்து வித்தும்
வேலையில் தூணொடு சுழன்றும் பிரானுக்கு
மெய்யன்பன் எனந டந்தும்
நல்லார் எனப்பேறு பெற்றார்கள் அதுபண்டை
நாள்செய்த பூசை ஈசன்
நன்கிருபை யாமெனக்கு உன்கிருபை யல்லாது
நாடுவது வேறு முளதோ
சல்லாப உல்லாச வில்லேறு வல்லாள
சரசகோ பாலன் மருகா
சதுர்மறைக ளோதந்த பரமகுரு வாய்வந்த
சரவணப வானந்தனே. 7

அற்புத மிகப்புகழ் திருப்புகழ் விருப்பொடுசொல்
அருணகிரி தனையு கந்தாய்
அம்புவியி லின்பமுறு கும்பமுனி முன்பிவர
அன்புருகு பண்பு ரைத்தாய்
உற்பன அரக்கன்நெடு சர்ப்பன மனப்பயம்
உடற்றநக் கீர னொருநாள்
உன்சலுகை தஞ்சமென நெஞ்சுருவ வஞ்சகிர
வுஞ்சநேர் கிரிபி ளந்தாய்
எப்படியு முற்படு வினைப்பய னுலப்புமதை
இப்புவியி லேம றுப்பாய்
ஈதுகலி காலமென்று எண்ணவொண் ணாதுநான்
ஏழையடி யேனர் கையால்
தற்பர தயாபர மனோரத மகிழ்ந்துதவு
சரசகோ பாலன் மருகா
சதுர்மறைக ளோதந்த பரமகுரு வாய்வந்த
சரவணப வானந்தனே. 8



தீராத மாயச் சுகந்தந் தவிக்கநஞ்
செனனம் செழித்த பின்பு
செகதல மயக்கமதி லேயென் குடித்தனம்
தீய மருமோர் வங்கணம்
போராடு சமுசார பாசபந் தம்மிதிற்
போகமட வாரி ணக்கம்
பொறிவா யலைக்குமீ துள்ளபடி முன்வினைப்
போகந் தொடர்ந்த நெறியால்
ஆராலு முடிவுறா தானா லிதற்குநல்
அறிவென்ற தீப மொன்றுண்(டு)
அவ்வழியி லேமனஞ் செல்லாமல் அலைகின்ற
அடியேனை ஆட்கொள் ளுவாய்
தாரேறு பன்னிரு புயாசலக் கடவுளே
சரசகோ பாலன் மருகா
சதுர்மறைக ளோதந்த பரமகுரு வாய்வந்த
சரவணப வானந்தனே. 9

தருகர்ம மோகமுறு திமிதிமிங் கலமிக்க
தனலோப வன்மு் தலையாம்
தற்கோப வல்வடவை மூடத்துவம் பரவி
சஞ்சல மெனுந்த ரங்கம்
அரியவெனில் ஒருகுமிழி அஞ்ஞான வாரிதியில்
அலைகின்ற சீவ ராசி
அத்தனையும் மீனினம் ஏமனொரு வீசுவலை
அவ்வுயிரில் யானும் ஒருவன்
கருதரிய பாரப் பெருங்கடல் கடந்தே
கடைத்தேற வேணு மென்றால்
கைத்தவளை இல்லையினி என்செய்கு வேனது
காற்றவளை கைப்பற்றினேன்
சரியமர்செய் நெடியமடை சூரகெஜ சிங்கமே
சரசகோ பாலன் மருகா
சதுர்மறைக ளோதந்த பரமகுரு வாய்வந்த
சரவணப வானந்தனே. 10

தூயபொறி ஐந்தையும் அடக்கிபுல னாதிகள்
சுழல்கின்ற வழிம றித்துச்

சுழிமுனை திறந்துமூ லாதார மேலாந்
துவாதசாந் தத்தை மூட்டி
வாயுவை யுருக்கிப் பெலத்துவரு குண்டலியை
வவ்விமேற் கொண்டெ டுத்து
வாசியை நடத்தியவ் வோசையைத் தாவென்று
வழிகொண்டு நாத வெளியில்
தோயும் பரப்பிரம பூரண விலாசமது
சோதிப்ப தென்ன எளிதோ
தொலையாது நிலையாத தாகையால் உன்பதந்
துணையே துணைப்பற் றினேன்
தாயகம னோகர மயூரவா கனமுருக
சரசகோ பாலன் மருகா
சதுர்மறைக ளேதந்த பரமகுரு வாய்வந்த
சரவணப வானந்தனே. 11

கண்ணேறு வாராது பிணியொன்று சேராது
கவலைப்ப டாது நெஞ்சம்
கலியாது சலியாது நலியாது மெலியாது
கலியென்ற பேயடாது
விண்ணேறு மணுகாது கன்மவினை தொடராது
விஷமச் சுரம் வராது
வெய்யபூ தம்பில்லி வஞ்சனைகள் தொடரா
விஷம்பரவு செந்து மடரா
எண்ணேறு சனனங்கள் கிடையாது காலபயம்
எள்ளளவு மேயி ராதுஇவ்
ஏழைக் கிரங்கியருள் தெய்வமுனை யல்லாமல்
இன்னமொரு தெய்வ முளதோ
தண்ணேறு கங்கைமலை மங்கைஅருள் தெய்வமே
சரசகோ பாலன் மருகா
சதுர்மறைக ளேதந்த பரமகுரு வாய்வந்த
சரவணப வானந்தனே. 12

**சுப்பிரமணியர் விருத்தம் முற்றிற்று**



உ

# செல்வச் சந்நிதிக் கந்தன் திருவிருத்தம்

## சீ. விநாசித்தம்பி

### காப்பு

**வெண்பா**

ஆனைக்கணபதியே ஆதிசெல்வச் சந்நிதிவாழ்
ஞானக் கனியுடைய நாயகனே — மோனக்கண்
தந்துன்றன் தம்பி தவமலர்த்தாள் பாடுதற்குச்
சுந்தரனே செய்வாய் துணை.

### நூல்

**பன்னிரு சீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்**

பரமசிவன் மைந்தனே கணபதியின் தம்பியே
பார்வதி யணைத்தகுகனே
பகவனின் மருகனே பண்பார் விசாகனே
பன்னிரு கரத்தழகனே
மரகத மயூரத்த சச்சிதா னந்தசிவ
மங்கள சொரூபத்தனே,
வான்தந்த குஞ்சரியும் மான்தந்த வள்ளியும்
வந்துமரு வும்செல்வனே

அரகரா குருபரா அப்பனே முருகனே
ஆறுமுக வேலரசனே
ஐயனே எனஓதும் அடியார்கள் முன்தோன்றி
அபய்வர தங்கொடுக்கும்
சரவணபவா நினது சரணமலர் சந்ததம்
தமியேன் நினைக்கஅருள்வாய்
தண்பரவை தொண்டைமா னாறுதழுவும் செல்வச்
சந்நிதிக் கந்தவேளே. 1

வளர்மதிய மொருகோடிப் பிரகாச மேனிதிகழ்
வள்ளிமகி ழும்செல்வனே
வண்ணமயி லேறிநற் புண்ணியர் மனத்திலே
வாழும் சிவச்செல்வனே
ஒளிர்வதன மோராறும் முறுவலுற வந்தின்பம்
ஊட்டியரு ளும்செல்வனே
ஓங்குபர மானந்த பாங்குமிளிர் சிவஞான
உத்தமி தரும்செல்வனே
கிளர்முதிய சூராதி யவுணரைப் பொடிசெய்த
கிரணவடி வேற்செல்வனே
கீரனுட னருணகிரி குறுமுனிவ ரௌவைதமிழ்
கேட்டுமகி ழும்செல்வனே
தளர்வுடைய சிந்தையொரு நிலைபெறு மனோலயச்
சாந்தசுக மீந்தருளுவாய்
தண்பரவை தொண்டைமா னாறுதழுவும் செல்வச்
சந்நிதிக் கந்தவேளே. 2

ஆதிக்குமரா மயிலில் ஆடுங்குமரா அன்னை
அம்பிகை நயந்தகுமரா
அகிலாண்ட கோடிகளை யாண்ட குமராநித்தம்
அன்பர்மனம் மேவுகுமரா
சோதிக்குமரா அமிர்த வல்லி சுந்தரவல்லி
துணைவனாய் வந்தகுமரா
சூரகுல சங்கார வீரகு மராதமிழ்ச்
சொற்புலவ னானகுமரா
நீதிவடி வேல்கொண்ட வேதக்குமரா கல்வி
நிதியருளும் முதிய குமரா



நித்தியகல் யாணக்கும ராஅன்ன தானத்தின்
நெறிபய னுரைத்தகுமரா
சாதிகுல பேதமெனும் சந்தேகம் தெளிவுபெறும்
சன்மார்க்க நிலையருளுவாய்
தண்பரவை தொண்டைமா னாறுதழுவும் செல்வச்
சந்நிதிக் கந்தவேளே. 3

மங்கள மிகுந்தவேல் வானவர் துதித்தவேல்
மாமலை தடிந்தவடிவேல்
வரைமே லமர்ந்தவேல் மந்த்ரவடி வானவேல்
மண்டல நிறைந்தநெடுவேல்
சிங்கமா சூரனொடு கஜமுகன் கொண்டநாற்
சேனையைத் துகள்செய்தவேல்
சேவலொடு மயிலான காவலன் போற்றிடும்
சிங்கார வைரமணிவேல்
மங்கைகுற வள்ளிதனை மங்கலம் பூணவரு
வனவேடன் கொண்டகைவேல்
மாகடல் குளித்தவேல் மாமர மறுத்தவேல்
மறைதந்த அருணகிரிவேல்
சங்கரன் தந்தவேல் சக்திவேலே நினது
தாடலை சுமக்கஅருள்வாய்
தண்பரவை தொண்டைமா னாறுதழுவும் செல்வச்
சந்நிதிக் கந்தவேளே. 4

பண்டைவினை தீர்த்துனது பக்தரைக் காக்குமயில்
பஞ்ச வர்ணங்கள்எங்கும்
பரவுமோங் காரமயில் பன்னக மிதித்தமயில்
பகைவரை யடக்கவீசும்
சண்டமா ருதநிகரத் தாவிப் பறக்குமயில்
சச்சிதா னந்தநிலையைத்
தன்வடிவிற் காட்டுமயில் பொன்னுலக ஆட்சிமயில்
சலியாத நிருதரழிய
மண்டுபெரு போர்க்களம் கண்டுநட மாடுமயில்
மதுரஒரு கனிகிடைக்க
வருகோடி கோடிபல அண்டங் கடந்துவரும்
மயிலேறு முருகேசனே
தண்டமுறு நிரயமணு காதுனைத் தரிசிக்கத்
தங்கமயி லேறிவருவாய்

தண்பரவை தொண்டைமா னாறுதழுவும் செல்வச்
சந்நிதிக் கந்தவேளே. 5

ஒருமுகங் கதிர்விரிந் துலகெலாங் காத்தருளும்
உண்மைதரு மன்புடையவர்க்(கு)
ஒருமுகங் களிகொண்டு வரநலம் செய்திடும்
ஓதுமறை வேதியர்தமை
ஒருமுகம் வேள்விவிதி வழுவாது கவனிக்கும்
ஒண்கலைத் திங்களைப்போல்
ஒருமுகம் வேதசாஸ் திரநுட்பம் தெரிவிக்கும்
உக்கிர மனத்தினுடனே
ஒருமுகம் மருவுபோர்க் களவேள்வி யதுநுகரும்
உள்ளமிக நகையமர்ந்தே
ஒருமுகம் வள்ளியுட னுல்லாச வாழ்வுகொளும்
ஓராறு முகமுமொத்துத்
தருமுகங் கொண்டெமது வறுமைபிணி துயரகலத்
தண்முறுவல் பூத்துவருவாய்
தண்பரவை தொண்டைமா னாறுதழுவும் செல்வச்
சந்நிதிக் கந்தவேளே. 6

ஒருகரம் தேவரைப் பாதுகாத் தேந்திட
ஒருகரம திடையில்வைக்க
ஒருகரமங் குசமோட்ட ஒருகரங் கலிங்கத்தின்
உயர்குறங் கிற்பொருந்த
ஒருகரங் கேடயமும் ஒருகரம் வேலுங்கொண்
டுற்றுவல மாய்ச்சுழற்ற
ஒருகரம் சொல்லாமற் சொல்லுநெறி மார்புகொள
ஒருகரம் தாரொடொளிர
ஒருகரம் தொடியுடன் மேன்மேல் சுழற்றிட
ஒருகரம் மணியிரட்ட
ஒருகரம் மழைபொழிய அருளமுத குஞ்சரியை
ஒருகரம் மாலைசூட்டத்
தருகரம் பன்னிரண் டுங்கொண்ட முருகனே
தளராத வாழ்வுதருவாய்
தண்பரவை தொண்டைமா னாறுதழுவும் செல்வச்
சந்நிதிக் கந்தவேளே. 7



திருமகள் தருவள்ளி செய்யுமா லோலமெனும்
தேவாம்சத் தொனியுணர்ந்து
செந்தினை வனத்தோடித் ''திருமணம் செய்''யென்ற
சிவவேட னானமுருகா
விரவுகாம் போதிநிரை மேய்த்தன்பு மாதரொடு
விளையாடுங் கண்ணன்மருகா
மெய்யுருகு வார்பாடும் ஹரஹரப் பிரியனே
மேவுசக் கரவாகனே
அருமறை தந்தவா ஆனந்த பைரவி
அணைக்கும் ஸ்ரீசண்முகா
அங்கையினில் ஓடேந்தித் தன்யாசிப் பாலிந்த
அண்டங்கள் காக்குமீசன்
தருமழலைக் குருபரா தமிழ்மோகனா நினது
தாளிணைத் தேனருளுவாய்
தண்பரவை தொண்டைமா னாறுதழுவும் செல்வச்
சந்நிதிக் கந்தவேளே. 8

அவமருவு மூவாசை யாற்றினைத் தாண்டிமன
அமைதிதரு மினிமைபெறவும்
அருளொழுகு தெய்வீக அறிஞரைப் பின்பற்றி
ஆனந்த நிலைகொள்ளவும்
பவமருவு வினைகோடி ஓட ''முருகா''என்று
பகலிரவு கவிபாடவும்
பந்தனை யழிந்துனது சிந்தனை மிகுந்துவரு
பரவெளிச் சிரம்நாடவும்
சிவமருவு மந்திர செபம்புரிய வுந்தூய
திருநீ றணிந்துருகவும்
சீரடியர் குழுவிலே ஓரடிய னாகிமிகு
தேவார இசைபாடவும்
தவமருவு முறையினாற் கவலைகள் ஒழிக்கவும்
தந்திரந் தந்தருளுவாய்
தண்பரவை தொண்டைமா னாறுதழுவும் செல்வச்
சந்நிதிக் கந்தவேளே. 9

அதுநல்ல திதுதீய தவர்பெரியர் இவர்சிறியர்
அதுஉண்மை இதுபொய்யென

அஞ்ஞான இருளிலெது சரியென்று தெரியாமல்
ஆடுங் குரங்காகினேன்
பதிமனைவி யுறவுகளும் அதிகார உரிமைகளும்
பாங்காக வருநிதிகளும்
பட்டங்கள் பதவிகளும் திட்டங்களும் பாரில்
பலவசதி சுகமனைத்தும்
நதியருகு மரமாக அதனுனியில் ஒருகூட்டை
நாடிவரும் பறவையானேன்
நலிவுதரு மோரைந்து புலவேடரின் துணையை
நம்பிஏ மாப்படைந்தேன்
சதியுடைய இருகொள்ளி யுள்ளெறும் பானஎனைத்
தள்ளாது காத்தருளுவாய்
தண்பரவை தொண்டைமா னாறுதழுவும் செல்வச்
சந்நிதிக் கந்தவேளே. 10

ஆவகை வதைத்திடுதல் அந்தணரை வைதிடுதல்
அரிவையரை நெறியழித்தல்
அறிஞரைத் தூற்றிடுதல் ஆகமம் மாற்றிடுதல்
ஆய குருவைப்பழித்தல்
மேவுகொலை களவுபொய் யோதுமது கொள்ளுதல்
மெய்யுருகு தந்தைதாயை
வேதனைப்பட வைத்தல் சூதுவினை செய்திடுதல்
விளையுமுன் கதிரறுத்தல்
தேவருறை ஆலயக் குறைபுரிதல் அறியாத
சிறுமையரை ஏமாற்றுதல்
தீயஇத் தகைபாவம் எத்தனை செய்தனோ
சிறுமையேன் பிழைபொறுத்துத்
தாவுதிரி சூலமொடு பாசமுறு காலனெனைத்
தாக்காமல் வந்தருளுவாய்
தண்பரவை தொண்டைமா னாறுதழுவும் செல்வச்
சந்நிதிக் கந்தவேளே. 11

கருணைமுரு காசோதி ஞானமுரு காஆதி
கைலேசன் தந்தமுருகா
கற்றவர் விழுங்கிடும் வெற்றிமுருகா அன்பர்
கருத்திலே இருக்கும்முருகா



அருணகிரி நாதனுக் கருளும்முருகா படைகள்
ஆறில்விளை யாடும்முருகா
அசுரனைக் கூறிட்ட நெடியமுருகா வேத
ஆகமம் சொன்னமுருகா
மருணெறி யொழித்துனது பெருநெறி பிடித்தொழுக
வரமுதவும் பரமமுருகா
வல்லமுருகா வள்ளி குஞ்சரி மகிழ்ந்திடும்
மயிலேறும் அழகமுருகா
தருணமழை யாகிவரும் சத்திமுருகா எங்கள்
சஞ்சலம் தீர்க்கவருவாய்
தண்பரவை தொண்டைமா னாறுதழுவும் செல்வச்
சந்நிதிக் கந்தவேளே. 12

சிவயோக வெள்ளமே அருளூறும் வெல்லமே
தேவரறி யாதபழமே
''சிவயநம'' ''நமசிவய'' மந்திர நலந்திகழும்
சிவசுப்ர மண்யகுருவே
பவளமலை மீதுமர கதநில வெறிப்பநடை
பழகுமொரு மழலைவடிவே
பரவுமறை யாகம புராணமொடு திருமுறைகள்
பாடிப் படைத்தமுடிவே
புவியாதி பூதமே விந்துகலை நாதமே
பொருளான சுகபோகமே
பொற்புடைய கற்புமணம் களவுமணம் விளைவுதரும்
புனிதம் விளக்குமரசே
தவியாத உள்ளமுண ரவிரோத ஞானத்தின்
தத்துவ முணர்த்தவருவாய்
தண்பரவை தொண்டைமா னாறுதழுவும் செல்வச்
சந்நிதிக் கந்தவேளே. 13

எண்ணுஞ் சுகங்கள்வரும் ஏகாந்த வாழ்வுவரும்
இருள்போக்க அருளும்வரும்
இறவாத பிறவாத பெருவாழ்வு வருமென்றும்
இகழிலாப் புகழும்வரும்
திண்ணமிகு மனஉறுதி திகழட்ட சித்திகளும்
தெய்வீக வடிவும்வரும்

சித்தசுத் தானந்த பத்திவரும் புத்திவரும்
சீவகா ருண்யம்வரும்
பண்ணுடைய கலைகள்வரும் விண்ணவரின்
நிலைகள்வரும்
பாக்கிய மனைத்தும்வரும்
பரநலம் செய்யவரும் பார்க்குமிட மெங்குமுன்
பயிலழகு தெரியவும்வரும்
தண்ணருள் முருகனே எண்ணிவந் துன்செல்வச்
சந்நிதியைத் தொழுதவர்க்கே
தண்பரவை தொண்டைமா னாறுதழுவும் செல்வச்
சந்நிதிக் கந்தவேளே. 14

கொந்தார் கடம்பனே தந்தைநீ தாயும்நீ
குலவுமுற வோர்களும்நீ
கூடுமனை மக்கள்நீ நாடுமுயர் செல்வம்நீ
குறைதீர்க்கும் அரசனும்நீ
செந்தாமரைச் செல்வி வெண்டாமரைச் செல்வி
செய்கருணைக் கதிபனும்நீ
சிந்தனைக் கெட்டாத குமரன்நீ அன்பரின்
சீரான தோழனும்நீ
நொந்தாரின் துயர்தீர்க்கும் சஞ்சீவி நீசகல
நூலறியும் புலவனும்நீ
நுவலரிய எங்கள்துரை நீயென்று பவமான
நோய்போக்க உனைநாடினேன்
சந்தேக மானஇத் தேகத்தினா லமுத
தவமுத்தி பேணவைப்பாய்
தண்பரவை தொண்டைமா னாறுதழுவும் செல்வச்
சந்நிதிக் கந்தவேளே. 15

சிங்கார மனையுண்டு குறையாத நிதியுண்டு
சீர்பூத்த மைந்தருண்டு
செழுமைதரு நிலமுண்டு வழுவாத குலமுண்டு
திருவளரும் வாழ்க்கை யுண்டு
மங்காத புகழுண்டு வாடாத மனமுண்டு
மாண்பான கலைகளுண்டு



மதியுண்டு பரவுசிவ கதியுண்டு மனுநீதி
வயல்பூத்த அருளுமுண்டு
வங்கார தொகையுண்டு வண்ணமிகு முடையுண்டு
மட்டிலாச் சித்தியுண்டு
மலையுண்ட வேலவா நினதடியை நெஞ்சினில்
வைத்துண்டு வாழ்பவர்க்கே
சங்கீத ஆலோல வள்ளிதரு தினையமுது
தலையசைத் துண்டமுருகா
தண்பரவை தொண்டைமா னாறுதழுவும் செல்வச்
சந்நிதிக் கந்தவேளே. 16

**செல்வச் சந்நிதிக் கந்தன் திருவிருத்தம் முற்றிற்று**

உ

# மயிலைச் சிவசுப்பிரமண்யர் விருத்தம்

## க. மயில்வாகனப் புலவர்

### காப்பு

**வெண்பா**

திருமான் மருகன் சிவசுப்ர மண்யப்
பெருமான் மயிலைநகர்ப் பெம்மான்—கருமாய
வீட்டுங் குகனை மிகத்துதிப்பே னெஞ்சிருளை
யோட்டு மொருகோட் டுவா.

**விருத்தம்**

உலகு சிறப்பப் பல்கதிரோ
னுதைதி யுதித்த தெனப்பசுங்கா
ருலவு மயிலின் மிசையேறி
யொளிகால் மணிப்பொன் முடிதுளங்க
இலகு குணங்க ளறுமுகமா
யியைந்த கருணை நிறைந்தொழுக
விராறு புயங்க ளிராறுவிழிக்
கிணங்கப் படையி னிரைவிளங்க
விலகு மொளிப்பூண் கலைதுலங்க
விரவு கழற்கா லிரண்டிலங்க
வேடர் மகள்வா சவன்புதல்வி
மிளிர்வேற் சத்தி யிவையொடுஞ்
சுலவு வினையேன் விழிவிருந்தாய்த்
தோன்றி யருளென் பிணிமருந்தாய்த்
துதிக்கு மயிலைப் பதிகொள்சிவ
சுப்ர மண்யப் பெருமானே.



மேக மின்ன னிலைத்திருந்து
மிளிருங் கால நிலையாத
மெய்யின் வாழ்வை விழைந்திருந்து
வீணிற் பொழுது கழிப்பேனை
மோக ரிக்குங் கடன்மணலை
முழுதுங் கணிக்க வியன்றாலு
முடிவு காணாக் கரும்பிறவி
முழுகிச் சுழல்வுற் றலைவேனைப்
போக மங்கை மார்சுகத்தைப்
புசித்துப் பணிவாய்த் தேரையெனப்
பொறிகள் கலங்கி யுழல்வேனைப்
பொருளா மதித்து வரமருளத்
தோகை மயிலின் மிசைவருநின்
சுகிர்த மிருந்த படியென்னே
துதிக்கு மயிலைப் பதிகொள்சிவ
சுப்ர மண்யப் பெருமானே. 2

உரைக்கு நலங்க ளவைதுணியே
னொழிக்கும் பவங்கள் பலதுணிவே
னுகந்துன் முளரிப் பதம்பணியேன்
னொழியா மயலார் பதம்பணிவேன்
தரைக்கு ணினையான் புகழ்ந்தணியேன்
சாமி யெனையே புகழ்ந்தணிவேன்
றரிக்கு மருளை மிகக்கணியேன்
றனத்தைப் புவியை மிகக்கணிப்பேன்
வரைக்குங் கடிய மனப்பிணியேன்
வருந்தா திருக்க வகைகுணியேன்
வன்னி விழியான் றருமணியே
வள்ளி முன்ன ருறுகணியே
சுரக்கும் பசுக்க ளளிக்கவரை
தூக்கு மரிக்கு மருமகனே
துதிக்கு மயிலைப் பதிகொள்சிவ
சுப்ர மண்யப் பெருமானே. 3

வஞ்ச நிறைந்த மனப்புலத்தின்
வளர்ந்த மலக்கா டெரித்தழித்து

மலிந்து பரவு மகங்கார
மணந்த கல்லைப் பிளந்தகற்றி
விஞ்சு மௌன விதைபதித்து.
விழும வன்பு நீரிறைத்து
மிழற்று மாயைப் பறவையொடு
விலங்கு பயிரை யழியாமல்
உய்ஞ்சு வரக்காத் ததன்விளைவு
முண்ண வொருநாள் வருவதுண்டோ
வுவந்து கனவி லெழுந்தேனு
மோதிக் கொடியேற் குறவருள்வாய்
துஞ்சி யறிவு மறுகுசிறைத்
துணையில் சயந்தன் கனவில்வந்தோய்
துதிக்கு மயிலைப் பதிகொள்சிவ
சுப்ர மண்யப் பெருமானே. 4

உற்ற பிறவி தொறுமகலா
துளுற்று பவப்பேய் பிடித்துந்த
வொழியாப் பிறவிக் கடல்விழுந்தே
னுடைகொ ளாசைத் திரையமிழ்த்தக்
கற்ற கபட மாதரெனுங்
கதித்த மகரங் கலக்கநொந்தேன்
கண்கண் முதலாம் பொறிச்சுறவங்
கடுகி யங்கு மிங்குமெனை
முற்று மிழுக்க வெதுசெய்வேன்
முழுதுங் கருணை யுருவாகி.
முத்தித் துறையின் வழிகாட்டு
முளரி நிகர்நின் பதப்புணையைத்
துற்ற வருளிற் செலுத்தினன்றித்
துணைக்கும் வேறு துணைகாணேன்
றுதிக்கு மயிலைப் பதிகொள்சிவ
சுப்ர மண்யப் பெருமானே. 5

குளிரி னடுங்கு பனிக்காலங்
கொடிய கானத் திடையிரவிற்
குலவு புலியெண் கியானையரி
கொல்லும் பிறமா வலைந்துசெல



ஒளிரு மெரியிற் பிணம்வேவ
வுடங்கு வரும்பேய்க் கணங்களென்றே
யுள்ளம் வெருவ மழைதூற
வோவா துருமி முழங்கிமின
வளரு முள்ளிச் செடியுறைப்ப
மலைந்து கற்க ளடித்துறுத்த
வருந்து மவனிற் சதமடங்கா
மனது கலங்கி மறுகிடவோ
துளிருங் கமல விதிவகுத்த
தொகையார் தினங்க ளொலாந்தொண்டர்
துதிக்கு மயிலைப் பதிகொள்சிவ
சுப்ர மண்யப் பெருமானே. 6

சோதி யெரியில் விளையாடித்
தூம வேள்வி முனிவர்விடச்
சுளித்த புலியோ டடுத்தகரி
துணித்துத் தரித்தான் றோலுடையாப்
பாதி யுமையாள் வடிவனவன்
பயந்த மைந்த னாதலினாற்
பரந்த வெனது மனவனத்திற்
பகைத்த பெருங்கா மத்தீயுஞ்
சாதி சினப்பாய் புலியுங்கான்
றழங்கு களியென் னியானையுமே
தணவா துறைந்து வசித்தாலுந்
தனியா வருதற் கஞ்சாதே
சூத நிரையிற் குயில்பாடத்
தொழுது தொண்டர் குழாங்கூடித்
துதிக்கு மயிலைப் பதிகொள்சிவ
சுப்ர மண்யப் பெருமானே. 7

பிள்ளைக் கறியை யுகந்தவற்கும்
பிறழா விமய கிரிமகட்கும்
பிள்ளை யெனநீ பிறந்ததற்கோ
பெரிது நெஞ்சங் கல்லாகி
யெள்ளின் றுணையு மிரங்காம
லெம்மா னெந்தை யென்றாயே

யென்று புகன்றே யிரந்தாலு
மெனக்கோ வருள வெழுதல்செய்யாய்
கள்ளின் கடம்பின் வண்டளிப்போய்
கவினு மயில்வா கனமுகைப்போய்
கமலத் தயனார்க் குரைமொழிந்தோய்
கடலில் வடிவேல் புகவெறிந்தோய்
துள்ளி யெழுந்த தகருகைத்தோய்
தொண்டர்க் கியானை மேல்வருவோய்
துதிக்கு மயிலைப் பதிகொள்சிவ
சுப்ர மண்யப் பெருமானே. 8

செய்ய வொண்ணாத் தீமைபல
செய்தே னென்னை நரகழுத்தித்
தீயி னுருக்கி வாயினுள்ளே
செம்பை வார்த்து விழியிரண்டின்
நைய முளைகள் பலவுறுத்தி
நாவைத் துண்டித் தூசிகளை
நகக்க ணெங்கு மிறக்குதற்கு
நாடி நின்றார் நமன்றூதர்
சைய வகத்தி னடுங்கியிதைத்
தரியேன் றரியேன் றரியேனாற்
றழலை நிகர்க்கு மவர்கையிற்
றப்பு விக்க விதுசமயந்
துய்ய தலத்தி லியாரியார்க்குந்
துயர மழிக்க வடிவுகொண்டோய்
துதிக்கு மயிலைப் பதிகொள்சிவ
சுப்ர மண்யப் பெருமானே. 9

ததைந்து மதுப்பாய்ந் தொழுகுமன
சலச மலரி லுனையிருத்தித்
தழைக்கு மன்பி னபிடேகந்
தவிரா தியற்றித் தமிழ்மொழியாற்
புதைந்து குவிய மலர்மாலை
புனைந்து தொழச்சற் றருள்புரிவாய்
புயல்கண் படுக்குந் தண்டலைசூழ்
பொய்கைச் சங்க மீன்றமுத்தஞ்



சிதைந்து கெடப்பா யிருள்சீக்கத்
தெளிந்த புனலே பாற்கடலாத்
திரையின் சுருட்டே யரவணையாச்
சிறந்த கமல வனம்பொறியாத்
துதைந்த விலைக ளுருவாமா
றுயிலும் பரங்குன் றாதியொடு
துதிக்கு மயிலைப் பதிகொள்சிவ
சுப்ர மண்யப் பெருமானே. 10

மயிலைச் சிவசுப்பிரமண்யர் விருத்தம் முற்றிற்று

உ

# நல்லைக் கந்தசுவாமி வாழி விருத்தம்

## நல்லூர் ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலர்

அருணவிக சிதகமல மலரைநிகர் தருவதனம்
ஆறுமநு தினமும் வாழி,
அமரர்தொழு கனகசபை நடனமிடு பரமசிவ
அருண்முருகர் சரணம் வாழி
கருணைமழை பொழிபனிரு நயனமதி னொடுவலிய
கவினுலவு தோள்கள் வாழி,
கனகிரியை இருபிளவு படவுருவு நெடியவயில்
கரதலத் தினிது வாழி,
வருணமர கதவழகு திகழவரும் அவுணனெனும்
மயிலினொடு சேவல் வாழி,
வனசரர்தம் அரசனுத வியகுறமி னொடுகடவுண்
மயிலிவர்கள் தினமும் வாழி,
தருணமிது எனவமரர் பணிநல்லை அமர்கந்தர்
தமதடியர் நிதமும் வாழி
சகசநிரு மலபரம சுகிர்தபரி பூரண
சடட்சரம் வாழி வாழி. 1

**நல்லைக் கந்தசுவாமி வாழி விருத்தம் முற்றிற்று**



உ

# கந்தர் மாவை வெண்பா

## மா. குமாரசாமி

### காப்பு

சீர்பெருகு மாவைத் திருமுருகன் சந்நிதியில்
ஆர்வமொடு வீற்றிருக்கு மைங்கரனே — பார்பரவு
தம்பிதனை வெண்பாவிற் றாள்பணிந்து பாடுகிறேன்
தும்பிமுகா நீயே துணை. 1

பாட்டெழுத நானறியேன் பாட்டி லுனதுபுகழ்
கூட்ட வகையறியேன் கூர்வேலா — ஏட்டிலே
நல்லபடி நானெழுத நாமகளே மாவையுறை
வல்லவளே வந்தருளு வாய். 2

தாயார் பெறவில்லை தந்தை நுதல்விழியின்
தீயாகிச் சேயான தேவனவன் — தாயாகித்
தாங்கி யருள்புரிவான் தண்ணார் வயல்மாவை
ஓங்குபுகழ் வேலவனென் றோது. 3

கந்தனுறை மாவையிற் காட்டுகிற தீபங்கள்
சிந்தையைக் கந்தன்பாற் சேர்த்துவிடும்—மந்திரங்கள்
முந்தைவினை போக்கிவிடும் மூவாசை நீக்கிவிடும்
பந்தவினை மாற்றிவிடும் பார். 4

மூலப் பொருளாவான் மூர்த்திதலந் தீர்த்தமெலாஞ்
சாலப் பொருந்துகிற தண்ணளியான் — கோலமிகு
மாவைப் பதியுறைவான் மக்கள் துயர்தீர்த்து
ஆவிக்கு நற்றுணையா வான். 5

இந்திரனும் வானவரு மேத்துகிற வாழ்த்தொலியும்
அந்தணர்கள் கூறு மருமறையும் — மந்திரமும்
ஆனந்தக் கூத்துடையா ரார்ப்பரிப்பும் மாவையில்
ஞானவொளி காட்டுந் நனி. 6

பாடிப் பரவுமிடம் பண்டிதர்கள் கூடுமிடம்
ஆடி யடங்குமிடம் அற்புதங்கள் — நாடுமிடம்
ஓடி யொதுங்குமிடம் ஓங்காரக் கந்தனிடம்
தேடியுறை மாவையிட மே. 7

சின்னஞ் சிறுபிள்ளை செந்தூர் தரும்பிள்ளை
வன்னமயி லேறி வரும்பிள்ளை — மன்னுலகில்
தேவர் தொழும்பிள்ளை சீருடைய வேற்பிள்ளை
மாவைநகர் மாப்பிள்ளை யே. 8

அருவாகி யுள்ளுறையு மானந்தத் தெய்வம்
குருவாகி வந்தகுக தெய்வம் — திருவாரும்
மாவைத் தலமுறையும் மாணிக்கத் தெய்வமுயர்
தேவர் தொழுந்தெய்வ மே. 9

ஈராறு தோள்காட்டி யின்ப விழிகாட்டி
ஓராறு தண்முகமு மொண்வேலும் — நேராக
மாவையிற் காட்டி மனங்குளிர வைத்தனனே
தேவர் தொழுந்தேவ னே. 10



வேலும் மயிலுமென வேண்டுவார் தங்களுடன்
பாலும் பழமாய்ப் பழகிடுவான் — வேலுடனே
வந்தருளிக் காத்திடுவான் வண்மாவை வீற்றிருக்கும்
சுந்தர வேலனெனச் சொல். 11

ஆறுமலை யாடிவரு மண்ண லமர்ந்திருந்து
ஆறுமலை கீரிமலை யாக்கினான் — சீறும்
மயிலேறி வந்துநன் மாவை யுறையும்
அயில்வேல னென்றே யறி. 12

தந்தையின் பிள்ளையாய்த் தப்பாமல் வந்துதித்தான்
விந்தை புரிமாவை வேல்முருகன் — தந்தையோ
சுட்டெரித்தான் முப்புரத்தைச் சூர னுடல்கெடவேல்
விட்டழித்தான் வேலனிவ னே. 13

மயிலேறி யீசற்கு மந்திரஞ் சொல்லி
நிலைபேறு கண்ட நிமலன் — நிலையாக
ஆடு மயிலேறி யம்மை யிருவருடன்
கூடுமிடம் மாவையெனக் கூறு. 14

வேதப் பொருளறியா வேதன் தலைகுட்டிப்
பாதம் பணியவைத்த பாலகன் — சீதவயல்
நன்மாவை நாயகன் நாதற்கு நாதனிவன்
துன்பகற்றி நிற்பான் துணை. 15

சீரார் பரங்குன்றம் செந்தூர் திருத்தணியும்
ஏரார் பழநியொடு ஏரகமும் — நேராகக்
கண்ட முருகனைநாம் காலமெலாம் மாவையிற்
கண்டு களித்திடுவோம் காண். 16

வேலும் மயிலும் வினைதீர்க்கும் வேலவனின்
காலுமே முத்திதனைக் கைகூட்டும் — பாலகனாம்
மாவைக் குமரன் மலரடியே தஞ்சமெனில்
பாவப் பிணியோடும் பார். 17

புவியரசி நன்மா ருதப்புர வல்லி
பவவினையால் வந்தபழி தீர்ந்து — நவமாகக்
கந்தனுக்குக் கோயிலொன்று கட்டினாள் மாவையில்
கந்தனருள் கண்டு களித்து. 18

அலங்காரம் நல்லூரில் ஆற்றோர வேலன்
தலங்காணு மன்னதா னந்தான் — நலமாம்
அருட்கோலங் காட்டி யடியார்க் கருளுந்
திருக்கோலம் மாவையெனத் தேர். 19

நிலந்தரும் கல்விதரும் நீண்டபுத்தி யாக்கை
நலந்தரும் செல்வமும் நல்கும் — வலந்தரும்
மாதா விலுமினிய மாவை நகர்வேலன்
பாதார விந்தம் பணி. 20

ஆறு முகங்காட்டி அஞ்சு முகமோட்டித்
தேறு முகந்தந்த தெய்வமே — ஆறுபடை
வீடுடைய வேலவனே விண்ணோர் புகழ்மாவை
நாடிவந்த தேனோ நவில். 21

ஆசை யடங்குமிடம் ஆங்காரம் நீங்குமிடம்
ஓசை யொடுங்குமிடம் உண்மையில் — பாசம்
அழியுமிடம் வேல னருளுமிடம் புத்தி
தெளியுமிடம் மாவையெனத் தேர். 22



கோலத் திருவுருவைக் கூர்வேலின் தண்ணளியைக்
காலமெலாங் கண்டு களித்திடுவீர் — வேலவனை
சீலமிகு மாவின் திருவைத் தினந்தொழுது
ஞாலமிசை வாழ்வீர் நனி. 23

புத்திவரும் சக்திவரும் போற்றித் துதித்திடவே
பத்திவரும் பாடிப் பரவிடவே — முத்திதரும்
ஆனை முகன்தம்பி ஆறு முகன்மாவை
வானவனை யென்றும் வழுத்து. 24

அரவினணை கொண்ட அரிமருகா மாவைச்
சரவணப வாவெனச் சாற்றி — இரவுபகல்
அற்ற இடங்கண்டு ஆறு முகம்பெற்றுப்
பற்றற்று வாழ்வீர் பணிந்து. 25

வள்ளியொடு குஞ்சரியை வாரி வலமிடமாய்
அள்ளி யணைத்தே யருகிருத்தி — மெல்லவே
மாவைப் பதியமர்ந்து மக்கள் துயர்போக்குந்
தேவனிவன் செந்தூர னே. 26

கேட்ட வரமருள்வான் கேளா திருப்போர்க்கும்
ஊட்டிவளர் தாய்போ லுதவிடுவான் — நாட்டமொடு
மாவைப் பதியுறையும் மன்னன் மலரடியே
பாவவினை போக்கும் பணி. 27

வள்ளி! உனதடியில் வந்தடைந்த வேடனவன்
தெள்ளுதமிழ் தந்த சிவகுமரன் — வள்ளல்
அடியார் துயர்போக்க ஆசையொடு மாவை
குடிபுகுந்தா னென்றே குறி. 28

புலனடக்கிப் போற்றிவரும் புண்ணியர்க்கு மாவைத்
தலமுருகன் தன்றாள் தருவான் — நிலவுலகில்
கந்தா! கடம்பா! கதிர்வேலா! என்றுருகிச்
சிந்தையிற் கொள்க தினம். 29

அருளொழுகு கண்களொடு அன்புமுக மாறும்
பெருகுபுய மீராறும் பேணும் — திருவுடைய
கூர்வேலுங் கண்டு குளிர்ந்திடலாம் மாவையில்
ஏர்பெருகு கந்தன்றா ளேத்தி. 30

அந்தரம்வாழ் தேவ ரரிபிரம னிந்திரனும்
சிந்தை மகிழ்ந்தினிது சேவிக்க — பஞ்சரதம்
ஏறிவரும் வேலவனை இன்பமுறக் காணுபவர்
பேறுபெற்றார் மாவையிற் பேசு. 31

கண்ணுதலான் பெற்ற கனியமுதே! கந்தனே!
விண்ணோர் சிறைமீட்ட வேலவனே! — மண்ணுலகில்
மக்கள் துயர்போக்க மாவை தனிலமர்ந்து
பக்கத் துணையானான் பார். 32

மணியோசை கேட்டு மனமுருகு மன்பர்
பிணிதீர்க்கும் மாவைப் பெருமான் — அணிவேலை
செங்கரத்திற் றாங்கிவருஞ் செவ்வேள் திருவடியைத்
தங்கவைப்பா னென்றலைமேற் றான். 33

காவின் மயிலாடக் கண்டு மனங்களித்து
மாவின் குயில்பாடும் மாவையில் — மேவியுறை
ஈசன் முருகேசன் எண்ணு மடியவர்தந்
நேசன் குகராச னே. 34



பெற்றாளும் வாராள் பிரியமனை பிள்ளைகளும்
உற்றாரும் வாரா ருறுதுணையாய் — வற்றாத
அன்புடைய மாவை யணிவேலன் பொற்பதமே
பொன்றுங்காற் பொன்றாத் துணை. 35

பத்தர்கள் சூழப் பவனிவரும் பாலகனைச்
சித்தங் களிகூரச் சேவித்து — முத்திதனைப்
பெற்றிடுவோம் மாவையிலே பேசி முருகனடி
பற்றிடுவோம் வாரீர் பணிந்து. 36

அருணகிரி பாடலிலே ஆழ்ந்திருப்பா னன்பு
அருண்நிதியந் தந்தே யளிப்பான் — குருமணியாய்
மண்டு புகழ்கொண்ட மாவைக் கதிர்வேலன்
அண்டியருள் செய்வா னறி. 37

தொல்லை வினைவந்து துன்பப் படுத்தாமல்
எல்லை யிலாவின்ப மெய்திடவே — சொல்மாவை
கந்தன் திருவடியைக் கைதொழுது ஏத்திடுவீர்
சிந்தை தனையொடுக்கி யே. 38

ஆரா வமுதே அடியே னடிபோற்றி
நீராய்க் கசிந்துருகி நின்றிடச்செய் — சீராரும்
வேல்முருகா மாவை விளங்கு சிவகுமரா
மால்மருகா மன்னா மகிழ்ந்து. 39

கந்தா கடம்பா கதிர்வேலா காங்கேயா
சிந்தா குலமகற்றுஞ் செவ்வேளே — வந்தாளும்
மந்தா கினிமகனே மாவைப் பெருமானே
எந்தா யிரங்கா யினி. 40

நக்கீரன் செய்தமுரு காற்றுப் படைக்கிரங்கி
அக்கிரமம் மிக்கமலை யானவனை — தக்கபடி
தண்டித்த வேலவனே தண்மாவைக் காவலனே
அண்டியுனைப் போற்ற வருள். 41

பொற்சிலம்பு தண்டையும் பூணூல் அரைஞாணும்
கொற்றமுறு வேலுங் குளிர்முகமும் — பற்றுடனே
காணவே கண்ணிரண்டுங் காணா கதிர்மாவை
வாணுதல் வள்ளிகண வா. 42

அலங்காரஞ் செய்து அநுபூதி கண்டு
இலங்கு திருப்புகழு மேற்றித் — துலங்கும்
அருண கிரியாரை யாண்டகுகா மாவைத்
திருவே யெனக்குமரு ளே. 43

கந்தர் கலிவெண்பா காட்டி யருள்பெற்ற
எந்தை குமர குருபரன்போல் — சந்ததமும்
கந்தனே மாவைக் கனியே யுனைப்பாட
வந்தருள வேண்டும் வரம். 44

பாடிப் பரவிப் பணிந்துருகி நின்னடியைக்
கூடிடவே வேண்டுகிறேன் கூர்வேலா — ஓடி
மயிலேறி வந்திடுவாய் மாவைப் பதிவாழ்
அயில்வேல் கரங்கொண்ட வா. 45

தேவர் சிறைமீட்ட தெய்வமே சீருடைய
மாவைப் பதியுறையும் மன்னவனே — பாவியேன்
நாளும் மனமொடுக்கி நாவா லுனைத்துதித்து
வாழ வழிகாட்டு வாய். 46

நோயுற் றழுந்தாமல் நொந்துமனம் வாடாமல்
பாயிற் கிடக்காமல் பாவியெனை — நேயமொடு
மாவைப் பதியுறையும் மன்னா மயிலேறும்
தேவே உனதடியிற் சேர். 47

தாயா ரெனக்கில்லை தந்தைமனை தானில்லை
நாயாய்க் கிடந்தலைந்து நானிங்கு — பேயாகித்
தேடுவா ரற்றுத் திரியாமல் மாவைவளர்
ஆடுமயி லோனே யருள். 48

புழுவாய்ப் பிறந்தாலும் பூதலத்தி லுன்னை
வழுவாது ஏத்தியே வாழ்வேன் — அழுதழுது
மாவைத் திருமுருகா மால்மருகா வென்றேத்தும்
பாவியெனைத் தள்ளாமல் பார். 49

இன்னல் பலவந்து ஏங்கித் தவித்தாலும்
உன்னடியை யான்மறவே னுத்தமனே — மன்னுபுகழ்
மாவைப் பதியுறையும் மன்னவனே யுன்நாமம்
நாவில் நிலைத்திடச்செய் நாளும். 50



கந்தா முருகா கதிர்வேலா மாவைநகர்
வந்தாள் சிவகுமரா வாழ்த்துகிறேன் — நெஞ்சதனில்
அஞ்சுதலை நீக்கியே யாறுதலைத் தந்திடுவாய்
வெஞ்சூர் தடிந்தவே ளே. 51

ஆலால முண்ட வரனார் திருமகனே
சேலார் வயல்மாவைச் செம்மலே — மாலோன்
மருமகனே வந்து மரணபயம் தீர்ப்பாய்
அருமருந்தே யாறுமுக வா. 52

எண்ணமெலாந் நின்னடியே வேறேதும் யானறியேன்
தண்வயல்சூழ் மாவைத் தனியரசே — மண்ணுலகில்
காக்குங் கடவுளெனக் கைகூப்பிப் போற்றுமெனைத்
தூக்கிவிட லாகாதோ சொல். 53

பள்ளியறை தன்னிற் பரிந்துரைத்துச் சீர்மாவை
வள்ளி யெனக்காக வாதாடி — உள்ளநிறை
தண்டமிழிற் பேசித் தமியேனை ஆண்டருளப்
பண்ணிடுவா யின்றே பணிந்து. 54

ஆதீன நற்குருவா மையா மனமுருகி
வேதா மிகவகுத்த வேதங்கள் — ஓதியே
பூவைச் சொரிந்துசெயும் பூசைக் குகந்துகந்தன்
மாவையருள் கின்றான் மகிழ். 55

மன்றாடி மைந்தனே மாவையுறை கந்தனே
குன்றேறி வாழுங் குமரனே — என்றுமே
இன்புற் றிருந்து இனிய புகழ்பேசி
யன்புற் றிருக்க வருள். 56

என்று வரும்மரணம் என்று விழுமுடலம்
ஒன்றும் புரியா துழல்கின்றேன் — பொன்றுநாள்
வந்தென்னைச் சேரமுனம் வாராய் வளர்மாவைச்
சுந்தரா நல்ல துணை. 57

உள்ளக் கிழியதனி லுன்னுருவம் மாவையுறை
வள்ளலே யானெழுதி வாழ்த்துகிறேன் — துள்ளியே
ஓடவிட மாட்டேன் உலவுபுல னைந்தினையும்
ஆடவிட மாட்டே னறி. 58

அறப்பணிகள் செய்தறியே னானாலும் பாதம்
மறப்பறியேன் மாவை மணியே — பிறப்புதரும்
பந்த வினையகற்றிப் பாதார வீந்தத்தைத்
தந்தருள்க ஞானபண்டி தா. 59

கிள்ளைமொழி பேசிக் கிளுகிளுக்க மாவைதனில்
வள்ளியொடு குஞ்சரியும் வாய்த்திருந்தும் —
பிள்ளையிலாப்
பாவியென வுன்னைப் பரிகசிக் காதிருக்கத்
தாவியெனைத் தத்தெடுப்பா யே. 60

இன்னல் தனைநீக்கி யேற்று அடியவரை
அன்னையெனக் காக்கு மரிமருகா — வன்னமயில்
கொண்டவனே மாவைக் குகனே யடியவனின்
பண்டைவினை போக்கிவிடப் பா. 61

பாத கமலத்தைப் பற்றாமல் பற்றறுத்துப்
பாத கமலத்தைப் பற்றிடச்செய் — சீதவயல்
மாவைப் பதியுறையும் மாமணியே மாலறியாத்
தேவன் திருக்குமர னே. 62

அண்ட மெலாந்தனது ஆளுகைக் குட்படுத்திக்
கொண்டபெருஞ் சூரன் குடல்பிதுங்க —
பண்டொருநாள்
வேல்தொடுத்த மாவைநகர் வேலவனே உன்னிரண்டு
கால்பிடித்தேன் கைதொழுதேன் காண். 63

தொழுது உனைப்பாடித் தோத்திரங்கள் செய்தும்
அழுதுமகங் காரமக லாதே — அழிகின்றேன்
அந்தமொடு ஆதியு மற்றவனே மாவையுறை
சுந்தரனே வாராய் துணை. 64

பொல்லாப் புழுவாய்ப் புகுந்து கிடந்தலைந்து
நில்லா வுலகில் நிலைத்தாலும் — மெல்லவே
உன்னை மறவா வுயர்நிலையை மாவையுறை
மன்னவனே தந்து மகிழ். 65

வஞ்ச மனத்தானை வாழும் வகையறியா
தஞ்சு மனத்தானை யாட்கொள்வாய் — பிஞ்சு
மனத்தோனே மாவைசேர் மன்னவனே வேடர்
இனத்தோனே வேலா இனி. 66



சொல்லத்தான் வேண்டுமா சொல்லா தறியீரோ
எல்லாந் தெரிமாவை யீசரே — கல்லால்
அடித்தாலும் போகேன் அடிக்கீ ழமர்வேன்
எடுத்தடி வையே னினி. 67

காத்திடுவா யென்றுன்னைக் கையெடுத்துக் கந்தப்பா
ஏத்தித் தொழுகின்றேன் என்னுள்ளம் — பார்த்து
இனியா கிலுமிரங்கி யேற்றிடுவாய் மாவைக்
கனியா இனிக்குங்கு கா. 68

ஆத்தா ளடித்தாளோ அப்பன் மறுத்தானோ
சேர்த்தெனைக் கொள்வதற்குத் தேவியரும் — பார்த்து
வெறுத்தாரோ மாவைசேர் வேலவரே சொல்லும்
ஒறுத்தாலும் போகே னுணர். 69

பொல்லா வினைபோக்கிப் புன்னெறியிற் சேராது
எல்லா நலனு மெனக்களிப்பாய் — நல்லமனம்
தந்திடுவாய் மாவை தருநிதியே வேல்முருகா
சிந்தை யுறைதெய்வ மே. 70

ஆசை யறுத்துவிடு அன்பாக வுன்புகழைப்
பேசவெனை வைத்துவிடு பெம்மானே — நீசனெனத்
தள்ளியே வையாதே தண்வயல் சூழ்மாவை
வள்ளிக்கு வாழ்வளித்த வா. 71

போகு மிடமறியேன் புத்திதடு மாறுகிறேன்
தாவுங் கொழுகொம்பு தானறியேன் — பாவியெனைப்
பாராது நீயகன்றால் பார்த்திடுவா ரார்மாவைச்
சீரான வேற்பிள்ளை யே. 72

மாவை வளர்சோலை மாங்குயிலாய் நான்பிறந்தால்
கூவி யுனையழைத்துக் கும்பிடுவேன் — பூவுலகில்
ஆக்கி விடுகுயிலாய் ஆனந்த வேலவனே
தூக்கிவிடு நீயே துணை. 73

மாவையில் நந்தவன மாமலராய் நானுதித்தால்
பூவாகி நின்னடியைப் பூசிப்பேன் — ஓவாது
மாலையா யென்றும் மணிமார்பிற் சேர்ந்திடுவேன்
வேலையா வேண்டுமிது வே. 74

வேளப்பா நன்மாவை வேலப்பா என்பாடல்
கேளப்பா சீர்கார்த்தி கேயப்பா — வாழப்பா
பாழப்பா இப்பிறவி பாவியுடல் வீழுமுனம்
ஆளப்பா வந்துகந்தப் பா. 75

எல்லா மறிபவனே யெங்கும் நிறைபவனே
நில்லாத யாக்கை நிலைகெடுமுன் — தில்லையுளான்
மைந்தனே மாவை மரகதமே மற்றெனது
சிந்தை தெளிந்திடவே செய். 76

பஞ்சப் புலனடக்கிப் பாவி மனமொடுக்கி
அஞ்செழுத்தை யோத வறிவிப்பாய் — நெஞ்சினில்
ஆறெழுத்தைக் கண்டு அகங்குளிரச் செய்மாவை
ஏறுமயி லேறுபவ னே. 77

உன்னுருவம் கண்வழியா யுள்ளத்தைத் தொட்டவுடன்
கன்மனமும் நெக்கிக் கசியுதே — வன்னமயில்
ஏறிவரும் மாவை யெழிலாரும் வேலவரே
ஆறுமுகந் தாருமை யா. 78

சித்தமெலா முன்னடியிற் சேர்த்திடுவாய் செவ்வேளே
புத்தி தடுமாறிப் போகுமுனம் — சத்தியமாய்
உன்னைவிட வுற்றா ரொருவரிலை யிங்கெனக்கு
மன்னுகுக மாவைமன் னா. 79

ஆடவைத்தா யாடுகிறேன் அன்பர் தொழுங்குமரா
கூடவைத்தா லுன்னடியிற் கூடுகிறேன் — தேடவைத்துத்
துன்பப் படுத்தாதே தூமாவைக் கந்தனே
இன்பத் திருவே யினி. 80

எத்தாலு முன்னையே யேத்தித் தொழுகின்றேன்
செத்தா லெனையெங்கு சேர்த்திடுவாய் — பித்தான
பத்தனென மாவைப் பரனே யறியாயோ
சித்தப் படியெதுவுஞ் செய். 81

அரனார் மகனே அரிமருகா வேலா
சரவண சண்முக சாமி — இரவுபகல்
என்றும் நினதடியே யென்மனத்தில் சீர்மாவை
ஒன்றியுள கந்தா வுணர். 82



சரவணத்தில் வந்துதித்த சண்முகனே மாவைப்
புரமிடமாய்க் கொண்டுறையும் பொன்னே — பிரமனின்
ஆங்காரம் நீக்கி யருள்புரிந்த வேலவனே
தூங்காம லென்னுள்ளந் தூங்கு. 83

கல்லா திருந்துவிட்டேன் கற்றோர்கள் தம்பக்கம்
செல்லா தொழிந்தேன் சிறுமையேன் — வல்லானே
மாவையுறை வேலவனே மண்ணி லுனையன்றிப்
பாவியெனக் கார்துணையப் பா. 84

மடக்கவழி காணேன் மனக்குரங்கு ஓடிப்
படக்கெனவே பக்கமெலாம் பாயும் — மடக்கி
மலரடியிற் சேர்த்துவிட மார்க்கமுரை மாவை
இலகுபுகழ் வேலா வெனக்கு. 85

எருமைக் கடாவினிலே யேறியம ராசன்
அருகினில்வந் தென்னை யழைத்தால் — கருவுற்று
மேலும் பிறக்காமல் மேதினியில் மாவையுறை
வேலவனே காத்திடுக வே. 86

ஊரார் பழிக்காம லுள்ள முலராமல்
சீரான வாழ்வுதருஞ் செவ்வேளே — நேராகக்
கூற்றுவனார் வந்தென்னைக் கூப்பிடுமுன் மாவையொளி
யேற்றிடுவா யென்னுள்ளத் தே. 87

புத்திரரோ டுற்றார் பொருந்து சுடுகாடு
செத்தவுடன் கொண்டென்னைச் சேர்க்குமுனம் — அத்தனே
அன்புடைய மாவை யணிமுருகா வுன்பாதம்
இன்பமுறத் தந்தருள்வா யே. 88

துட்ட னெனவூரார் சொல்லி விலக்கிடினும்
கட்டியுன் கால்பிடிப்பேன் கந்தனே — நட்டமிடும்
ஈசன் மகனே எழிலாரும் மாவையூர்
வாசனே காத்தருள வா. 89

சூலப் படையுடனே தூதுவருஞ் சூழ்ந்துவரக்
காலனைக் கண்டு கருத்தழிந்து — ஞாலமிசை
பாவியுடல் வீழுமுனம் பாடிமனம் மாவையுறை
தேவனடி தேடுதிலை யே. 90

பாழு முடல்சுமந்து பாவிமனங் கெட்டழிந்து
மாழு முனங்கந்த மாவையான் — தோழனென
நீளப் பழகியவன் நெஞ்சில் நிறைந்தவன்றன்
றாளைப் பதித்திடுவான் றான். 91

வீரனெனக் கையிலே வேலெடுத்து நிற்கிறாய்
சூர னுடல்கிழித்த சுப்ரமண்ய — தீரமுடன்
காத்திடுக கந்தனே காலமெலாம் மாவையில்
ஏத்திடுவோ முன்னடியை யே. 92

கூடித் திரிந்தவுயிர் கூடுவிட்டுப் போகவுடல்
தேடிச் சுடுகாட்டில் சேர்ப்பதன்முன் — நாடியெனை
வந்தவினை போக்கி வளர்மாவை வேலவனே
சிந்தா குலந்தீரச் செய். 93

காலனுயிர் நீக்கக் கடாவில் வரும்போது
வேலவனே மாவைசேர் வேந்தனே — ஓலமிட்டுக்
கந்தா வெனக்கூவிக் கத்திடுவேன் காத்திடுவாய்
அந்தமொடு ஆதியற்ற வா. 94

மூவுலகுங் காப்பவனே மூலமலந் தீர்ப்பவனே
தேவுலக நாயகனே செந்தூரா — பூவுலகை
என்னுயிர்விட் டேகுமுன மேற்றருள மாவைசேர்
வன்னமயில் வாகனனே வா. 95

நாட்கள் நகர்கிறதே நாடி நமனார்தம்
மாட்களுட னிங்குவர வாயத்தம் — ஓட்டித்
துரத்திடுவாய் மாவைத் துயர்களையும் வேலா
கரங்கொண்ட வேலினைக் காட்டி. 96

அமரா வதியுறையு மையா குமரா
தமராகி மாவையூர் சார்ந்தாய் — நமனாரும்.
பாசக் கயிறுகொண்டு பாவியெனைப் பார்க்குமுனம்
நேசக் கரமெனக்கு நீட்டு. 97

உடலுந் தளர்ந்து உலகோர் நகைக்கத்
திடமற்றுக் கோலூன்றித் தேய்ந்து — நடமாடித்
தள்ளாடி வீழுமுனந் தாங்கிடவே தண்மாவை
வள்ளலே வள்ளியுடன் வா. 98



மண்புகழும் மாவை மகராஜ ராஜஸ்ரீ
சண்முக நாதகுரு தக்கபடி — விண்ணவரும்
போற்றிப் புகழ்ந்திடச்செய் பூசை தனைக்கந்தன்
ஏற்றெவர்க்கும் வாழ்வளிப்பா னே. 99

பஞ்சப் புலனடக்கிப் பக்குவமாய் வேலவனை
நெஞ்சத் திருத்தி நினைந்துதொழும் — வஞ்சமிலாச்
செஞ்சொற் புலவனெனைச் சீர்மாவைக் கந்தனே
அஞ்சலெனக் காப்பா னறி. 100

கந்தனே வாழ்க கடம்பனே வாழ்கவீசன்
மைந்தனே வாழ்கவாழ்க மாதுமை — தந்தருளும்
சுந்தரா வாழ்கவாழ்க தூயனே மாவையாளும்
எந்தையே வாழ்கவாழ்க வே. 101

**கந்தர் மாவை வெண்பா முற்றிற்று**

உ

# குமர வயலூர்க் குமரன் மீது பாடிய குமர வெண்பா

## சீ. கோதண்டபாணி

### காப்புச் செய்யுள்

எடுத்த வினைமுடிக்கும் ஏந்துகோட்டண்ணால்
தொடுக்கும் கவிதைத் தொடையை - விடுப்பின்றி
மாமுருகன் மீது மனங்குழைந்து சூட்டுதற்கு
தாமருள்க முன்வந்து தான்

வயலூர் முருகாவென் வண்டமிழின் வேந்தே
அயலார் அறியா அழகா - மயலொன்றும்
சேராது என்னைச் செழித்தோங்கச் செய்குவாய்
ஆராத இன்பம் அளித்து 1

அன்பேயென் னாருயிரே அண்டர் பெருமானே
இன்பமாய் என்னிதயம் ஏற்றிட்ட - நன்முருகா
மன்னியஎன் குற்றம் களைந்தேநல் மாண்பமைய
என்னையே ஏற்க இசைந்து 2

ஓங்குபுகழ் உத்தமனே உன்றன் பதகமலம்
எங்கொலிநீர் ஞாலமிதில் எய்திடவே - வீங்குசீர்
ஐயன் அருள்நல்கி அன்பனையிவ் வையமிதில்
உய்ய அருள்க உவந்து 3

காலத்தால் மூத்துக் கனிந்தோனே சீரிளமைக்
கோலத்தால் என்றும் குறையாதோய் - ஞாலத்தில்
கண்கண்ட தெய்வமெனக் கற்றோர்கள் தாம்வணங்கும்
பண்கொண்ட பாலனேநீ பார் 4

காலமெல்லாம் உன்றன் கனிவைப் பெறவேதான்
ஞாலமிதில் ஆவலுடன் நானிருப்பேன் - சீலமுறு



ஆலமுண் டோன்மகனே அன்புதிகழ் செவ்வேளே
கோல மயிலோடு வா 5

முத்தமிழை நீயளிப்பாய் மூவாக் குமரனே
எத்திக்கும் உன்கவியால் ஏற்றமுற - இத்தினமே
ஞாலமெல்லாம் சுற்றிவந்தாய் நற்கனிக்காய் இன்முருகா
கோல மயிலேறி வா 6

பொங்கிவரும் பூம்புனலாய் பூத்தஎழில் தேன்மலராய்
செங்கரும்புத் தீஞ்சுவையாய் நின்றொளிரும் - பங்கமிலா
நன்மால் மருகாநீ நற்றமிழின் முன்தலைவா
இன்னினியே வந்தருள்க ஏற்று 7

புன்தொழில்கள் யாதும் புரியாது பீடுற்ற
நன்செயல்கள் யாவையும் நானுஞற்ற - உன்றன்சீர்
பொன்னார் திருவடியே புல்லியேன் என்றனக்கு
நன்மனமே நல்க நயந்து 8

அன்புமிகு நெஞ்சம் அழைக்கும் விழியுடன்
என்றும் பொழியும் இறையவனே - அன்றைக்கு
ஞானம் உரைத்தோனே நானிலத்தில் மிக்கோனே
வானின் மழைபோல வா 9

நினைவுவந்த நாள்முதலாய் நின்னையே எண்ணி
இனைந்துருகி வாழ்கின்ற என்னை - தினைத்தானும்
தீது நலியாது செய்தொழில்கள் வெற்றியுற
பாதுகாத் தோம்பப் பரிந்து 10

தித்திக்கும் செந்தமிழில் தீம்பாக்கள் பாடியே
பத்திமையால் உன்னைப் பரவுகின்றேன் - இத்தினமே
சித்தம் களித்துச் செழித்தோங்கி வாழவேநின்
புத்தருள் ஈக பொலிந்து 11

தனக்குவமை இல்லாதோய் தாளைப் பணிந்தேன்
மனக்கவலை மாற்றி யருள்க - நினக்கென்று
ஏதும் பெறாதே எளியபதம் மேற்கொண்டாய்
சீத மலரடியாய் செப்பு 12

நெஞ்சம் கனிந்துருக நித்தமுனைப் பாடிடுவேன்
கொஞ்சும் மழலைக் குமரனே - விஞ்சுபுகழ்
வேலவனே செந்தில்மே யோனே விழைவோர்கள்
பாலவனே உன்கடைக்கண் பார் 13

பாடும் தினைப்புனத்துப் பாடலினைக் கேட்டலுமே
வேடனாய் வந்தீர் விழைந்தவள்முன் - ஆடாமல்
வேங்கையாய் நின்றீர் விரைந்து அருளுகவே
தீங்கொழித்து வாழச் சிறந்து 14

விண்ணிலே கார்முகிலைக் கண்டே விழைந்தாடும்
மண்ணில் மயில்போல் மகிழ்வுறுவேன் - தண்ணளிசால்
மிக்கவளஞ் சான்ற வியன்வயலூர் வீற்றிருப்போய்
இக்கணமே வந்தருள்க ஏற்று 15

பொருள்தரும் கல்விதரும் புன்மை நெறியை
இருளெனவே ஓட்டிவிடும் எக்காலும் - அருள்உருவாம்
எம்மையன் குன்றமரும் இன்முருகன் தாளிணையைச்
செம்மையாய் போற்றியக் கால் 16

தலைச்சங்கப் பாவலனாய் தண்தலைமை ஏற்றாய்
கலைக்குரிசில் என்றுன்னைக் கண்டேன் - இலைமலிந்த
வேலனே எங்களது வெவ்வினையைத் தானறுக்கும்
சீலனே செந்திவாழ் வே 17

கண்ணுதலோன் மைந்தனே கார்வண்ணன் நன்மருகா
எண்ணியோர் எண்ணமெலாம் ஈடேற்றும் -
திண்ணியனே
பண்கொண்டு பாடும் பரிவுடையர் நின்னருளால்
உண்மகிழ்ந்து வாழ்வர் உயர்ந்து 18

ஆரா வமுதே அணையா ஒளிவிளக்கே
பேரா வியற்கைப் பெருமானே - சீராரும்
நன்செய் வளமிக்க நன்வயலூரார்ப் பெம்மானே
அன்புடனே காக்க அமர்ந்து 19

சீர்கெழு செந்திலும் செங்கோடும் வெண்குன்றும்
ஏரகமும் நீங்கா இறைவன்நீ - பார்புகழ
வாலறிவு தானளிக்க வண்மையாய் இவ்வுலகில்
கோல மயிலுடனே வா 20

மங்கல நன்வேடந் தாங்கி மனுக்கட்கு
இங்கிதமாய்த் தோன்றும் இனியவனே - பங்கமிலா
செங்கரும்பும் தெங்கும் செழிக்கும் வயலூரா
எங்களைக் காக்க இனிது 21



அண்ணா மலையான் அழகமர் செல்வனே
பண்ணோடு பாடல்கொள் பாவலனே - எண்ணும்
எழுத்தும் உணர்த்தியே ஏந்தலென இவ்வுலகில்
செழித்தோங்கச் செய்க சிறந்து 22

தமிழின் சுவையாய் தணலின் ஒளியாய்
அமிழ்தின் இனிமையாய் அண்டர் - கமழ்வாழ்வின்
ஏந்தலே! எப்பொருட்கும் நீங்கா இறைவனே
காந்தமாய் என்னைக் கவர் 23

உண்ணினும் உண்ணா தொழிந்தாலும் ஊக்கமாய்
எண்ணினும் எண்ணா திருப்பினும் - அண்ணல்நீ
பண்ணின் இனிமையாய் பாலிற் படுநெய்யாய்
எண்ணத்தே நிற்பாய் இசைந்து 24

அடுத்தகணம் நேர்வ தறியாத வாழ்வு
படைத்த இறைவனின் பண்பே - அடுத்தடுத்து
செல்வம் பெருக்கிச் சிறப்புடனே வாழினுமென்
நல்லருள் இல்லா விடின் 25

நன்செய்யும் பொன்விளைக்கும் நற்பொன்னி
யின்ஒழுக்கால்
கன்ன லிளவாழை காய்க்கமுகும் - மின்னொளிரும்
சீர்வயலூர் மேவும் சிறப்பமைந்த செம்மால்நீ
பாரிலெம்மைக் காக்க பரிந்து 26

அரவணைப் பள்ளிகொளும் அண்ண லரங்கம்
பரவிய தென்மேற்குப் பாங்கர் - விரவிய
ஒள்வயலூரார் மேயோய் உயர்ஞான பண்டிதனே
கள்ளமறக் காக்க கனிந்து 27

நல்லனவே செய்க நடுநிற்க எஞ்ஞான்றும்
அல்லன செய்யற்க ஆண்டானை - ஒல்லுமா
றெண்ணுக என்றும் இருள்நெஞ்சு கொள்ளற்க
என்றுரைக்கும் ஏந்தல்தான் நீ 28

அண்ணலே நின்னுளம் எம்பால தாகுக
எண்ணமெம் இல்குறையை ஏற்றருள்க - மண்ணில்
தண்ணருள் வாழ்க தராதலத்தோர் தாம்வாழ்க
திண்ணியநின் அன்பில் திளைத்து 29

உமையாள் பயந்த உயர்ஞானச் செல்வா
இமையோர் இடர்நீத்த ஏந்தால் - நமையெல்லாம்
கண்ணிமைபோல் காத்துக்கழல் சேர்க்க வேண்டுவனே
பண்ணிசையாய் உன்னைப் பணிந்து 30

குருகு பெயர்க்குன் றெறிந்தாய் குணத்தால்
உருகு மனமுடையோர் உன்னால் - பெருகி
நலம்பெற்று வாழவே நாணாளும் உன்றன்
மலரடியை ஈக மகிழ்ந்து 31

பூவெனில் தாமரைப் பூவேயாம் பூதலத்தில்
பாவெனில் வெண்பாதா னாகுமே - நாவால்
உரைக்கும் குறளே உயர்நூலாம் உன்தாள்
புரையற்ற மக்கள் புகல் 32

இடருற்றோர் வேண்டுதலை ஏற்றெளிதாய் என்றும்
இடர்நீக்கும் இன்முருகன் எந்தை - மடமிகுக்கும்
புன்தொழிலே ஆற்றும் புவியுளோர் நந்தமக்கு
நன்துணை நல்லடியே தான் 33

பொன்னடியை நல்லெழிலைப் புன்மைதீர் தெய்வமணம்
உன்னுரிமை கொண்ட உரவோனே - இன்னருளால்
மன்னா உலகத்து மன்பதைகள் தாம்விரும்பும்
அன்னையாய் ஆர்க அமர்ந்து 34

செஞ்ஞாயிற் றின்னொளியும் செவ்விதழும் பொன்முடியும்
அஞ்ஞானம் நீக்கும் அருளொளியும் - எஞ்ஞான்றும்
மக்கள் மனக்கவலை மாற்றும் மதியொளியும்
எக்காலும் என்னகத்தே தான் 35

வண்டமருஞ் சோலை வயலூர்த் திருப்பதியில்
ஒண்டளிர்க்கை மாதர் உடனுறைய - புண்டரிகப்
பொற்பாதம் காட்டிப் புலமைசால் இன்குமரா
நற்பதமே நல்கி யருள் 36

மாலே புகுந்த மடநெஞ்சு மற்றெதையும்
சீலமாய்க் கொள்ளாது தீவினையீர் - பாலகன்ற
பாரோர்தாம் காண இயலாப் பதங்களையே
ஏருடனே காண்கின்றேன் யான் 37



கூற்றுவன் சாரான் கொடுவினையும் தான்சாரா
மாற்றமும் ஒவ்வா மனமேற்கா - ஆற்ற
மிக்க புனலும் மிகுசெந்நெல் நல்வளமும்
ஒக்கவய லூராவென் றோது 38

காண்ககண் நின்னுருவைக் கேட்கசெவி நின்புகழை
ஈண்டிய நின்னாமம் வாயொலிக்க - யாண்டும்
கடம்பின் மணம்நுகர்க கண்ணகன் ஞாலம்
உடம்பு பொருந்தி ஒளிர் 39

வேந்தராய் வேடனாய் வேங்கை மரமாயும்
மாந்தராய் மாதாய்மற் றெல்லாமாய் - சார்ந்தவர்க்கு
அன்பாய் அளியாய் அருளுருவாய் எம்மான்நீ
இன்னருளைத் தானளிப்பாய் ஏன்று 40

மனத்துன்பம் சாரா மதியுடையான் தன்னை
தனக்கேதான் தஞ்சமாய்ச் சாரின் - புனத்தினிலே
ஏந்திழைமுன் ஏந்தலாய் எண்மையாய்த் தோன்றியே
காந்தமென ஈர்த்தாளைக் காண் 41

தோன்றிற் புகழோடு தோன்றுகவே என்றுரைத்த
சான்றோன் உரைக்கேற்பத் தாரணியில் - ஆன்றபுகழ்
மிக்கு உயர்ந்து மேதினியில் மேலோனாய்
தக்கநிலை எய்தவருள் தான் 42

பாலன் முதியன் பாரில் மிகச்சேயன்
காலன் அணுகாத கண்ணுதலோன் - சீலன்
தமருள்ள மாய்க்கொள்ளின் தாரணியில் என்றும்
அமரவாழ் வெய்துவர் ஆன்று 43

பிரணவத்தின் உட்பொருளை பிரமா உணரான்
திரணமாய் எண்ணிச் சிறையிட்டாய்- மரணமே
எய்தும் மறுவாழ்வு ஏன்றிட்ட எம்மையே
உய்ய அருள்க உவந்து 44

உள்ளன்பே பேரொளியாய் ஊற்றுணர்வே எண்ணெயாய்
கள்ளமிலாச் சிந்தை கனதிரியா - வள்ளலுன்
வண்ணத் திருவடிக்கே வைத்திட்டேன் இவ்விளக்கை
எண்ணத் தமிழ்பாடும் யான் 45

[illegible] விளக்கை வரிசையால் ஏற்றியுளத்
திண்மையாய் நின்கருணைச் சீர்போற்றி - விண்ணில்
வளரும் உவாநாள்வண் கார்த்திகை நாளில்
முளரித்தாள் வாழ்த்துவம் முன் 46

செவ்வேளே தண்முருகா செந்தில் குமரனே
வெவ்வினையை நீக்கும் விமலனே - இவ்வுலகின்
கண்கண்ட தெய்வமே காசினியோர் தாம்போற்றும்
தண்ணளியோய் நீயே சரண் 47

எங்கள் இறையே! இமையோர் குறைகளைந்தாய்
செங்கண் நெடுமால் திருமருகா - தங்கு
புகழ்சால் திருப்பதத்தைப் புந்தியுள் கொண்டார்
மகிழ்வாழ்வு எய்துவர் மன் 48

விண்ணரசும் மண்ணரசும் மேவியெனைச் சாரினுமத்
தண்ணரசு வேண்டேன்யான் தாளிணைகள் -
கண்கொண்டு
போற்றி வழிபடும் பொன்வாழ்வுப் பேற்றினையே
ஏற்றித் தொழுகுவேன் யான் 49

எண்ணினும் ஏத்தினும் இன்றேநின் னேரடிகள்
கண்ணினும் மேலதாய்க் காண்கின்றேன் - உண்மனமே
மென்கரும்பை மேதி கடித்தேதான் முத்துதிர்க்கும்
பொன்வயலூர்த் தேவனையே போற்று 50

குமரா வயலூர்க் குணவா கொடிய
எமையணுகா வாறு எடுப்பேன் - தமராய்த்
தொடுக்கும் பழம்பாடல் தொல்லமுதே தூயோர்
படுக்கும் பழம்நீயே பார் 51

அறுமுகவேள் என்றே அகங்குழைந்தே நின்னை
முறுகியநல் பாசத்தால் முன்னி - சிறுகால்
மறவாது உன்றன் மலரடியே எண்ணி
இறவாது வாழ்கின்றேன் யான் 52

செந்தில்வாழ் குன்றே சிறப்பமைந்த பண்டிதனே
வந்த இருவினைக்கு மாமருந்தே - புந்தியுள்ளே
நின்றிலங்கும் தேவே நெடுமால் மருகாநின்
அன்புத்தாள் தானே அணி 53



வயலூர்வாழ் மன்னா வயங்கொளிசேர் தென்னா
கயல்விழிசேர் வள்ளியினைக் கண்டு - நயமுடனே
கொண்டே யமைந்து குறைகளைந்தாய் குன்றவர்தம்
அண்ணலென ஆங்கே அமர்ந்து 54

செந்நெலும் கன்னலும் செங்கதிரோன் தன்வரவால்
பின்னைக் கமுகும் பிணைந்திட்டே - நன்கதலி
தன்னையுங் கொண்டு தழைத்தொளிரும் பெற்றித்தே
இன்முருகன் எந்தைக்கிடம் 55

அருண கிரியாரின் ஆரமிழ்தப் பாட்டின்
கருணைத் தலைவனெனக் காமுற்றாய் - தருணமென
எண்ணி அகங்குழைந்தே ஏற்றமுடன் பாடுகின்றேன்
திண்ணியவுன் அன்பில் திளைத்து 56

குறிஞ்சிக் கிழவனே குற்றங்கள் நீக்கும்
அறிஞர் அறிவொளியாம் ஐய - வறிஞர்
இடர்நீக்கும் ஏந்தால் இனியநறுந் தேனே
மடம்நீக்கி ஏற்க மகிழ்ந்து 57

நக்கீரர் பாடிய நன்முருகாற் றுப்படையின்
தக்க பொருளாய்த் தனித்திலங்கும் - மிக்கோனே
ஒக்கலென உற்றோர்க்கு ஒண்ணிதயம் தானளித்து
மிக்கோனாய் ஆக்க விரைந்து 58

கல்லூரித் தோன்றலெனக் கற்றவர்கள் காமுறவே
நல்ல பெயர்தந்து நாணாளும் - மல்லல்சால்
வல்லரென் றென்னை மதித்தே புகழ்ந்திடவே
நல்லருள் ஈக நயந்து 59

அலைமோதும் செந்தில் அழகனே அண்டர்
தலைவனாய் வாழும் தகையோய் - உலைவேன்
மலைபோன்ற துன்பமும் வாலிதினின் நீக்கும்
இலைபனிநீர் போல எனக்கு 60

ஊரற்றேன் பேரற்றேன் ஒண்ணிதியம்
தானுமற்றேன்
சீரற்றேன் என்னினுமுன் சேவடிகள் - காருற்ற
மேகங்கண் டாடும் வியன்மயிலின் நன்தலைவா
ஆகமே கொண்டேன் அணி 61

உற்றோரும் மற்றோரும் உண்டிங்கு என்றாலும்
அற்றேன் அவர்களது ஆதரவு - மற்றெனக்கு
பற்றாக நீயமைந்து பாரில் உயர்வளிக்க
வற்றாத வள்ளால் மலர்ந்து 62

நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வமென
ஓயாது வேண்டும் உளமுடையேன் - தாயாய்
வளமான வாழ்வளிப்பாய் வள்ளி மணாளா
உளமார எங்கட் குவந்து 63

நரப்புநோய் யாதும் நலியாத வாறு
பரப்புடையெம் மக்களெலாம் பாரில் - உரப்புடனே
உன்னைப் பணிந்து உயர்வாழ்வு எய்திடவே
என்றும் அருள்க இனிது 64

மறதியின்றி உன்னை வாணாளில் வாழ்த்தும்
உறுதியுடை என்னை உவப்பால் சிறிதும்
தொல்லை யளிக்காமல் தூய்மனமே தானளித்து
பல்லாண்டு வாழப் பணித்து 65

ஐம்பொறிகள் ஏன்றும் அறிவுணர்ச்சி தான்பெறவும்
தீங்கறவே நோயின்றிச் சீர்பெறவும் - ஓங்குபுகழ்
நீங்காத செல்வா நிறையன்பென் செல்வற்குப்
பாங்காய் அருள்க பரிந்து 66

இதயநோய் இல்லாமல் இன்னலமும் சீரும்
உதயமால் ஒண்கதிரோன் போல - கதியுடனே
வந்தென் மகற்கு வாணாளும் கூர்மதியும்
சந்தமுடன் ஈக தழைத்து 67

உடல்நலமே ஓம்பாது உற்றபொருள் பெற்றால்
அடல்பெரிய ரென்றாரும் ஆய்வர்? - மடமிருக்கும்
நன்னிதியம் பெற்றாலும் நாளுமுன் நற்பதம்போல்
இன்னிதியம் ஆமோ எனக்கு 68

மல்லல் வளஞ்சால் வயலூர்க் குமரேசா
எல்லையில் அன்பினை இன்புடனே - நல்குடிக்கு
ஒல்லை உவந்து உடல்வளமும் பல்லாண்டும்
நல்லருளும் ஈக நயந்து 69



மன்னா உலகினிலே மன்னுதலே தான்விரும்பி
உன்னைத் தலைவனாய் ஓம்புகின்றேன் - இன்னருளே
ஈந்தென் உளக்கருத்தை இவ்வுலகில் தானளித்து
ஏந்தலென ஆக்க இனிது 70

காமர் கயல்பிறழக் காவி முகைநெகிழத்
தாமரையின்போது தளையவிழப் - பூமருவு
எந்நாட்டும் ஈடில்லை என்றுரைக்கும் பெற்றித்தாய்
இந்நாட்டு எந்தைதன் ஊர் 71

அழகொளிரும் பாங்கில் முருகொளிரும் என்ற
பழமொழிக்கே சான்றாகப் பாரில் - விழைவால
எழிலார் வயலூரில் ஏற்றமுடன் நிற்கும்
வழியுணர்ந்தேன் அன்புன்பால் வைத்து 72

உலகோர் உவப்புறும் ஒண்கதிரோன் காலைப்
பலர்புகழப் பைங்கடலில் பாய்ச்சி - இலகொளி
பெற்றே யொளிரும் பெருமைத்தால் மஞ்ஞையில்
உற்றே யமர்ந்தான் உவந்து 73

இளமையும் நல்லெழிலும் இன்பமுடன் பெற்றே
வளமும் நலமும் வயங்கும் - உளமுடை
நன்முருகா நீயென்றும் நல்லோர்க் கருளவே
உன்னடியை ஈக உவந்து 74

முதல்தமிழன் முன்கண்ட மூவா இளையோய்
பதமலரை கண்டேயிப் பாரில் - நிதமுமே
வாழ்த்தி வழிபடும் வல்லோர்க் கருளுகவே
ஊழிதோ றூழி உவந்து 75

மாடம் ஒளிரும் மதுரையின் தென்மேற்கே
பீடுசால் பேர்ப்பரங் குன்றதனில் - ஆடமைத்தோள்
தெய்வானை உள்மகிழத் தெய்வமணங் கொண்டோய்நீ
எய்யாது ஏற்க இனிது 76

தணிகை மலைத்தேவே தாருவாய் நின்று
பணிகுறவர் வள்ளியினைப் பாங்காய் - அணிகொண்ட
மன்றலில் ஏற்று மகிழ்ந்திட்ட மால்மருகா
இன்னருளை ஈக எமக்கு 77

பழனிப் பதியமர்ந்த பண்டிதனே ஞான
எழில்மிக்க ஏந்தால் எவர்க்கும் - வழிபடில்
நற்பதமே நல்கும் பழம்நீயே உன்றன்
அற்புத்தாள் தானே அகம் 78

ஓங்கி யுலகளந்த உத்தமனின் நன்மருகா
பாங்காகச் செந்தில் பதியமர்ந்தோய் - நீங்காத
அன்பை யளித்தே அகங்களித்து என்நெஞ்சில்
இன்பமுடன் தங்குகவே இன்று 79

கற்றோர் தலைவணங்கும் கற்பகத்தின் நற்கனியே
மற்றோர் உணரா மணிக்குன்றே - சொற்றமிழின்
தேனே இனிய செழும்பொருளே செம்மையேன்
தானே வணங்குவன் தாள் 80

மலையை உறைவிடமாகக் கொண்டயென் மால்மருகா
அலையெறியும் செந்தில் அமுதே - கலைநலஞ்சால்
கற்றோர் உவக்கும் களிப்பேயென் கண்ணேயுன்
பொற்பாதம் தானே புகழ் 81

வாயும் திரைமோதும் கானல் துறையமர்ந்தோய்
ஆயும் அமரர் அணிதலைவா - பாயன்பு
மேய பெருமான் மெலியோர் குறைகளைவாய்
நீயே எனக்கு நிலை 82

பழமுதிர் சோலைக் கிழவோனே பாரில்
கழல்பணிவோர் தாம்வாழக் கண்டு - நிழல்போலத்
தொடர்ந்து வழிபடும் தூயோனாம் என்னை
இடரின்றிக் காக்க இனிது 83

வயலூர்ப் பெருமானே வண்டமிழ்ச் செல்வா
கயல்பிறழ் வாவிகள்சூழ் காக்கள் - பயனகராம்
நல்வயலூரார் மேவும் நலமிக்க செவ்வேளே
அல்வினையை நீக்கி அருள் 84

ஊமன் எனப்பெற்றோர் ஒப்பாரில் லுன்றனது
சேமநிதிச் சேவடியில் சேர்த்த - நாமநீர்
சூடும் புவனத்தே தூயோன் குருபரனை.
ஆழ்புலவன் ஆக்கியது ஆர்? 85



பழமுதிரும் சோலைப் பசுந்தேனே பாரில்
உழந்து துதிப்போர்க் குரியோனே - அழலேந்தும்
பெம்மானின் சேயே பெரியோய் புலமையோய்
எம்மானே ஏற்க இனிது 86

மகனில் குறையை மறுக்கும் மருந்தே
அகம்நிறைந்த செல்வா அருந்தேவே - புகலின்றி
வாடும் எனது மனக்குறையைத் தானகற்றி
ஈடின்றி வாழவருள் ஈங்கு 87

செங்கோட் டமர்ந்தசெவ் வேளே செழுஞ்சுடர்சால்
தங்கநிறம் சான்ற தகவுடையோய் - மங்காத
ஏரகம் நீங்கா இறைவனே எம்மகத்தை
ஊரகமாய்க் கொண்டே ஒளிர் 88

திருவே ரகமேய செம்மால் சிவன்தான்
உருகி வழிபட் டுணரும் - பெருமானே
அன்பர் அகஇருளை நீக்கி அறிவொளியை
இன்பமுடன் ஈக இனிது 89

தென்னையும் வாழையும் சேர்ந்து வளர்ந்தெங்கும்
அன்ன வயல்சூழும் நன்னகரம் - இன்னலஞ்சால்
பொன்னிவளஞ் சூழும் வயலூர்ப் புனிதாநீ
அன்னையாய்க் காக்க அமர்ந்து 90

விண்ணிலுள்ள கார்முகிலைக் கண்டு விழைவுடனே
தண்ணிய பொற்கலாபம் தான்விரித்து - மண்ணில்
மகிழ்ந்தாடும் மாமயிலே போல மனங்குழைந்து
இகழாது ஏற்க இனிது 91

எப்போதும் உன்னாமம் எண்ணி யிருப்பதல்லால்
கைப்போ தகத்தின் இளையோய்நீ - முப்போதும்
வேண்டுவார் உள்ளத்தின் வேணவா தாளளிப்பாய்
ஈண்டு புகழோய் இனிது 92

என்னிலைமை எல்லாம் அறிவித்தும் இன்முருகன்
தன்னருளைத் தாளிணையைத் தாரானோ -
மென்மயிலின்
மீதமர்ந்தோன் மேதினியோர் உள்ளக் கமலமாம்
போதமர்ந்தோன் சேவடியைப் போற்று 93

மானிடம் பாட மகிழ்வுற்றேன் மாண்பமைந்த
தேனிடம் தானுறையும் தென்றலவன் -
பானிலாப்போல்
நின்றொளிரும் எந்தை நிறைவளங்கள் மிக்குற்ற
நன்வயலூரார் நாதனையே நாடு 94

வானத்துத் தாமரையோ மண்ணகத்துக் கற்பகமோ
ஏனற் புனங்காத்த ஏந்திழையாள் - பானல்
பெருவிழி யைக்கண்டு பெம்மானே நீவிர்
அருளுள்ளம் கொண்டீரே யன்று 95

என்றும் மறந்தறியேன் இப்பிறப்பில் எஞ்ஞான்றும்
நின்றுன் நினைவகலா நீர்மையால் - சென்று
சூர்மா தடிந்த சுடரிலைய வேலோனே
பார்மீது நல்லருளைத் தா 96

பல்லோரும் உன்னைப் பணிந்தே வழிபடினும்
எல்லோரும் வேண்டுவதை யான்வேண்டேன் - நல்லார்
அவைக்கண் அமர்ந்தக்கால் யாரினு மேலாய்
புவிக்கண் விளங்கஅருள் பூத்து 97

எண்ணிய எண்ணமெலாம் ஈடேற்றும் எம்பெருமான்
மண்ணில் மனக்குறையை மாற்றி - திண்ணம்
உளமகிழ்வு பெற்று உலகினிலே நானுலவ
வளமுடைய வாழ்வளிப் பாய் 98

ஆன்ற பெரும்புலவீர்! ஆரமிழ் தப்பாட்டில்
ஏன்ற உலகப் பொருளியைத்து - ஊன்றுங்
கருத்துக் குவியலாய்க் கண்டிடினும் எந்தை
திருத்தப்பா விற்கீடோ செப்பு 99

அணிவயலூர் வாழி அறுமுகவேள் வாழி
பிணிமுகப் பெம்மான்தன் பெய்வளைகள் வாழி
பணிமொழியால் ஏத்துஞ்சீர் பாவலர்தாம் வாழி
அணிசெவ்வேல் வாழ்கஆர்ந் து. 100

குமர வெண்பா முற்றிற்று



உ

# முருகேசர் முதுநெறி வெண்பா

## சிதம்பரம் ஈசானியமடம் இராமலிங்க சுவாமிகள்

**காப்பு**

கதிநெறியர் நெஞ்சிற் கதிர்க்குமுரு கேசர்
முதுநெறிவெண் பாவை மொழியப் — பதிநடம்வேட்
டற்பகத்தர் மல்குதில்லை யம்பலமேல் பாற்சிகரிக்
கற்பகத்தின் பொற்பதமே காப்பு.

**அவையடக்கம்**

தேசுமலி தெய்வத் திருக்குறள்க ளோடுமுரு
கேசனெனு நாமங் கெழுமுதலி — னாசகன்றோர்
குற்றமது நோக்காரென் கொள்கையினா னீதிசில
சொற்றனனோர் நூலாத் தொகுத்து.

### அறத்துப்பால்

**கடவுள் வாழ்த்து**

தேவரையுஞ் சூரனையுந் தேற்றுருவாற் றேர்ந்தனநீ
மூவரிறை யென்ன முருகேசா — வோவில்
அகர முதல வெழுத்தெல்லா மாதி
பகவன் முதற்றே யுலகு. 1

**வான் சிறப்பு**

அன்பரிடர் கண்டரன்பா லப்பருஞ்சம் பந்தரொடு
முன்பொருகா சேற்றார் முருகேசா — வின்புதருந்
தானந் தவமிரண்டுந் தங்கா வியனுலகம்
வானம் வழங்கா தெனின். 2

### நீத்தார் பெருமை

ஈண்டுதச தோற்றமா லேய்ந்தான் பிருகுரையான்
மூண்டரற்பூ சித்தும் முருகேசா — பூண்ட
நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து
மறைமொழி காட்டி விடும். 3

### அறன் வலியுறுத்தல்

அற்றமின்றிச் சாமந்தன் கோனிதியா லண்ணல்பணி
முற்றுவித்தின் புற்றான் முருகேசா — மற்றதனால்
ஒல்லும் வகையா னறவினை யோவாதே
செல்லும்வா யெல்லாஞ் செயல். 4

### இல்வாழ்க்கை

மெய்த்தமிழ்வே தத்துலகுய் வித்துயர்ந்தார் வள்ளுவனார்
முத்தவில்வாழ் வுற்று முருகேசா — வுத்தமமாம்
ஆற்றி னொழுக்கி யறனிழுக்கா வில்வாழ்க்கை
நோற்பாரி னோன்மை யுடைத்து. 5

### வாழ்க்கைத் துணைநலம்

கோதில் சுதரிசனன் சொற்றிறம்பாக் கோதையொடு
மூதஞர்தீர்ந் துய்ந்தான் முருகேசா — பேதமிலாப்
பெண்ணிற் பெருந்தக்க யாவுள கற்பென்னுந்
திண்மையுண் டாகப் பெறின். 6

### புதல்வரைப் பெறுதல்

துற்றுநர குற்றோர் சசிவன்னன் சூழ்நெறியான்
முற்றினர்சொர்க் காதி முருகேசா — வுற்றுப்
பெறுமவற்றுள் யாமறிவ தில்லை யறிவறிந்த
மக்கட்பே றல்ல பிற. 7

### அன்புடைமை

கின்னரரோ டேமேதா கேதரைமீட் டார்வசவர்
முன்னரன்பாற் சென்று முருகேசா — மன்னுலகில்
அன்போ டியைந்த வழக்கென்ப வாருயிர்க்
கென்போ டியைந்த தொடர்பு. 8



### விருந்தோம்பல்

துன்னுவனத் துந்தருமன் சூழ்முனிவர்ப் பேணுதலான்
முன்னுவளம் பெற்றான் முருகேசா — வுன்னின்
வருவிருந்து வைகலு மோம்புவான் வாழ்க்கை
பருவந்து பாழ்படுத லின்று. 9

### இனியவை கூறல்

அண்டமுதல் வற்பழித்தே யைந்தலையு ளொன்றிழந்தான்
முண்டகன்செம் மாந்து முருகேசா — மண்டிப்
பணிவுடைய னின்சொல னாத லொருவற்
கணியல்ல மற்றுப் பிற. 10

### செய்ந்நன்றியறிதல்

மெய்த்தரும தெய்வநன்றி வீட்டிமதி மம்மருற்றான்
முத்தவற்ச நாபன் முருகேசா — வித்தரையில்
எந்நன்றி கொன்றார்க்கு முய்வுண்டா முய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு. 11

### நடுவுநிலைமை

நீதியிற்பாஞ் சாலிகடா விற்குவிடை நேர்விகன்னன்
மூதவையிற் சொற்றான் முருகேசா — காதலினால்
சொற்கோட்ட மில்லது செப்ப மொருதலையா
வுட்கோட்ட மின்மை பெறின். 12

### அடக்கமுடைமை

ஓங்குதருக் கம்வாத வூரருழைச் செய்தபுத்தர்
மூங்கையராய்ச் சோர்ந்தார் முருகேசா — வாங்கதனால்
யாகாவா ராயினு நாகாக்க காவாக்காற்
சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு. 13

### ஒழுக்கமுடைமை

வேதநெறி பேணாத் துராசாரன் மிக்கயர்ந்தான்
மோதலகை பற்ற முருகேசா — தீதில்
ஒழுக்கத்தி னொல்கா ருரவோ ரிழுக்கத்தி
னேதம் படுபாக் கறிந்து. 14

### பிறனில் விழையாமை

பார்க்கவனார் பன்னியத்தம் பற்றியலி யாயினன்முன்
மூர்க்கனாந் தண்டன் முருகேசா — வேர்க்கும்
பகைபாவ மச்சம் பழியென நான்கு
மிகவாவா மில்லிறப்பான் கண். 15

### பொறையுடைமை

மன்னவனாற் றன்னையொறுப் பித்துமரு வாவசுதன்
முன்னவனைக் காத்தான் முருகேசா — வுன்னும்
நிறையுடைமை நீங்காமை வேண்டிற் பொறையுடைமை
போற்றி யொழுகப் படும். 16

### அழுக்காறாமை

ஆர்த்தபொறா மைச்சிசுபா லன்கண்ண னாழியினான்
மூர்த்தமறுப் புண்டான் முருகேசா — கூர்த்த
அழுக்காற்றி னல்லவை செய்யா ரிழுக்காற்றி
னேதம் படுபாக் கறிந்து. 17

### வெஃகாமை

மாண்டுநக ரோடளறு வாய்ந்தான் பராந்தகக்கோன்
மூண்டரன்பூ வெஃகி முருகேசா — வேண்டும்
நடுவின்றி நன்பொருள் வெஃகிற் குடிபொன்றிக்
குற்றமு மாங்கே தரும். 18

### புறங் கூறாமை

துஞ்சுமனத் தோடுவணஞ் சூரன்முத லோர்த்தூற்றி
முஞ்சலுற்ற தந்தோ முருகேசா — விஞ்சலுறக்
கண்ணின்று கண்ணறச் சொல்லினுஞ் சொல்லற்க
முன்னின்று பின்னோக்காச் சொல். 19

### பயனில சொல்லாமை

கற்றும் பயனிலசொல் கன்னனுரைத் தெஞ்ஞான்று
முற்றுபழி பூண்டான் முருகேசா — வுற்றுணரிற்
பல்லார் முனியப் பயனில சொல்லுவா
னெல்லாரு மெள்ளப் படும். 20



### தீவினையச்சம்

பாவ மெனாதரன்செய் பற்றலின்வேந் தோடயர்ந்தார்
மூவர் மறையோர் முருகேசா — மேவ
எனைப்பகை யுற்றாரு முய்வர் வினைப்பகை
வீயாது பின்சென் றடும். 21

### ஒப்புரவறிதல்

தொண்டருக்கேற் றுந்தரும சீலரமு துத்தொகுத்தார்
முண்டகன்மால் போற்று முருகேசா — மிண்டும்
இடனில் பருவத்து மொப்புரவிற் கொல்கார்
கடனறி காட்சி யவர். 22

### ஈகை

பொன்னகர்க்கோ னேற்பத் ததீசி புறவெலும்பை
முன்னலின்றித் தந்தான் முருகேசா — மன்னி
இலனென்னு மெவ்வ முரையாமை யீதல்
குலனுடையான் கண்ணே யுள. 23

### புகழ்

எத்தனையோ வாசவர்நா ளின்பமிந்த்ரத் துய்ம்மனுற்றே
மொய்த்தபுகழ் பூண்டான் முருகேசா — வுய்த்துணரின்
ஒன்றா வுலகத் துயர்ந்த புகழல்லாற்
பொன்றாது நிற்பதொன் றில். 24

### அருளுடைமை

வாழ்கணங்க ளாக்கினன்ச தானந்தன் வன்னரகின்
மூழ்குகொடி யோரை முருகேசா — தாழ்கிலா
நல்லாற்றா னாடி யருளாள்க பல்லாற்றாற்
றேரினு மஃதே துணை. 25

### புலான் மறுத்தல்

காமுறுமூன் றுய்த்தலின்மா யீகனுமார்க் கண்டனான்
மோழலுருப் பெற்றான் முருகேசா — வீழும்
படைகொண்டார் நெஞ்சம்போ னன்றூக்கா தொன்ற
னுடல்சுவை யுண்டார் மனம். 26

### தவம்

பற்றிலனந் தன்புற் பதத்தனொடா னந்தநட
முற்றவத்தாற் கண்டான் முருகேசா — வற்றமற
வேண்டிய வேண்டியாங் கெய்தலாற் செய்தவ
மீண்டு முயலப் படும். 27

### கூடாவொழுக்கம்

சந்நியா சம்புனைந்தே சானகியைத் தான்கவர்ந்தான்
முன்னிலங்கை வேந்தன் முருகேசா — துன்னும்
தவமறைந் தல்லவை செய்தல் புதன்மறைந்து
வேட்டுவன் புட்சிமிழ்த் தற்று. 28

### கள்ளாமை

நாகவசுக் கள்வசிட்ட னற்சுரபி யைப்பற்று
மோகமல்கிக் கெட்டார் முருகேசா — போகுங்
களவின்கட் கன்றிய காதல் விளைவின்கண்
வீயா விழுமந் தரும். 29

### வாய்மை

மாழ்கித் தருமனொரு பொய்யுரைத்தே வன்றுயருண்
மூழ்கிமிகச் சோர்ந்தான் முருகேசா — தாழ்கலின்றிப்
பொய்யாமை பொய்யாமை யாற்றி னறம்பிற
செய்யாமை செய்யாமை நன்று. 30

### வெகுளாமை

சித்தரா மன்வெகுளி மூண்டிழந்தான் றீக்கண்ணை
முத்தனல்ல மன்பான் முருகேசா — நித்த
மறத்தல் வெகுளியை யார்மாட்டுந் தீய
பிறத்த லதனான் வரும். 31

### இன்னா செய்யாமை

தன்னைவதை முத்திநா தன்றனையு மெய்ப்பொருளார்
முன்னைநனி காத்தார் முருகேசா — மன்னுலகில்
இன்னாசெய் தாரை யொறுத்த லவர்நாண
நன்னயஞ் செய்து விடல். 32



### கொல்லாமை

தத்திநடந் தெவ்வுயிருந் தாங்குதயை யாற்பரதர்
முத்தரின்மேம் பட்டார் முருகேசா — மெத்து
நிலையஞ்சி நீத்தாரு ளெல்லாங் கொலையஞ்சிக்
கொல்லாமை சூழ்வான் றலை. 33

### நிலையாமை

தக்கன்மதர்த் தெச்சமொன்று தான்செய்தயச் சென்னிபெற்றான்
முக்கணனை யெள்ளி முருகேசா — வுக்கமின்போல்
நில்லாத வற்றை நிலையின வென்றுணரும்
புல்லறி வாண்மை கடை. 34

### துறவு

மேக்குவணை யின்பும் வெறுத்துச் சிவிமகவான்
மோக்கநிலை சார்ந்தான் முருகேசா — வூக்கித்
தலைப்பட்டார் தீரத் துறந்தார் மயங்கி
வலைப்பட்டார் மற்றை யவர். 35

### மெய்யுணர்தல்

செம்மைப் பொருளென்னத் தேர்ந்துநினைக் கும்பமுனி
மும்மலமற் றுய்ந்தான் முருகேசா — விம்மைதனிற்
கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர்
மற்றீண்டு வாரா நெறி. 36

### அவாவறுத்தல்

பற்றறுத்து வாமதே வன்பிறவாப் பான்மைபெற்றான்
முற்றியரன் பூசை முருகேசா — கற்றுணர்ந்தோர்
வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை மற்றது
வேண்டாமை வேண்ட வரும். 37

### ஊழ்

விஞ்சுகங்கைத் தம்பநுனி மேவுபரிக் கித்தரவான்
முஞ்சினனாய்ந் தோர்முன் முருகேசா — வெஞ்சலிலா

ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினுந் தான்முந் துறும். 38

## பொருட் பால்

### இறைமாட்சி

உற்றபுற வும்புரப்பா னோங்குசிபி தன்னுடல
முற்றுமரிந் தீந்தான் முருகேசா — பற்றும்
முறைசெய்து காப்பாற்று மன்னவன் மக்கட்
கிறையென்று வைக்கப் படும். 39

### கல்வி

மன்னியின்பந் துய்த்தசங்க வாணர்நக்கீ ரற்பிரிவை
முன்னிமுன்னிச் சோர்ந்தார் முருகேசா — நன்னர்
உவப்பத் தலைக்கூடி யுள்ளப் பிரித
லனைத்தே புலவர் தொழில். 40

### கல்லாமை

ஈண்டிவச வேசர்முன்னோர்க் கீடழிந்தார் வீண்வாத
மூண்ட மறையோர் முருகேசா — வேண்டுவன
கல்லா வொருவன் றகைமை தலைப்பெய்து
சொல்லாடச் சோர்வு படும். 41

### கேள்வி

அத்தனையீ மப்பலியா லர்ச்சித்து வேந்துரையின்
முத்திபெற்றான் சண்டன் முருகேசா — நத்தி
எனைத்தானு நல்லவை கேட்க வனைத்தானு
மான்ற பெருமை தரும். 42

### அறிவுடைமை

தீதையுன்னி நீங்கினன்சு சீலன் புயபலன்பின்
மூதஞர்கோட் பட்டான் முருகேசா — வோதில்
அறிவுடையா ராவ தறிவா ரறிவிலா
ரஃதறி கல்லா தவர். 43



### குற்றங் கடிதல்

தெய்வநிதி யாதிகவர் தீமையின்ம னோசவன்கான்
மொய்வளந்தோற் றேய்ந்தான் முருகேசா — வுய்யச்
செயற்பால செய்யா திவறியான் செல்வ
முயற்பால தன்றிக் கெடும். 44

### பெரியாரைத் துணைக்கோடல்

நாரதனாற் சம்வரத நற்றவற்சேர்ந் தேமருத்து
மூரியின்மேம் பட்டான் முருகேசா — பாரதனில்
உற்றநோய் நீக்கி யுறாஅமை முற்காக்கும்
பெற்றியார்ப் பேணிக் கொளல். 45

### சிற்றினஞ் சேராமை

வாக்கரசர் சாவகரான் மாழ்கித் தமக்கையான்
மோக்கநிலை பெற்றார் முருகேசா — பார்க்குங்கால்
நல்லினத்தி னூங்குந் துணையில்லை தீயினத்தி
னல்லற் படுப்பதூஉ மில். 46

### தெரிந்து செயல்வகை

பாண்டவர்செல் வங்கவர்வான் பண்டுதுரி யோதனன்றான்
மூண்டிழிந்தான் மாய்ந்தும் முருகேசா — வேண்டுங்கால்
எள்ளாத வெண்ணிச் செயல்வேண்டுந் தம்மொடு
கொள்ளாத கொள்ளா துலகு. 47

### வலியறிதல்

வாரிசுதை வவ்வுமுவ ணத்தையெதிர் வானவர்கண்
மூரியிழந் தெய்த்தார் முருகேசா — தேரின்
உடைத்தம் வலியறியா ரூக்கத்தி னூக்கி
யிடைக்கண் முரிந்தார் பலர். 48

### காலமறிதல்

சிந்துபதி யைத்தந்தை யோடிறுத்தான் செவ்வியுற
முந்திவிச யன்றான் முருகேசா — நந்தலின்றி
எய்தற் கரிய தியைந்தக்கா லந்நிலையே
செய்தற் கரிய செயல். 49

### இடனறிதல்

சென்னியனீ கத்தைமோ திச்சிதைத்த தோர்கோழி
முன்னுறையூர்க் கானின் முருகேசா — மன்னுலகில்
அஞ்சாமை யல்லாற் றுணைவேண்டா வெஞ்சாமை
யெண்ணி யிடத்தாற் செயின். 50

### தெரிந்து தெளிதல்*

தீதெனுமி ராக்கதனைத் தேர்மித் திரசகன்றான்
மூதரக்க னானான் முருகேசா — வாதலினால்
தேரான் பிறனைத் தெளிந்தான் வழிமுறை
தீரா விடும்பை தரும். 51

### தெரிந்து வினையாடல்

காண்டலின்றிச் சச்சந்தன் கட்டியங்கா ரற்கரசை
மூண்டளித்து மாண்டான் முருகேசா — வேண்டி
எனைவகையாற் றேறியக் கண்ணும் வினைவகையான்
வேறாகு மாந்தர் பலர். 52

### சுற்றந் தழால்

எய்த்து மகத்திறந்துஞ் சூர னிளையோரான்
மொய்த்தவளம் பெற்றான் முருகேசா — மெய்த்த
விருப்பறாச் சுற்ற மியையி னருப்பறா
வாக்கம் பலவுந் தரும். 53

### பொச்சாவாமை

கோடியர்தன் போற்றோன்றக் குன்றிமதர்க் கும்பமுனி
மூடுவெண்ணோ யுற்றான் முருகேசா — நாடுங்கால்
முன்னுறக் காவா திழுக்கியான் றன்பிழை
பின்னூ றிரங்கி விடும். 54

### செங்கோன்மை

மைந்தனுய்ந்தான் வற்சமமைச் சோடுமநு நீதிகண்டோன்
முந்தைமுறை தன்னான் முருகேசா — வுந்தும்
இறைகாக்கும் வையக மெல்லா மவனை
முறைகாக்கு முட்டாச் செயின். 55



### கொடுங்கோன்மை

வேர்த்திடுக்கண் செய்து விளிந்தான் கருநாடன்
மூர்த்திபான் மேனாண் முருகேசா — கூர்த்துணரின்
மன்னர்க்கு மன்னுதல் செங்கோன்மை யஃதின்றேன்
மன்னாவாம் மன்னர்க் கொளி. 56

### வெருவந்த செய்யாமை

காத்தகபி லற்கிடும்பை செய்து கணனழிந்தான்
மூத்தோன் மழுவான் முருகேசா — வேத்தும்
இறைகடிய னென்றுரைக்கு மின்னாச்சொல் வேந்த
னுறைகடுகி யொல்லைக் கெடும். 57

### கண்ணோட்டம்

ஓவிலுழ வன்வேண்ட வுக்கிரனா ரிந்திரன்கொண்
மூவைவிடு வித்தார் முருகேசா — தாவலிலாக்
கண்ணோட்டத் துள்ள துலகிய லஃதிலா
ருண்மை நிலக்குப் பொறை. 58

### ஒற்றாடல்

பின்னைகரம் வீடியபின் பேதுற்றான் சூரனொற்றை
முன்னினிதா ளாமன் முருகேசா — வன்னதனால்
ஒற்றினா லொற்றிப் பொருடெரியா மன்னவன்
கொற்றங் கொளக்கிடந்த தில். 59

### ஊக்கமுடைமை

நாள்களொடு கோளியக்கு நற்பதவி யைத்துருவன்
முள்கருத்தாற் பெற்றான் முருகேசா — நீள்பெருக்கின்
வெள்ளத் தனைய மலர்நீட்ட மாந்தர்தம்
முள்ளத் தனைய துயர்வு. 60

### மடியின்மை

அம்புவிமுற் றும்புரந்தா னாண்மைரகு மாற்றலரை
மொய்ம்பதனால் வென்றே முருகேசா — விம்பர்
மடியிலா மன்னவ னெய்து மடியளந்தான்
றாஅய தெல்லா மொருங்கு. 61

### ஆள்வினை யுடைமை

ஆள்வினையான் மிக்கதவ மாற்றிச சுவேதமன்னன்
மூள்வினையற் றுய்ந்தான் முருகேசா — கோள்வினையாம்
ஊழையு முப்பக்கங் காண்ப ருலைவின்றித்
தாழா துஞற்று பவர். 62

### இடுக்கணழியாமை

செற்றுச் சுயோதனன்செய் தீங்கையின்பிற் றோர்தருமன்
முற்றுமின்பந் துய்த்தான் முருகேசா — பற்றிவரும்
இன்னாமை யின்ப மெனக்கொளி னாகுந்தன்
னொன்னார் விழையுஞ் சிறப்பு. 63

### அமைச்சு

சேக்கிழார் சென்னிக்குத் தொண்டர் சிறப்புணர்த்தி
மோக்கநெறி தந்தார் முருகேசா — வூக்கி
அறிகொன் றறியா னெனினு முறுதி
யுழையிருந்தான் கூறல் கடன். 64

### சொல்வன்மை

வாதவூ ராளிசெண்டால் வாங்கலின்னோர் வண்மையெனா
மோதமிறைக் கீந்தார் முருகேசா — தீதிலதாச்
சொல்லுக சொல்லைப் பிறிதோர்சொ லச்சொல்லை
வெல்லுஞ்சொ லின்மை யறிந்து. 65

### வினைத்தூய்மை

வேள்வியிற்கோ வூனுகர்ந்தும் வேடரிற்றாழ்ந் தேழ்மறையோர்
மூள்விதன முற்றார் முருகேசா — நீள்வின்
இடுக்கட் படினு மிளிவந்த செய்யார்
நடுக்கற்ற காட்சி யவர். 66

### வினைத்திட்பம்

சீவகன்சீ றாதிருந்தே தெவ்வையழித் தான்முடிவின்
மூவுலகும் போற்று முருகேசா — யாவும்
கடைக்கொட்கச் செய்தக்க தாண்மை யிடைக்கொட்கி
னெற்றா விழுமந் தரும். 67



### வினைசெயல்வகை

யாண்டுளனா ராயணனென் றேற்றிரணி யன்மகன்பான்
மூண்டுசின மாண்டான் முருகேசா — வேண்டின்
முடிவு மிடையூறு முற்றியாங் கெய்தும்
படுபயனும் பார்த்துச் செயல். 68

### தூது

சூரனெதிர் தக்கவுரை சொற்றிறுமாந் துற்றகன்றான்
மூரிமிகும் வாகு முருகேசா — வோரின்
விடுமாற்றம் வேந்தர்க் குரைப்பான் வடுமாற்றம்
வாய்சோரா வன்க ணவன். 69

### மன்னரைச் சேர்ந்தொழுகல்

மன்னனயி ராதுமெல்ல மல்குவித்தார் சைவநெறி
முன்னுவச வேசர் முருகேசா — வின்னதனால்
போற்றி னரியவை போற்றல் கடுத்தபின்
றேற்றுதல் யார்க்கு மரிது. 70

### குறிப்பறிதல்

இந்தனக்கே லாமரமென் றான்றருமன் வீமனெண்ண
முந்தவையிற் றோர்ந்தே·முருகேசா — மைந்தருள்ளும்
ஐயப் படாஅ தகத்த துணர்வானைத்
தெய்வத்தோ டொப்பக் கொளல். 71

### அவையறிதல்

சொற்றவிடைக் காடர்கவி தோற்றதுதென் னன்சபையின்
முற்றுசுவை யுற்றும் முருகேசா — வுற்றணுகா
அங்கணத்து ளுக்க வமிழ்தற்றாற் றங்கணத்த
ரல்லார்முற் கோட்டி கொளல். 72

### அவையஞ்சாமை

தாதையைவெல் வந்திமுனி தன்னையட்ட வக்கிரன்றான்
மூதுணர்வால் வென்றான் முருகேசா — கேதமிலா
ஆற்றி னளவறிந்து கற்க வவையஞ்சா
மாற்றங் கொடுத்தற் பொருட்டு. 73

### நாடு

எச்சிறப்பேய்ந் தென்னிலங்கை வீந்ததர சீனத்தான்
முச்சகமு மேத்து முருகேசா — மெச்சவே
ஆங்கமை வெய்தியக் கண்ணும் பயமின்றே
வேந்தமை வில்லாத நாடு. 74

### அரண்

நம்மரனார் செய்புன் னகையில்வெந்த வேயசுரர்
மும்மதிலு மேனாண் முருகேசா — வம்ம
எனைமாட்சித் தாகியக் கண்ணும் வினைமாட்சி
யில்லார்க ணில்ல தரண். 75

### பொருள் செயல்வகை

மன்னுகிழி பெற்றகுல பூடணனான் மல்கினவே
முன்னுமற மெல்லா முருகேசா — துன்னியதோர்
குன்றேறி யானைப்போர் கண்டற்றாற் றன்கைத்தொன்
றுண்டாகச் செய்வான் வினை. 76

### படைமாட்சி

பற்றுநிரை மீட்டெதிர்த்த பார்த்தனாற் புண்பட்டார்
முற்றினவர் யாரும் முருகேசா — சுற்றி
ஒலித்தக்கா 'லென்னா முவரி யெலிப்பகை
நாக முயிர்ப்பக் கெடும். 77

### படைச்செருக்கு

மாலுறுத்தி வீடுமன்பான் மாண்டசிவே தற்கயர்ந்தார்
மோலிபுனை மன்னர் முருகேசா — சாலப்
புரந்தார்கண் ணீர்மல்கச் சாகிற்பிற் சாக்கா
டிரந்துகோட் டக்க துடைத்து. 78

### நட்பு

மேவ விதூமனொடு விண்ணிழந்திம் மண்ணடைந்தார்
மூவரகல் வஞ்சி முருகேசா — தாவில்
அழிவி னவைநீக்கி யாறுய்த் தழிவின்க
ணல்ல லுழப்பதா நட்பு. 79



### நட்பாராய்தல்

வஞ்சகவா னந்தனட்பாற் சூரியசன் மாவாளா
முஞ்சுமிடர் பெற்றான் முருகேசா — நெஞ்சதனில்
ஆய்ந்தாய்ந்து கொள்ளாதான் கேண்மை கடைமுறை
தான்சாந் துயரந் தரும். 80

### பழைமை

நம்பனமர்க் கேன்றவா ணற்புரந்தான் றொன்மையுன்னி
மொய்ம்புதொலை யாமன் முருகேசா — வம்புவியில்
பேதைமை யொன்றோ பெருங்கிழமை யென்றுணர்க
நோதக்க நட்டார் செயின். 81

### தீநட்பு

இன்னலே பல்குநம்பா லென்று விபீடணன்றன்
முன்னவனை நீத்தான் முருகேசா — துன்னிப்
பருகுவார் போலினும் பண்பிலார் கேண்மை
பெருகலிற் குன்ற லினிது. 82

### கூடா நட்பு

நேசன்போற் காடுவெட்டி நேரியன்றென் னற்றமுவி
மோசமே செய்தான் முருகேசா — மாசின்
மனத்தி னமையா தவரை யெனைத்தொன்றுஞ்
சொல்லினாற் றேறற்பாற் றன்று. 83

### பேதைமை

வேதசன்மா பல்கலையின் மிக்குமுனி வர்ப்பழிப்பான்
மூதரக்க னானான் முருகேசா — காதலினால்
ஓதி யுணர்ந்தும் பிறர்க்குரைத்துந் தானடங்காப்
பேதையிற் பேதையா ரில். 84

### புல்லறிவாண்மை

ஓகையினால் வேதா வுரையையுமெள் ளிச்சுதன்மன்
மூகையனாய்ச் சோர்ந்தான் முருகேசா — வாகை
அருமறை சோரு மறிவிலான் செய்யும்
பெருமிறை தானே தனக்கு. 85

### இகல்

ஆதியையும் வெல்வான் சலந்தரன்சென் றாழியெஃக
மோதமுடி வுற்றான் முருகேசா — வோதில்
இகலின் மிகலினி தென்பவன் வாழ்க்கை
தவலுங் கெடலு நணித்து. 86

### பகைமாட்சி

நந்தியெதிர் செம்மாந்தே நாகாரி யெஞ்சலிலா
முந்தைவலி தோற்றான் முருகேசா — வுந்தும்
வலியார்க்கு மாறேற்ற லோம்புக வோம்பா
மெலியார்மேன் மேக பகை. 87

### பகைத்திறந்தெரிதல்

ஆர்த்தொரன்பர் புத்தநந்தி யைச்செகுத்தார் சம்பந்த
மூர்த்திதிரு வாக்கான் முருகேசா — சீர்த்திமிகு
வில்லே ருழவர் பகைகொளினுங் கொள்ளற்க
சொல்லே ருழவர் பகை. 88

### உட்பகை

சத்திமுத னூற்றுவர்மாய்ந் தார்விசுவா மித்திரனுண்
மொய்த்தபகை யாலே முருகேசா — வைத்த
அரம்பொருத பொன்போலத் தேயு முரம்பொரு
துட்பகை யுற்ற குடி. 89

### பெரியாரைப் பிழையாமை

தெற்றியுதங் கற்கமிழ்தீ யாதுவஞ்சித் திந்திரன்சீர்
முற்றுமிழந் தெய்த்தான் முருகேசா — வுற்றுணரின்
ஏந்திய கொள்கையார் சீறி னிடைமுரிந்து
வேந்தனும் வேந்து கெடும். 90

### பெண்வழிச் சேறல்

தாசரதி யுஞ்சீதை தன்வழிப்பட் டோர்மானான்
மோசம்போய்ச் சோர்ந்தான் முருகேசா — பேசுங்கால்
எண்சேர்ந்த நெஞ்சத் திடனுடையார்க் கெஞ்ஞான்றும்
பெண்சேர்ந்தாம் பேதைமை யில். 91



### வரைவின் மகளிர்

மாழ்கிவரை வின்மகவிற் வஞ்சனையிற் பாட்களன்றான்
மூழ்கியல்லாப் புற்றான் முருகேசா — வீழ்கும்
பொருட்பொருளார் புன்னலந் தோயா ரருட்பொரு
ளாயு மறிவி னவர். 92

### கள்ளுண்ணாமை

தூயபல பத்திரன்றான் சூதனைமாய்த் தல்லலுற்றான்
மூயமது மாலான் முருகேசா — வாயுங்கால்
துஞ்சினார் செத்தாரின் வேறல்ல ரெஞ்ஞான்றும்
நஞ்சுண்பார் கள்ளுண் பவர். 93

### சூது

வெஞ்சூதாற் றந்தை வெறுக்கக் குணநிதிதான்
முஞ்சினனூண் வவ்வி முருகேசா — துஞ்சும்
அகடாரா ரல்ல லுழப்பர்சூ தென்னு
முகடியான் மூடப்பட் டார். 94

### மருந்து

சீலமிலாப் பேய்ச்சமணர் சிந்தைநைந்தார் பாண்டியனோய்
மூலமறி யாது முருகேசா — வேலவே
நோய்நாடி நோய்முத னாடி யதுதணிக்கும்
வாய்நாடி வாய்ப்பச் செயல். 95

### குடிமை

நித்திரையோர்க் கொன்றவசு வத்தாம னீக்கமுற்றான்
முத்தமுனி வோரான் முருகேசா — மெய்த்த
குடிப்பிறந்தார் கண்விளங்குங் குற்றம் விசும்பின்
மதிக்கண் மறுப்போ லுயர்ந்து. 96

### மானம்

தேசுருவா னின்னிலைமை தேர்ந்துமா னத்திறந்தான்
மூசுபுகழ்ச் சூரன் முருகேசா — நேசமிகுஞ்
சீரினுஞ் சீரல்ல செய்யாரே சீரொடு
பேராண்மை வேண்டு பவர். 97

### பெருமை

கும்பமுனி யானகுடன் சர்ப்பவென்றே குண்டலியாய்
மொய்ம்பிழந்து வீழ்ந்தான் முருகேசா — வும்பரினும்
மேலிருந்தும் மேலல்லார் மேலல்லர் கீழிருந்துங்
கீழல்லார் கீழல் லவர். 98

### சான்றாண்மை

தொக்கிடும்பை கௌசிகனாற் சூழ்ந்துமரிச் சந்திரன்சொன்
முக்கியமாக் காத்தான் முருகேசா — வக்கணமே
ஊழி பெயரினுந் தாம்பெயரார் சான்றாண்மைக்
காழி யெனப்படு வார். 99

### பண்புடைமை

ஓவாச் சிவசமய மோங்கியதே நால்வரான்
மூவா முதலே முருகேசா — தாவாத
பண்புடையார்ப் பட்டுண் டுலக மதுவின்றேன்
மண்புக்கு மாய்வது மன். 100

### நன்றியில் செல்வம்

மாழ்கிநிதி நல்காநால் வாணிகர்மாண் டார்கடலுண்
மூழ்கிநிதி யோடு முருகேசா — வாழ்வுமிக
ஈட்ட மிவறி யிசைவேண்டா வாடவர்
தோற்ற நிலக்குப் பொறை. 101

### நாணுடைமை

அந்தணற்கீந் தில்லினைநா ணத்தனன்மூழ் கத்துணிந்தான்
முந்துபத்தி ராயு முருகேசா — நந்தலிலா
நாண்வேலி கொள்ளாது மன்னோ வியன்ஞாலம்
பேணலர் மேலா யவர். 102

### குடிசெயல்வகை

சத்துருவை மாய்த்தான் பராசரன்றன் சந்ததியை
முத்திபதத் துய்த்தே முருகேசா — மெத்தில்
கருமஞ் செயவொருவன் கைதூவே னென்னும்
பெருமையிற் பீடுடைய தில். 103



### உழவு

இன்னலொற்கத் தும்முழவை யேற்றலினீ சற்கமுது
முன்னமைத்தார் மாறர் முருகேசா — வுன்னில்
இரவா ரிரப்பார்க்கொன் றீவர் கரவாது
கைசெய்தூண் மாலை யவர். 104

### நல்குரவு

ஆலவா யண்ணறொழும் பைத்தருமி நீங்கவொற்க
மூலமாத் தேர்ந்தான் முருகேசா — ஞாலமிசை
இன்மை யெனவொரு பாவி மறுமையு
மிம்மையு மின்றி வரும். 105

### இரவு

ஒக்கலைவீட் டிக்களத்தை யோகையினி யற்பகையார்
முக்கணனுக் கீந்தார் முருகேசா — மிக்குவரும்
இன்ப மொருவற் கிரத்த லிரந்தவை
துன்ப முறாஅ வரின். 106

### இரவச்சம்

துன்பகல்வோ மென்று துருபதன்பா லேற்றயர்ந்தான்
முன்பு துரோணன் முருகேசா — வின்பமிக
இன்மை யிடும்பை யிரந்துதீர் வாமென்னும்
வன்மையின் வன்பாட்ட தில். 107

### கயமை

வஞ்சநலன் வாமதே வற்குதவான் வாசியைச்சேய்
முஞ்சியபின் னீந்தான் முருகேசா — வெஞ்சலின்றிச்
சொல்லப் பயன்படுவர் சான்றோர் கரும்புபோற்
கொல்லப் பயன்படுங் கீழ். 108

## காமத்துப் பால்

### தகையணங்குறுத்தல்

ஓகையினு ருக்குமணி யொண்மைகண்டு சூர்கொலெனா
மோகமிக்கான் கண்ணன் முருகேசா — வாகின்

அணங்குகொ லாய்மயில் கொல்லோ கனங்குழை
மாதர்கொன் மாலுமென் னெஞ்சு. 109

### குறிப்பறிதல்

உற்றபிணி யும்மருந்துங் காசிபனோர்ந் தான்மாயை
முற்றுழிக்கண் ணோக்கின் முருகேசா — பற்றும்
இருநோக் கிவளுண்க ணுள்ள தொருநோக்கு
நோய்நோக்கொன் றந்நோய் மருந்து. 110

### புணர்ச்சி மகிழ்தல்

பூரிளமை யேற்றுவெறாப் போகநனி துய்த்துவந்தான்
மூரி யயாதி முருகேசா — வோரின்
அறிதோ றறியாமை கண்டற்றாற் காமஞ்
செறிதோறுஞ் சேயிழை மாட்டு. 111

### நலம்புனைந்துரைத்தல்

சந்தமிகு வாலைநலத் தைத்தவவா லன்வியந்து
முந்திமண நேர்ந்தான் முருகேசா — கந்த
முறிமேனி முத்த முறுவல் வெறிநாற்றம்
வேலுண்கண் வேய்த்தோ ளவட்கு. 112

### காதற் சிறப்புரைத்தல்

தேர்ச்சியய னிந்துமதிச் சேர்ந்துழிவாழ்ந் தேமடிவின்
மூர்ச்சித்து மாய்ந்தான் முருகேசா — நேர்ச்சிமிக
வாழ்த லுயிர்க்கன்ன ளாயிழை சாத
லதற்கன்ன ணீங்கு மிடத்து. 113

### நாணுத் துறவுரைத்தல்

கோளொடுநா ணீத்தகலி கைக்கயர்ந்தான் கோமகவான்
மூளுறுகா மத்தான் முருகேசா — வாளுறுமக்
காமக் கடும்புன லுய்க்குமே நாணொடு
நல்லாண்மை யென்னும் புணை. 114



### அலரறிவுறுத்தல்

மேயருக்கு மாங்கதனை வெஃகியொரு நாண்முகுந்தை
மூயபழி பூண்டான் முருகேசா — நேயமிகக்
கண்டது மன்னு மொருநா ளலர்மன்னுந்
திங்களைப் பாம்புகொண் டற்று. 115

### பிரிவாற்றாமை

அற்றதுணி யோடுதம யந்திபுன லார்ந்துநளன்
முற்றுழியுஞ் சோர்ந்தாண் முருகேசா — பற்றி
அளித்தஞ்ச லென்றவர் நீப்பிற் றெளித்தசொற்
றேறியார்க் குண்டோ தவறு. 116

### படர்மெலிந்திரங்கல்

ஆகமெலிந் தாள்சீதை வான்மீகி யாதரித்து
மோகமொடு நாணான் முருகேசா — வேகமிகும்
காமமு நாணு முயிர்காவாத் தூங்குமென்
னோனா வுடம்பி னகத்து. 117

### கண்விதுப்பழிதல்

ஒல்லையிற்கண் ணன்வருங்கொ லென்றயர்ந்தா ருத்தவன்பால்
முல்லைமட மாதர் முருகேசா — புல்லலுறப்
பேணாது பெட்டா ருளர்மன்னோ மற்றவர்க்
காணா தமைவில கண். 118

### பசப்புறு பருவரல்

சீவகனீங் கப்பசந்து சேடிழந்தெய்த் தாள்பதுமை
மூவலிலா தோங்கு முருகேசா — வோவலிலாச்
சாயலு நாணு மவர்கொண்டார் கைம்மாறா
நோயும் பசலையுந் தந்து. 119

### தனிப்படர்மிகுதி

பற்றி னுருப்பசியைப் பார்த்தன் வெஃகான் சிற்சபையின்
முற்றம்ப மேவு முருகேசா — வுற்ற
ஒருதலையா னின்னாது காமங்காப் போல
விருதலை யானு மினிது. 120

### நினைந்தவர் புலம்பல்

சித்தமுள வல்லமன்சிந் திப்பனோ வென்றுலைந்தாண்
முத்தநகை மாயை முருகேசா — மத்தமுறும்
யாமு முளேங்கொ லவர்நெஞ்சத் தெந்நெஞ்சத்
தோஒ வுளரே யவர். 121

### கனவுநிலையுரைத்தல்

காதலனை நாளுங் கனவணைந்தே சாரதைதான்
மூதுவகை யுற்றாண் முருகேசா — தீதின்
நனவென வொன்றில்லை யாயிற் கனவினாற்
காதலர் நீங்கலர் மன். 122

### பொழுதுகண்டிரங்கல்

அந்திப் பொழுதின்மணிச் சூடனினை வாலயர்ந்தாண்
முந்துமணி வல்லி முருகேசா — சிந்தைசெயிற்
காதல ரில்வழி மாலை கொலைக்களத்
தேதிலர் போல வரும். 123

### உறுப்பு நலனழிதல்

துன்பமுற்றார் தாருவனத் தோகையரெம் மானைவெஃகி
முன்புவளை தோற்றே முருகேசா — வன்பிற்
பண்ணைநீங்கிப் பைந்தொடி சோருந் துணைநீங்கித்
தொல்கவின் வாடிய தோள். 124

### நெஞ்சொடு கிளத்தல்

மெய்த்ததவ வீடுமனை வேண்டியலைந் தேவெறுத் தாண்
மொய்த்தகுழ லம்பை முருகேசா — வுய்த்துணரிற்
காத லவரில ராகநீ நோவது
பேதைமை வாழியென் னெஞ்சு. 125

### நிறையழிதல்

போகமுவர்த் தேதவன்விண் போதல்கண்டுங் கௌசிகிபின்
மோகமிகச் சென்றாண் முருகேசா — வாகையினாற்
சென்றார்பின் செல்லாப் பெருந்தகைமை காமநோ
யுற்றா ரறிவதொன் றன்று. 126



### அவர்வயின்விதும்பல்

காதலனெந் நாள்வருங்கொ லென்றுதத்தை கவ்வைமிக்காண்
மூதுணர்வாற் றேர்ந்தும் முருகேசா — தீதின்
ஒருநா ளெழுநாள்போற் செல்லுஞ்சேட் சென்றார்
வருநாள்வைத் தேங்கு பவர்க்கு. 127

### குறிப்பறிவுறுத்தல்

தந்தைக் குணர்த்தித் தவன்குறிப்பைக் காந்திமதி
முந்தியுடன் சென்றாண் முருகேசா — வந்தில்
பெரிதாற்றிப் பெட்பக் கலத்த லரிதாற்றி
யன்பின்மை சூழ்வ துடைத்து. 128

### புணர்ச்சிவிதும்பல்

செற்ற மிகுபரவை வன்றொண்டர் சென்றவழி
முற்றவறைக் காணாண் முருகேசா — வுற்றவரைக்
காணுங்காற் காணேன் றவறாய காணாக்காற்
காணேன் றவறல் லவை. 129

### நெஞ்சொடு புலத்தல்

மேவாக் கணவனைமுன் வெஃகி நளாயனிதான்
மூவாத்துன் புற்றாண் முருகேசா — வோவாமற்
கெட்டார்க்கு நட்டாரில் லென்பதோ நெஞ்சேநீ
பெட்டாங் கவர்பின் செலல். 130

### புலவி

நீளையின்பாற் செல்கெனமா னெஞ்சயர மாவூடி
மூளஞர்கோட் பட்டாண் முருகேசா — கோளகலும்
உப்பமைந் தற்றாற் புலவி யதுசிறிது
மிக்கற்றா னீள விடல். 131

### புலவிநுணுக்கம்

இன்பி னெழுமையுநீங் கேனென்னக் காந்திமதி
முன்பு புலந்தாண் முருகேசா — வன்பதனால்
இம்மைப் பிறப்பிற் பிரியல மென்றேனாக்
கண்ணிறை நீர்கொண் டனள். 132

**ஊடலுவகை**

காதல்குண மாலைபிணக் கைத்தவிர்த்துச் சீவகன்றான்
மோதமிக்கான் கூடி முருகேசா — வாதலினால்
ஊடுதல் காமத்திற் கின்ப மதற்கின்பங்
கூடி முயங்கப் பெறின். 133

**முருகேசர் முதுநெறி வெண்பா முற்றிற்று**



உ

# அப்பன் பழனி அப்பனடா

## கண்ணதாசன்

அப்பன் பழனி அப்பனடா - அவன்
அரும் பெரும் திரவியக் கப்பலடா
அற்புதம் காட்டும் தலைவனடா - அவன்
அன்புக்குப் பணிசெயும் இறைவனடா!

காண்போம் நாம் அவன் படைவீடு - தம்பி
கால்வலி மறந்து நடைபோடு
கண்டால் நமக்கிலை ஒருகேடு - நீ
காவடி எடுத்து நடமாடு!

வணிகனின் குலத்துக்குத் தாயாவான் - அவர்
வளைவினில் ஓடிடும் சேயாவான்
கவிஞர்கள் பாட்டுக்கு வாயாவான் - எங்கு
கடும்பகை கண்டாலும் தீயாவான்!

ஆண்டிக்குப் பாரடி சாத்துபடி - நாம்
ஆடிடப் பழனியில் தீர்த்தமடி
வேண்டிடும் வரம்தரும் தீபமடி - இதில்
வேதனையே இலை லாபமடி!

பழனிக்குப் போவதில் சுகம் அதிகம் - அவன்
பார்வையில் நிற்பதில் குணமதிகம்
விழுந்து வணங்கினால் வயததிகம் - அந்த
வீரன் தருவான் பணமதிகம்!

செட்டிமக்கள் இந்தப் பூமியிலே - பல
தெய்வத்துக் களித்தது கோடியம்மா
கட்டிய கோயில்கள் ஆயிரமே - அதில்
கந்தனின் கோயில்கள் யாவையுமே!

முருகப்ப னில்லாத ஊருமில்லை - ஒரு
முத்தைய னில்லாத வீடுமில்லை
பழனியப்ப னின்றி வம்சமில்லை - எங்கள்
பரம்பரைக் கவனின்றி அம்சமில்லை!

கால்நடைப் பயணத்தில் ஓடிவந்தோம் - உன்
கருணைக்குத் தானுனைத் தேடிவந்தோம்
வேலெமைக் காக்கட்டும் வேலவனே - உன்
விழியெமைக் காக்கட்டும் நாயகனே!

**அப்பன் பழனி அப்பனடா முற்றிற்று**



உ

# கந்தனே என் சிந்தனை

## க. வீரகத்தி

**இராகம்:** நாட்டை **தாளம்:** ஆதி

**பல்லவி**

கந்தனே என் சிந்தனை!—நல்லைக்
கந்தனே என் வந்தனை!

**அனுபல்லவி**

அல்லோல கல்லோலம் ஆகிடும் போதும்
ஆனந்த பரவசம் அலைமோதும் போதும் (கந்)

**சரணம்**

அமுதக் கலசத்தை அருள்ஒழுகுந் தவக்கனியை
ஆனந்தப் பெருந்தேனை அணையாத மணிவிளக்கை
நதியின் பெருக்கான நான்மறையின் அருட்பிழிவை
நல்லூரிற் கண்டு கொண்டோம் நமக்கேது குறைநெஞ்சே!
(கந்)

1

## குமரா ஒருதரம் வாராயோ?

**இராகம்:** காம்போதி **தாளம்:** ஆதி

**பல்லவி**

குமரா ஒருதரம் வாராயோ—சிவக்
குழந்தாய் ஒருமுத்தம் தாராயோ?

### அனுபல்லவி

அமரா முருகா அழகா குகனே
அம்பிகை பெற்ற ஆசைக் கனியே (குமரா)

### சரணம்

நல்லைக் கோபுர உச்சியிலே—எந்
நாளுந் தவமும் பொற்சிலையே—தினைக்
கொல்லைக் குறத்தியின் கள்ளங்களில்—நிதம்
கொஞ்சும் செந்தமிழ்ப் பாலகனே! (குமரா)

2

## இவனோ சொல்லடி முருகன்

**இராகம்:** காம்போதி **தாளம்:** ஆதி

### பல்லவி

இவனோ சொல்லடி முருகன்—எனை
ஏய்த்து வருந்தமிழ் விரகன் (இவனோ)

### அனுபல்லவி

நல்லூரில் வந்தெனைக் கண்டு
நல்லதைக் கேளென்று சொன்னான் (இவனோ)

### சரணம்

மஞ்சத்தி லேகொஞ்சும் விழிகள்—நல்லை
மாமயில் வேலவன் விழிகள்—என்
நெஞ்சத்தி லோர்கணம் பாய்ந்தால்—ஐயா
நிமிர்ந்திடு மேயுளக் கோணல்! (இவனோ)

எத்தனை நாளெனை ஏய்ப்பான்—என்
காதலை இப்படித் தேய்ப்பான்—தினம்
பத்திமை செய்திடும் என்னைக்—கடைக்கண்
பாரா திருந்திடல் பாவம்!
— முருகா உனக்குப்
பாவம்—பெரும்பாவம்!
(இவனோ)

3



## தேடிக் கண்டு கொண்டேன்!

**இராகம்:** தோடி **தாளம்:** ஆதி

### பல்லவி

தேடிக் கண்டு கொண்டேன்—நல்லூர்த்
தேவாதி தேவனத் தீன தயாளனை என்னுள்ளே(தேடி)

### அனுபல்லவி

சோடி மயில்களுடன் தோகை மயிலில்வரும்
சுந்தர வேலனைச் செந்தமிழ்ப் பாலனை (தேடி)

### சரணம்

முருகா! உன்னருட் சோதியில் என்றும்நான்
மூழ்கிடல் வேண்டும்—ஆர
முழுகிடல் வேண்டும்!

கருகா வினைகளெலாங் கருகிக் கருகிச்
சருகாகிட வேண்டும்—முத்திக்(கு)
எருவாகிட வேண்டும்!

குமரா வுன்னருட் சன்னிதி என்றும்நான்
குழைந்திட வேண்டும்—உன்னருளை
அளைந்திட வேண்டும்!

குமரா குமராவெனக் கூவிக் கூவியுள்ளம்
உருகிடல் வேண்டும்—உன்பாசம்
பெருகிடல் வேண்டும்!

அழகா வுன்னெழிற் கோலத்தை யள்ளியள்ளி
அருந்திடல் வேண்டும்—என்ஞானம்
திருந்திடல் வேண்டும்!
(தேடி)

4

## வாரி வழங்கிடையா!

**இராகம்:** மோகனம் **தாளம்:** ஆதி

### பல்லவி

வாரி வழங்கிடையா—எல்லோர்க்கும் (வாரி)

**அனுபல்லவி**

ஆராத இன்பத் திருவினை அன்புடன் (வாரி)

**சரணம்**

ஆவலோ டோடிவந் தையனே உன்னிழல்
அழுதழு(து) ஆனந்தக் கண்ணீர் சிந்திப்
பேயெனப் பித்தெனப் பரவச மாகியே
பிச்சை வேண்டுகின்றார் (அருட்)பிச்சை
வேண்டுகின்றார் (வாரி)

கண்கண்ட தெய்வம் காத்திடும் நமையெனக்
கண்ணீர் சிந்துகின்றார் உளம் வெம்புகின்றார்
புண்கொண்ட வாழ்வு பொடிப்பொடி யாகிட
புண்ணிய னேயருள் தந்திடுவாய் (ஆட்)
கொண்டிடுவாய்! (வாரி)
5

## கைலாச வாகனம் காணீர்!

**இராகம்:** கிஸ்தோளம் **தாளம்:** ஆதி

பல்லவி

கைலாச வாகனம் காணீர்—நல்லைக்
கந்தன் பவனிவரும் (கைலா)

**அனுபல்லவி**

கைலாசமே இது கைலாயமே
மயில் வேலவன் மலர்தாங்கிடும்—பாத
மலர்தாங்கிடும் (கைலா)

**சரணம்**

கோடானு கோடிமக்கள்
கும்பிடும் நல்லைக் கந்தன்— மனம்
நம்பிடும் நல்லைக் கந்தன்

சோடான வள்ளியோடு
சுந்தரி யானை யோடு—இன்பச்
சுற்றுலாப் பவனி வரும் (கைலா)



கண்ணா யிரம்வேண்டும் ஆஹா
கந்தன் திருவருள் மாட்சி!
கண்ணடங் காத்திருக் காட்சி!

விண்ணாணஞ் செய்நல்லைக் கந்தன்
வேண்டிய தந்திட நல்லை—திரு
வீதியில் ஓலக்கஞ் செய்யும் (கைலா)
6

## அருளுக்கேக்கம்!

**பல்லவி**

கந்தா கடைக்கணிப்பாய்—நல்லைக்
கந்தா கடைக்கணிப்பாய்!

**அனுபல்லவி**

அல்லும் பகலும் ஐயா உன்றன்
அருளுக் கேங்கி அலைகின் றேனே! (கந்)

**சரணம்**

கல்வி க:சு காதல் நெஞ்சம்—செய்யும்
காரி யத்தில் வெற்றி வாகை—மிக
நல்ல நல்ல மனித ரோடு—பண்பு
நாளும் ஓங்கும் பிரிய நட்பு! (கந்)

பாவங் கண்டு பதைக்கும் தன்மை—இந்தப்
பாரை யாளும் படிப்பு வன்மை—பசி
தாகம் மிக்க ஏழை கட்கு—நிதம்
தானஞ் செய்யும் தகுதி நன்மை. (கந்)
7

## நல்லூர் என் தாயகம்!

**பல்லவி**

நல்லூர் முருகன் கோயிலே—என்
நல்வாழ் வுக்கொரு தாயகம்! (நல்)

**அனுபல்லவி**

தொல்லைப் பிறவி அல்லல் களைந்து
தூய தமிழ்ப்புகழ் நாதம் அளித்திடும் (நல்)

**சரணம்**

கந்தா நல்லைக் கந்தா குமரா
கலியுக வரதா முருகா என்றால்
சிந்தா குலமோ சிறிதும் இல்லை
சீருடன் பூசனைச் செல்வமும் உண்டு! (நல்)

சரவண பவஎனில் சாவது இல்லை
சரவண பவஎனில் சரித்திரம் உண்டு
சரவண பவஎனில் சஞ்சலம் இல்லை
சரவண பவஎனில் சாதனை உண்டு! (நல்)

8

## கோட்டுப் பூவள்ளி

**இராகம்: சண்முகப்பிரியா** **தாளம்: ஆதி**

**பல்லவி**

வேட்டுவ ரில்லாத நேரத்திலே—வள்ளி
வீட்டுக்கு நீசென்ற காரணமென்? (வேட்டுவ)

**அனுபல்லவி**

கோட்டுப்பூ வள்ளியைக் கொள்ளைகொண்ட செய்தி
கும்பிடுந் தெய்வத்திற் கேற்புடைத்தோ?—நாம்
கும்பிடுந் தெய்வத்திற் கேற்புடைத்தோ?(வேட்டுவ)

**சரணம்**

முற்றத்து மல்லிகை மொட்டுச் சிரித்திடில்
முருகா வுனக்கென்ன மோகம் அதில்
சுற்றத் தவரிலா நேரத்தி லேகாதல்
சுகித்திட வள்ளியைக் கிள்ளு வதோ? (வேட்டுவ)

9

## மங்கள சோபனம்

**பல்லவி**

தேவர் சிறை மீட்டாய்—என்மீதும் உன்
தெய்வீகத்தைக் காட்டாய்! (தேவர்)



**அனுபல்லவி**

மதியோ விதியோ கெதியொன் றில்லேன்
மணவா மலராய் முருகா திரிவேன்! (தேவர்)

**சரணம்**

நல்லைக் கோயில் நடுநா யகமாய்
நளிரும் வேதக் கொடியிற் பூத்த
முல்லைச் சிரிப்பின் கொல்லைக் குறத்தி
முருகா மங்கள சோபனம் அருள்வாய்! (தேவர்)

10

**கந்தனே என் சிந்தனை முற்றிற்று**

உ

# குகனே போற்றி

## த. சண்முக சுந்தரம்

### மாவைக் கந்தா மலரடி போற்றி

மாவைக் கந்தா மலரடி போற்றி
தேவர் சேனா பதியே போற்றி
சிந்தா குலம்தீர் செவ்வேள் போற்றி
வந்தனை செய்வார் வாழ்வே போற்றி
நந்தா விளக்கா யொளிர்வாய் போற்றி

கொந்தார் கடம்பணி கோவே போற்றி
ஆரா வியற்கை யவாவினை நீக்கும்
பேரா வின்பப் பேறே போற்றி
ஏறு மயிலினி லேறி விளையாடும்
ஆறு முகத்தெம் மையா போற்றி

கோயிற் கடவை யிறங்கு துறையின்
நேயப் பெயர்பொறி நிர்மலா போற்றி
கொடித்திரு விழாவிற் கோலங் காட்டி
அடியரைக் காக்கு மருளுரு போற்றி
சங்காபி டேகத் தீர்த்த மாடித்

துங்க நடம்புரி தூயோய் போற்றி
வேட்டை விழாவில் வீரங் காட்டி
யாடல் புரியு மமலா போற்றி
கார்த்திகை விழாவில் தேனுடன் தினையும்
சேர்ந்தமா விளக்கிற் றிகழ்வோய் போற்றி



பூஞ்சப் பரத்திற் பொலிவுடன் றோன்றிக்
காஞ்சன மலர்ப்பதம் காட்டுவாய் போற்றி
தில்லையந் தணரின் றிருக்கரப் பூசையிற்
சொல்லு மந்திரப் பொருளே போற்றி
தேர்ப்பவ னிதனில் தேவி யருடனே

நேர்த்தத் துவத்தை விளக்கினை போற்றி
ஆட்கொளும் வண்ணம் வருவாய் போற்றி
பூட்கைநன் றாகப் பொலிவாய் போற்றி
பேரியற் சப்பர மீதினி லமர்ந்து
பாரியல் காட்டும் பரனே போற்றி

தேர்முட் டிதனிற் றேவரும் யாவரும்
சேர்ந்தே பரவச் சிறந்தனை போற்றி
தேரடி யிருப்பிற் சேவக னாகிச்
சீரடி யார்க்கருள் சேந்தா போற்றி
ஆரா வியற்கை யழகா போற்றி

பேரா வியற்கைப் பேறே போற்றி
மாம்பழ விழாவில் மாதவம் காட்டி
நாற்பழம் பொருளென நாட்டினை போற்றி
முத்துக் குமரா முதல்வா போற்றி
வித்தகம் விளக்கும் விமலா போற்றி

ஞானப் பழமாய் நின்றாய் போற்றி
ஊனப் பிறவி யொழிப்பாய் போற்றி
குன்றமர்ந் தாடுங் குமாரா போற்றி
வன்றிற லவுணரை வதைத்தோய் போற்றி
காவடி கரகம் ஆடுவோர் தமக்குச்

சேவடி யருளும் செல்வா போற்றி
நன்னடங் கொண்டு நகுல கிரிக்கடல்
மன்னியே தீர்த்தம் மகிழ்ந்தே யாடி
யடியவர்க் கருள்புரி யமலா போற்றி
மிடிதனைப் போக்கு மேலோய் போற்றி

கந்த சட்டியைக் கருத்துடன் நோற்பவர்
பந்த மறுத்தருள் கந்தா போற்றி
விளக்கீ டதனில் வியங்கொளி காட்டித்
துளக்கம் தீர்க்கும் சுடரே போற்றி
சங்கப் புலவனா யமர்ந்தாய் போற்றி

தங்கத் தமிழைத் தந்தாய் போற்றி
குன்றெறிந் தாண்ட குமரவேள் போற்றி
வென்றிவேல் ஞான விகிர்தா போற்றி
கதிதந் தருள்புரி கற்பகம் போற்றி
விதிதனைச் சிறையிடு விமலா போற்றி

மயில்மிசை யேறி மகிழ்வோய் போற்றி
அயில்வே லேந்து மழகா போற்றி
ஔவையின் தமிழுக் கருளினை போற்றி
செவ்விய அறுமுகச் சேயே போற்றி
அருண கிரிக்கரு ளையா போற்றி

கருணைத் திருப்புகழ் களித்தாய் போற்றி
சொக்கே சன்றரு சுகிர்தா போற்றி
நக்கீ ரர்க்கருள் நம்பா போற்றி
அகத்தியர்க் கருளுங் குருமணி போற்றி
சகத்தினி லழகொளிர் தற்பரா போற்றி

சரவணப் பொய்கையிற் றவழ்ந்தோய் போற்றி
பிரணவந் தந்தைக் குரைத்தோய் போற்றி
கலியுக வரதனாய் வருவாய் போற்றி
வலிமையைத் தந்தே வளர்ப்பாய் போற்றி
பத்தர்க் கருளும் பாலா போற்றி

முத்தி கொடுக்கும் முதல்வா போற்றி
வள்ளி மணாளா வரதா போற்றி
கள்ளங் கெடுக்கும் கதிரே போற்றி
தேவசே னைக்கருள் சேயே போற்றி
ஏவருந் துதிக்கு மெழிலோய் போற்றி

செங்கடம் பணியும் செல்வா போற்றி
சங்கரன் பாலா சண்முகா போற்றி
உமைதரு மைந்தா வுத்தமா போற்றி
இமையவர்க் காக்கு மேந்தலே போற்றி
கெஞ்சு மடியரைக் கொஞ்சுவாய் போற்றி

மிஞ்சுங் கொடியரை மிதிப்பாய் போற்றி
குரைகட லொளித்த சூர்முதல் தடிந்தோய்
நரைதிரை யில்லா வாழ்வருள் போற்றி
உள்ளங் கவருங் கள்வா போற்றி
அள்ளக் குறையா வருளே போற்றி



தெள்ளமு தத்தின் றெளிவே போற்றி
உள்ளங் கோயில்கொள் குகனே போற்றி
ஆசா பாசம் தூசாய்ப் போக
நேசந் தந்தெமை யாளுவாய் போற்றி
சச்சிதா னந்தச் சிவகுரு போற்றி

விச்சையின் மூலப் பொருளே போற்றி
மாருத வல்லியின் மாமுகம் நீக்கி
மாவையி லமர்ந்தருள் மணியே போற்றி
சாவைத் தடுக்கும் சண்முகா போற்றி
சரவண பவஓம் சரவண பவஓம்

திருவடி தந்தாள் சரணஞ் சரணம்

## செல்வச் சந்நிதிச் செவ்வேள் போற்றி

செல்வச் சந்நிதிச் செவ்வேள் போற்றி
கல்வியும் செல்வமும் அருள்வாய் போற்றி
வெல்லும் தனிவேற் கரத்தாய் போற்றி
வல்வினை நீக்கிக் காப்பாய் போற்றி

அல்லும் பகலும் நினைவார் மனத்தில்
அருளுருத் தாங்கி யமைவாய் போற்றி
நல்லா ருறையும் சந்நிதி யமர்ந்து
எல்லா நலன்களுந் தருவாய் போற்றி
காண்பவர்க் கினிய காட்சிகள் நல்கித்

தாண்டவம் புரியும் தங்கவேல் போற்றி
தோணித் துறையில் தோணி யப்பனாய்
தோன்றாத் துணையருள் சுடர்வேல் போற்றி
வீண்பிற வியினில் வீழ்ந்தழி யாமல்
ஆண்டருள் புரியும் அருள்வேல் போற்றி

மாண்பார் சந்நிதி மருவிய அன்பர்க்(கு)
ஊண்பே றளிக்கும் ஒளிவேல் போற்றி
முத்திக் கரையின் முத்தொளி காட்டும்
முத்துக் குமரன் கைவேல் போற்றி
பத்திசெய் யடியார் சித்திகள் பெறவே

வித்தைகள் புரியும் வீரவேல் போற்றி
சுத்த நெறியில் சித்தம் வைப்பவர்
மெத்திய வினைதீர் வேலே போற்றி
நித்தமும் அடியவர் நேர்த்திகள் விரும்பும்
வித்தக ஞான வெற்றிவேல் போற்றி

அழுவார் தொழுவார் அல்லல் நீக்கி
அருளொளி காட்டும் ஆதிவேல் போற்றி
விழிக்கும் வழிக்கும் பெருந்துணை யாகிய
செழிக்கும் சந்நிதிச் சீர்வேல் போற்றி
அழிக்கும் தீவினை யடுக்கா வண்ணம்

தெழித்தே யுரப்பும் செய்யவேல் போற்றி
அண்டினர்க் கருளும் அருள்வேல் போற்றி
இச்சா ஞானக் கிரியையின் வடிவப்
பச்சை மயிலோன் பருவேல் போற்றி
பண்டைப் பழவினை வேரறுத் தருளும்

தண்டைச் சிலம்பொளிர் தனிவேல் போற்றி
விண்ணவர் துன்பம் விரைவினி லழியத்
திண்ணிய சூர்முதல் தெறுவேல் போற்றி
மண்ணவர் மனங்கரை சந்நிதித் தலத்து
மன்னிய தனிவேல் போற்றி போற்றி

குன்றம் எறிந்து கொற்றம் தாங்கிய
வன்றிறற் படையோன் வளர்வேல் போற்றி
மன்றிலா டிக்கு மாண்பொரு ளுரைத்த
குன்றமர் குழந்தையின் கூர்வேல் போற்றி
சென்றுறு பிறவியின் வழியடைத் தருளும்

வன்றிறல் குமரன் வடிவேல் போற்றி
செல்வச் சந்நிதி சேர்ந்திடு மடியருக்
கெல்லா நலமுந் தரும்வேல் போற்றி
தெய்வ குஞ்சரியும் சீர்க்குற வள்ளியும்
தைவரு குமரன் தனிவேல் போற்றி

மோன மூர்த்தியா யெழுந்தருள் புரியும்
ஞானப் பழத்தின் நல்லவேல் போற்றி
உள்ளுன ருவக்கும் பேரழ கொளிரும்
தெள்ளிய ஞானத் திருவேல் போற்றி
குறுமுனிக் கினிய தமிழமு துதவிய



அறுமுகக் குமரனின் அருள்வேல் போற்றி
திருமுரு காற்றுப் படைகொண் டருளி
வருமொரு பூதம் வதைத்தவேல் போற்றி
கற்புங் காதலும் காட்டிய தமிழின்
பொற்புறு குமரனின் போர்வேல் போற்றி

அன்னம் பாலித் தருள்வாய் போற்றி
முன்னிய வெல்லாம் தருதாய் போற்றி
வன்னக் காவடி முரசுடன் சங்கம்
சின்னம் விரும்பும் செவ்வேல் போற்றி
கற்பூ ரத்தொளி யூடே காட்சி

பொற்புட னருளும் புனிதவேல் போற்றி
செல்வச் சந்நிதி வெற்றிவேல் போற்றி
நல்குர வொழிக்கும் நல்வேல் போற்றி
கடம்பணி குமரன் கைவேல் போற்றி
இடம்பல விலங்கும் எழில்வேல் போற்றி

ஞான வடிவச் சத்திவேல் போற்றி
மோனத்தி னுள்ளே முளைத்தவேல் போற்றி
அன்னக் கந்தனின் அருள்வேல் போற்றி
சொன்ன மருளும் சுடர்வேல் போற்றி
முன்னம் குறிஞ்சியில் மோகம் விளைத்த

தன்னொளிக் கந்தன் தனிவேல் போற்றி
கணபதிக் கிளையோன் கரவேல் போற்றி
குணங்கடந் தொளிரும் கூர்வேல் போற்றி
சிவசின் மயனின் சீர்வேல் போற்றி
நவகோள் நலியா வண்ணம் நல்லருள்

மிகவே தந்திடும் மிளிர்வேல் போற்றி
சரவணந் தன்னில் தோன்றிய சாமியின்
அரகர ஒலிக்கு அருள்வேல் போற்றி
கார்த்திகைத் தாயர் பாலுண் டவனின்
கீர்த்தி பெருக்கும் கிளர்வேல் போற்றி

நாத விந்தினில் நடனம் புரியும்
ஆதிக் குமரன் அரும்வேல் போற்றி
அன்னசத் திரத்தி லருள்கொடுத் தமரும்
வன்ன வடிவேல் போற்றி போற்றி
சந்நிதிக் கந்தன் சயவேல் போற்றி

உன்னுவார் வினைதீர் ஒளிவேல் போற்றி
சரவண பவனின் சயவேல் போற்றி
அரனருள் முருகனின் ஆதிவேல் போற்றி
அரகர முருக குருபர சரவண
வரந்தர வருக வருக வருக
சந்நிதிச் செல்வனின் சயவேல் காக்க
சரவண பவஓம் சரவண பவஓம்

**குகனே போற்றி முற்றிற்று**



உ

# கைலாச வாகனத்தில் கந்தா வா! வா!

## ந. சுப்பிரமணியம்

**வெண்பா**

கைலாச வாகனத்திற் கந்தன் எழுந்தருளி
மெய்யாகக் காட்சிதர வேலேந்திக் - கைலை
மலையைத் தலைவணங்கா மானிடர்கள் யாரும்
தலையில்லாத் தாவரமே தான். 1

மின்னொளிகள் பூட்டி மின்னிரும் மலைமேலே
பன்னிரண்டு கையான் பவனிவரத் — தன்னிரண்டு
கண்களிலே கண்ணீர் களிப்பினிலே சிந்தாதார்
கண்ணிருந்தும் கண்ணிலரே காண். 2

வானுயருங் கைலாச வாகனத்திற் கந்தப்பன்
ஞானவேல் ஏந்திவர நல்லூரில் — தேனாம்
கயிலை மலையதனைக் கைகூப்பிப் போற்றார்
பயனில்லாக் கையோரே பார். 3

நல்லூர் முருகையன் ஞான ஒளிவீசிப்
பல்லா யிரர்முன் பவனிவரச் — சொல்லாலே
வாயார வாழ்த்தி வலம்வந்து பாடாதார்
வாயிருந்தும் வாய்பேசா மாடு. 4

மலைகீழ் நசுங்கிடினும் மன்னனிசை மீட்கும்
தலையான காட்சியினைச் சாற்றும் — மலைகைலை
வாகனத்தில் ஏறும் வடிவேல் வணங்காதோர்
தேகம் சவமே தெரி. 5

நந்தி மிருதங்க நாதம் முழங்குவதைக்
கந்தன் அருகினிலே கண்ணுற்றும், — வந்தனைசெய்
கூட்டம் கவியிசைப்பக் கூர்ந்து செவிசாய்க்க
நாட்டமிலார் காதற்றோர் நம்பு. 6

அட்டாங்கம் பஞ்சாங்கம் ஆகும் நமஸ்காரம்,
தொட்டு வணங்கல், துதிபாடல், — விட்டுக்
கடலை கொறித்துக் கடைவீதி சுற்றல்
சுடலைக்கும் ஏற்குமோ சொல்லு. 7

வீணான பேச்சு, விளையாட்டு, காமுறுதல்,
காணாமற் கன்னியர்க்குக் கண்ணடித்தல், — நாணாமற்
கையாற் றிருடுவது, கைலாச வாகனத்தை
நையாண்டி செய்வதே நம்பு. 8

**விருத்தம்**

நல்லைநகர் முருகையா நாதா வா!வா!
ஞானவேல் ஏந்திவரும் நண்பா வா!வா!
தொல்லைகள் துயரனைத்தும் துடைப்பாய் வா!வா!
சோதியே அறிவொளியின் சுடரே வா!வா!
மெல்லிடையார் இருவருடன் மேள தாளம்
மிருதங்கம் இன்னிசைகள் மிளிர வா!வா!
கல்லினையும் உருக்கிவிடும் காட்சி நல்கும்
கைலாச வாகனத்திற் கந்தா வா!வா! 9

## வருகிறான் தேரில் கந்தன்

**விருத்தம்**

ஆசிலாப் பதியாம் நல்லூர் அமைந்திடும் கோயில் முன்னால்
பாசமாய்த் தொழுது பண்ணாய்ப் பாடிடும் அன்பர்க் காக;
மாசறு மணிகள், தங்கம், மாணிக்கம் கோத்த மாலை
வாசனை மலர்கள் சூடி வருகிறான் தேரில் கந்தன்! 1

தாரணி துதிக்குந் தேரைச் சைக்கிளிற் பார்க்க வந்தார்,
காரினில் வந்தார், மாட்டுக் கரத்தையில் வந்தார், மற்றும்
வீரர்போல் லொறியில், பஸ்ஸில், விமானத்தில் வந்தார்,
மற்றும்
சூரிய வெப்பந் தாங்கித் துள்ளியும் நடந்தும் வந்தார். 2.



கண்களிற் சுரக்கக் கண்ணீர், காதினில் வேதம் கேட்கப்
பண்ணுடன் வாய்கள் பாடப் பலமலர் மூக்கில் நாற,
விண்ணுறை முருகன் வள்ளி மெல்லிடை தெய்வ யானை
வண்ணமாய்த் தேரில் வந்தார் மண்ணினோர்
மகிழ்ச்சி யெய்த! 3

வாரிதி நிகர்த்த கூட்டம், வானொலிச் சேவை யாளர்,
சூரிய வேலை நோக்கிக் கும்பிடு போடும் பெண்கள்,
பேரிசை மேள தாளம் பிரதிட்டை செய்வோர் சூழத்
தேரினில் முருகன் வந்தான் தெய்வானை வள்ளி யோடே! 4

நாவலர் வதிந்த நல்லூர் நற்பதி முருகா வா!வா!
காவலர் இருந்த நல்லூர்க் கார்த்திகைக் குமாரா வா!வா!
சேவலின் கொடியாய் வா!வா! செந்தில்வேற் கந்தா வா!வா
தேவனே மயிலில் வா!வா! தேரிலே பவனி வா!வா! 5

கைலாச வாகனத்தில் கந்தா வா! வா! முற்றிற்று

உ

# செட்டிமக்கள் தருமம் காக்க வருகவே

## கண்ணதாசன்

அப்பனுக்குப் பாடம் சொன்ன சுப்பையா - வெறும்
ஆண்டியாகிப் பழநிவந்த வேலய்யா
கற்பனையைத் தாண்டிநிற்கும் கந்தய்யா - உனைக்
காண்பதற்கு நடந்துவந்தோம் நாமய்யா!

மலையினிலே அரசமைத்த மன்னனே - எங்கள்
மடியினிலே குழந்தையான கந்தனே
தலையிருக்கும் வரையில்உனை வணங்குவோம் - உன்
சந்நிதியில் பாடிப்பாடி மயங்குவோம்!

காவிரிப்பூம் பட்டினத்தில் வாழ்ந்தனம் - அங்கு
கந்தனையே எண்ணியெண்ணி வாழ்ந்தனம்
பூவிரிந்த பாண்டிநாட்டில் வந்தனம் - உன்
பொன்னடியைக் கண்டுகண்டு மகிழ்ந்தனம்!

ஏறுகிறோம் இறங்குகிறோம் வாழ்விலே - மயில்
ஏறிவரும் நீயறிவாய் நேரிலே
மாறிவரும் நாகரீக உலகிலே - நாங்கள்
மாறவில்லை தெய்வபக்தி நிலையிலே!

இலங்கையிலும் உனதுகோவில் கட்டினோம் - பர்மா
எங்கணுமே உனதுசிலை நாட்டினோம்
மலையநாட்டில் உனதுகோயில் ஆக்கினோம் - எங்கள்
மனத்திலுள்ள பயத்தைஎல்லாம் போக்கினோம்!



தண்டபாணி கோவிலின்றி ஊருண்டா - உன்னைத்
தண்டனிட்டு வணங்கிடாத பேருண்டா
கொண்டுவிற்கப் போனஎங்கள் கொள்கையே - உனைக்
கொண்டுவைக்கப் போனஎங்கள் கொள்கையல்லவா?

செந்திலாளும் பழநியாண்டி முருகவேள் - எங்கள்
செட்டிமக்கள் தருமம் காக்க வருகவே
அந்தமிலா அழகுத்தெய்வம் கந்தவேள் - உன்
அன்புமக்கள் வாழ்வுகாக்க வருகவே!

ஆண்டுதோறும் ஆண்டுதோறும் வருகிறோம் - நீ
ஆண்டுவரும் பழநிநோக்கி வருகிறோம்
வேண்டிவரும் நலங்களெலாம் அருளுவாய் - உன்
வீட்டுமக்கள் போலஎமை ஆளுவாய்!

செட்டி மக்கள் தருமம் காக்க வருகவே முற்றிற்று

உ

# சோதிமயில் ஏறிவரும் முருகனே!

## வி. கந்தவனம்

பரமசிவன் கருணையுரு மைந்தனே
— ஆறுமுகம்
சொரியும் நலச்சோதி எழிற் கந்தனே
கருதரிய சூழ்ச்சிபுரி சூரனை
— தேவர்தொழப்
பொருதழியச் செய்தபெரு வீரனே!

கூறுபயன் பாடுகுறை தொண்டைமா
— னாறுகுடி
யேறிவிளை யாடமனங் கொண்டதேன்?
ஆறுபடை வீடுகள லுத்தவே
— பேறுமிகு
கூறுமடி யார்பிடிவ லுத்தவோ?

மாசிலரு மாகமம் எறிந்ததேன்
— ஏழைகளின்
வாசியெனச் சந்நிதி நிறைந்ததேன்?
பூசைபுதி தால்நிறைவு கொள்ளவோ
— வடமருயர்
பேசுதமி ழின்பொருளை யள்ளவோ?

தந்தைக்குப தேசம்புரி தனையனே
— தமிழ் ஔவை
சிந்தை மகிழச்செய்த வினியனே
பந்தயம் தமையனுடன் கண்டவா
— பழனிதனில்
விந்தையுருப் பூண்டுகுடி கொண்டவா!



வேல்வடிவில் விளங்குவது மென்னவோ
— ஆறுமுகத்
தாலருளும் அழகெங்கு மன்னவா?
வேல் செயலில் மேலென்னுந் தென்பதோ
— அன்பர்பகை
வேலினது போர்க்கும்படை என்பதோ?

கருவியது கருத்தாவோ வேலனே
— நின்கூத்தைப்
புரியவுன தருணகிரி யல்லனே
கருவிதனில் கருத்தாவைக் காணுவார்
— வேறெதுவுந்
தெரியாதுன் னருள்வடிவே பேணுவார்!
சோதிமயில் ஏறிவரும் முருகனே
— மாலவரின்
வேதமகள் படருபுய மருகனே!
தீதிலிளங் குறவர்குலக் கொடியினை
— மணம்புரிந்து
சாதியிடர் களைந்தபெருங் கடவுளே!

ஆயுரிவே தியருலப் பிலாரிந்
தார்பொரு ளளப்பில பறித்தவிடத
மானவை யெலாம்விடுத் தமரரடியேன்
பிணிக்கஞ்சி யோடினர் சோதிடர்
மாயுநா ளளவில கணித்துப்
பிணிக்கெதிர் வராதொழிந் தார்மந்திரர்
வாய்மென்று மென்றுவெட் கித்திரும்
பாரினரை மாட்டுபிணி யோட்டியருள்வாய்
வேயுளௌு முத்துண்மணியே புனக்கணியே
விழைந்திடு மெனக்கணியதே
வீறு செந்தூரோ கம்பரங் கரியாதி
வெற்பின்விளை தருமருந்தே
தோயுமெந் னாவிலுன் னாமமெந்
நாளுமே சொல்ல வெளிதாகிவந்த
சுத்தனே கல்லோடை வைத்தநே
யத்தனே தொத்துநீபத்தொடையனே.

எண்ணிரண் டாண்டுதொட் டிதுகாறும்
நாத்தமும் பேறரோ மாஞ்சிதமுற
விள்கியுணர் வவிழமொழி குழறவச
மழிய வுள் ளென்புநெக்குருக மழைபோற்
கண்ணிரண் டும்பொழிய வானந்த
நீரன்னை காணத மகவுபோலக்
கதிரினைக் காணாத வுலகுபோ
லையநின்தாள் மலர்கள் பாடிவீழ்ந்தேன்
பெண்ணிரண் டாண்ட விருபாகனே
யேகனே பின்னைநா னென்னசெய்வேன்
பெற்றதந் தாய் பராமுகமே
னுனக்கெனைப் பேணி யினியாள்கைகடனே
சுண்ணவெண் ணீரூர்ந்த பண்ணவக்
குமரனரே துரியவடி வாகிநின்ற
சுத்தனே கல்லோடை வைத்தநே
யத்தனே தொத்துநீபத்தொடையனே

வேலுமயி லுந்துணையெனச் சதா காலமும்
விருப்படலுரைக்க வருள்க
மெய்ப்பிணியொ ரெட்டுணையு மணுகாது
பாறியெமை விலகிவிட் டோடவருள்க
ஏலுமள வும்பிச்சை யென்பார்
நடுங்க னிலையென்னாது வழவருள்க
வில்லையென்பார் பாலிருக்கு
நல் குரவேகியெனை யகன்டோடவருள்க
காலுநம னும்பாச சூலமோடு வரினயிற்
காட்டிமயி லோட்டிவருக
கண்ணின்மணி யேயினி யெனக்குருகி யனவரத
காட்சி தந்தருள வருக
தோலுமணியுங் கொண்ட மாலவன்
மருகனே சோதிமயமானதில்லைச்
சுத்தனே கல்லோடை வைத்தநே
யத்தனே தொத்து நீபத்தொடையனே.

**சோதிமயில் ஏறிவரும் முருகனே! முற்றிற்று**



உ

# திருமுருகன்

## அலோர் ஸ்டார் ரெ. இராமசாமி

ஞெண்டாரும் பண்ணை நிறையலோர் ஸ்டார்மேவு
தண்டா யுதபாணி தாளிணையைக் — கண்டுநிதம்
சிந்தித்து வந்தித்தால் சிந்தித்த தத்தனையும்
சந்தித்துத் தந்திடுமே தான். 1

யுவராச னாக உமையாளோர் பாக
சிவராசன் தந்த திருச்சேயன் — பவநாசன்
மெய்ஞ்ஞான பண்டிதனாம் வேல்முருக னைப்பணிந்தால்
எஞ்ஞான்றும் வாழ்வருளு வான். 2

கந்தனே! பன்னிருகை காவலனே! கான்குறத்தி
சிந்தை தனிலுறையும் தெய்வமே! — எந்தன்
இடரகற்றி ஏற்றமுற இன்னருளை ஈயத்
தடைஎன்ன சாற்றிடுவாய் சற்று. 3

ஆவினத்தைக் காக்குமொரு ஆட்டிடையர் சேயைப்போல்
தாவிமரத் தேஇருந்து சண்முகன் — பூவிலுயர்
செவ்வியோர் போற்றுகின்ற தீந்தமிழின் தேன்பருக
ஔவைகண் முன்னிருந்தான் ஆங்கு. 4

ஔவையரை அன்றொருநாள் ஆறுமுகன் கானகத்தில்
நவ்வக் கனியதனை நல்குமுனம் — ஒவ்வுவையோ
செவ்வையாய்ச் சுட்டதோசு ·டாப்பழமோ சிந்தித்து
மௌனமில் லாதே வழுத்து. 5

மின்னிலங்கு வேல்முருகன் வேணுமா சுட்டபழம்?
தின்னச் சுடாப்பழந்தான் தேவையா? — என்னவென
நௌவிவிழி யாள்சுட்ட நற்பழத்தா வென்றாளவ்
ஔவைகனிக் காசையால் ஆங்கு. 6

## ஆறுபடை வீடுகள்

### திருப்பரங்குன்றம்

பூதத்தால் நக்கீரன் பொன்றுங்கால் தன்னுயிரை
ஆதரவாய்க் காத்தே அருள்புரிய — போதமுள்ள
ஆற்றுப் படைநூலை ஆக்கிப் பரங்குன்றில்
போற்றினான் வேலனடிப் போது. 1

### திருச்சீரலைவாய்

சூரனை வென்றதோர் சோபனத்தைக் கொண்டாட
வீர முருகனுக்கு வெற்றிவிழா — ஆரணங்கள்
ஆர்ப்பொலிக்கச் செந்தூரில் ஆற்றியவான் தேவரைக்
கார்த்திகையன் காத்தான் கனிந்து. 2

### திருஆவினன்குடி

மாங்கனியைத் தந்தைபால் வாங்க இயலாமல்
ஏங்கிப் பழநிமலை ஏற்றுறையும் — காங்கேயன்
பத்மபதம் சிந்தித்தால் பாவமெலாம் நீங்கிப்பின்
இத்தரையில் உய்வோம் இனிது. 3

### திருவேரகம்

ஓங்காரத் துட்பொருளை ஓராசான் போலிருந்து
பாங்காய்ச் சிவன்பால் பகர்ந்ததால் — ஓங்கும்
திருவே ரகத்துவாழ் சேய்சாமி நாதன்
திருப்பெயர் பூண்டான் சிறந்து. 4

### பழமுதிர்சோலை

சுவையார் பழமுதிர் சோலைமலை வாழும்
சிவனார் அருளொளிகூர் சேய்நம் — நவையனைத்தும்
நீக்கித் திருவருளால் நீடூழி வாழவைப்பான்
ஊக்கமுடன் போற்றிவரின் ஓர்ந்து. 5

### குன்றுதோறாடல்

குன்றுதோ றாடலெனும் குன்றெல்லாம் கோயிலாய்
என்றுமே கொண்டான் எழில்முருகன் — என்றாலும்
செவ்வேள் துதிப்பார்க்குச் சீரருளைப் பெய்துநலம்
ஒவ்வும் தணிகை உயர்வு. 6



## தைப்பிங் தண்டபாணி

அலைமேவும் நீர்சூழ்ந்த மலைய கத்தில்
ஆன்றசீர் வெள்ளிஎனும் மாநி லத்தில்
உலையாத இயற்கைஎழில் உலவு கின்ற
ஒய்யாரத் தைப்பிங்கில் உயர்ந்தி லங்கும்
நிலையான பைந்தண்ணீர் மலையின் பக்கம்
நெடுநாள்முன் தனவைசிய நகரத் தார்கள்
சிலையாகத் தண்டபாணித் தெய்வம் வைத்துத்
திருக்கோயில் சமைத்துவழி பட்டார் நன்றே. 1

பின்னாளில் வழிபாட்டின் வசதிக் காக
பீடார்ந்த தைப்பிங்கின் சிம்பாங் சாலை
என்னும்நல் இடத்திலொரு கோயில் கட்டி
எடுத்துவந்த தண்டபாணிச் சிலையை நாட்டி
அன்னாளில் திருக்குடநீ ராட்டி அன்பால்
அன்றாடம் அவனருளை வேண்டி னாரால்
எந்நாளும் இயம்புகின்ற வேண்டு கோளை
இனிதருளும் அவனடிகள் போற்று வோமே. 2

இங்கிதமாய் மாங்கனியை வேழம் ஏற்க
எழுந்ததொரு முனிவாலே இமயம் நீங்கித்
தங்கமுடி குண்டலங்கள் சார்ந்த தாளின்
தண்டையணி கிண்கிணிச்ச தங்கை யோடும்
அங்கமதில் அணிந்திருந்த ஆடை நீக்கி
அடியார்க்கு நல்லின்பச் செல்வம் எல்லாம்
பொங்கிடவே தந்தருள ஆண்டிக் கோலம்
பூண்டுவந்தான் தைப்பிங்கின் தண்ட பாணி. 3

விண்டுரைக்க வியலாத வியனைக் கொண்டான்
வீரசக்தி விழைந்தளித்த வேலைக் கொண்டான்
பண்டுரைத்த வேதசாரப் படிவம் கொண்டான்
பக்தர்களின் மனக்குகையில் படிந்து கொண்டான்
தண்டமிழின் சங்கத்தின் தலைமை கொண்டான்
தம்அடியார் துயர்களைய அருளைக் கொண்டான்
தண்டுகொண்டு தகையுறவே தழைக்கக் காப்பான்
தமிழ்த்தெய்வம் தைப்பிங்கின் தண்ட பாணி. 4

## ஈப்போ் தண்டாயுதபாணி

தெய்வத் தன்மை திகழழகு
சீரார் இளமை மகிழ்ச்சியுடன்
பெய்யும் இனிமை மணமென்னும்
பெருமை கூர்ந்த முருகோனே!
ஐயை இணைத்து மகிழ்ந்ததனால்
ஆறு முகமாய் ஆனவனே!
உய்யும் வழிகள் உதவிடுவாய்!
உள்ளத் திருந்தே அருள்புரிவாய்! 1

அகரம் படைப்பை ஆக்கிடுமாம்
ஆன்ற உகரம் காத்திடுமாம்
மகரம் ஒடுக்கம் செய்திடுமாம்
மகிமை கொண்ட எழுத்திணைந்த
சிகரம் மறையாம் ஓங்காரம்
செம்மை வடிவுச் செவ்வேளே!
நுகரும் நல்வாழ் வருள்வாயே!
நுந்தாள் பணிந்தேன் காப்பாயே! 2

தனக்காய் எதையும் கருதாமல்
தன்னை நாடும் அடியார்க்குக்
கனஞ்சேர் இன்பம் செல்வங்களைக்
கதித்துத் தரவே ஈப்போவில்
வனப்பாய் வலக்கை தண்டேற்ற
வடிவேல் தண்டா யுதபாணி!
தினமும் உன்னைச் சேவித்தேன்
சிறந்த வாழ்வைத் தந்தருளே! 3

## ஆடும் மயிலேறும் ஆண்டவன்

வானவர் போற்றிடும் வேலனாம் — குற
வள்ளிதெய் வானைமண வாளனாம்
தானவர் தடிந்ததண் டாயுதன் — வீரத்
தடந்தோ ளிலங்கும்வே லாயுதன் வானவர்

கானச் சுவையுடன் பாடுவோம் — நாம்
கந்தன் கருணையை நாடுவோம்



ஆனனம் ஆறினைக் கொண்டவன் — அவன்
ஆடும் மயிலேறும் ஆண்டவன் வானவர்

பழத்தால் ஆண்டியாய்ப் போனவன் — அந்தப்
படிவமாய் மலையகம் வாழ்பவன்
செழிப்பான செல்வங்கள் தருபவன் — என்றும்
சிறப்பான இறையன்பை ஏற்பவன் வானவர்

தண்ணீர் மலையென்னும் தலத்தினில் — அருள்
தண்டா யுதனென்னும் பெயரினில்
வண்ணத் திருக்கோயில் கொண்டான் — தாள்
வணங்குவோம் அவனருள் உண்டாம் வானவர்

## தண்ணீர் மலைத் தண்டாயுதன்

தண்ணீர்மலைத் தண்டாயுதன் பாதம்
தண்டனிட்டே ஓதிடுவோம் கீதம்
எண்ணத்தில் அவனுருவைக் கண்டு
இயற்றிடுவோம் எந்நாளும் தொண்டு தண்ணீர்

பாலமுரு கன்மீதில் பக்தி
பண்ணுவோம் அவனணியும் சக்தி
வேலின் பெரும்புகழைப் பாடி
வேண்டுவோம் அவனருளை நாடி தண்ணீர்

சீர்மல்கும் பினாங்குநகர் தன்னில்
சிங்காரப் பூமலையின் அருகில்
பார்புகழும் தண்ணீர்மலை யதனில்
பாங்காக வீற்றிருக்கும் வேலன் தண்ணீர்

ஆனைமுகனுக் கிளைய தம்பி
அழகே உருக்கொண்ட நம்பி
ஞானம் நமக்கருள வேண்டி
நயந்து கேட்டிடுவோம் ஈண்டி தண்ணீர்

திருமுருகன் முற்றிற்று

உ

# நல்லூர்க் கந்தன் கீர்த்தனைகள்

## ந. சுப்பிரமணியம்

1

## நல்லூர் வாழ் முருகப்பா

**இராகம்: சம்க்ரந்தனப்ரியா** **தாளம்: ஆதி**

**பல்லவி**

பால்கொண்டு துதித்தோங்க நூல்கொண்டு உனைப்பாட
மால்கொண்ட மருகாவுன் மயிலதனில் வந்திடுவாய்(பால்)

**அனுபல்லவி**

வேல்கொண்டு சேவல்தன் வியப்பான கொடிகொண்டு
வினைநீக்கி மலம்நீக்கி எனைக்காக்கும் வேலப்பா (பால்)

**சரணம்**

நல்லூரில் நல்லருளை நயமோடு கொடுப்போனே
பல்லாயி ரம்பாவம் பஞ்சாய்ப் பறந்திடவும்
எல்லோரும் இன்புற்று எழிலுடன் வாழ்ந்திடவும்
வல்லமை தருவாயே நல்லூர்வாழ் முருகப்பா (பால்)



2

## நல்லை நகரத்தின் கந்தன்

**இராகம்: கல்யாணவசந்தம்** **தாளம்: ஆதி**

**பல்லவி**

நாவலர் வாழ்ந்த நல்லை நகரத்தின்
ஞானவேற் கரத்தோன் என்கந்தன் (நாவ)

**அனுபல்லவி**

ஆறுமுகா..... ஆறிரண்டு கரத்துடன்
வள்ளிப்பெண் மானுடன் மயில்மிசை வரணும் (நாவ)

**சரணம்**

மாயோன் மருமகன் மலைமகள் தனிமகன்
வேய்குஞ்சரி கன்னியின் காதலன்
ஈசன்மகன்...... ஓங்கிடும் சேவற்கொடியன்
பாசம்வே ரோடற வரந்தர வருவாய் (நாவ)

## 3

# நல்லைநகர் திருமுருகா

**இராகம்: பாகேஶ்ரீ** **தாளம்: ஆதி**

**பல்லவி**

நம்மவர் மலமற நல்லைநகர்—உள்ள
சிம்மமே போல் திகழும் திருமுருகா குமரா (நம்)

**அனுபல்லவி**

நாடுமன்பர் நெஞ்சில் நலமுடனே—நின்று
பேடுகள் இருவருடன் கூடிவரும் குமரன் (நம்)

**சரணம்**

ஆறுமுகன் முருகன் அரிமருகன்—குகன்
வீறுகொண்ட வேலேந்தும் வேல்முருகன்
ஆறுதல் அளிக்கின்ற அறிவழகன் அன்பன்
நாறுமலர் சூடும் ஞானியவன் நண்பன் (நம்)



## 4

# நல்லூர் வதியுங் கந்தனே!

**இராகம்: ஹரஹரப்ரியா** **தாளம்: ஆதி**

**பல்லவி**

மலையான் மகளின் மைந்தனே கந்தா
மாசில் நல்லூர் வதியுங் கந்தனே (மலை)

**அனுபல்லவி**

குறவன் மகளாம் கொடிநிகர் வள்ளியைக்
கூடியே களவாய்க் கொண்டநற் குமரனே (மலை)

**சரணம்**

நிலையிலா வுலகில் நீந்தும் எமக்கும்
அலைகடல் நெஞ்சுடன் அலைந்திடும் எமக்கும்
பலபல பாதகம் பண்ணும் எமக்கும்
மலத்தை நீக்கிடும் வழியினைக் காட்டிடும் (மலை)

நல்லூர்க் கந்தன் கீர்த்தனைகள் முற்றிற்று

உ

# பதினாறு பேறும் பாலிப்பாய்

ரெ. இராமசாமி

## காப்பு

பிரணவத்தின் உருவமதாய்ப் பிறந்த நேர்த்தி
பிறஉயிர்க்குப் பெருந்தலைவன் என்னும் கீர்த்தி
அரனுமையாள் செல்வனுக்கே அருகு சார்த்தி
ஆனைமுக! அடிவணங்கி இசைத்தேன் சீர்த்தி;
பரமனுக்கே உபதேசம் பண்ணும் மூர்த்தி
பதினாறு. பேறும்பா லிக்கப் பூர்த்தி
வரம்வேண்டிப் பாடிடவே வாக்குக் கோர்த்து
வடிக்கஅருள் செய்திடவே வணங்கி னேனே.

## பதினாறு பேறுகள்

குருநாதா! குகநாதா! குமரா! கந்தா!
குவலயத்தில் உன்அடியார் குறையே இன்றிப்
பெருவாழ்வு வாழ்ந்திடநீ பேண வேண்டிப்
பிரியமுடன் யான்கேட்கும் வரம்என் என்றால்
திருவான புகழ்கல்வி வலிமை வெற்றி
சீர்நற்சேய் பொன்நெல்நல் ஊழ்நு கர்ச்சி
அறிவழகு பீடிளமை நோயி லாமை
ஆயுளூக்கம் எனும்பேறு பதினா றாமே.



## புகழ்

உலகுயிர்கள் வாழ்வதற்கே ஓம்பும் ஈசா!
ஒப்பில்லா ஒளிப்பிழம்பாய் உலவும் தேசா!
அலகில்லா அழகெல்லாம் அமைந்த வாசா!
அகத்தியர்க்குத் தமிழுரைத்த ஆதி ஓசா!
இலகுகின்ற உனதுபுகழ் என்றும் பேசி
எப்பழியும் எய்தாமல் இனிய பாசம்
நிலவுகின்ற ஈகையினால் புகழைத் தாசன்
நேரியநல் வாழ்வினிலே நிறைப்பாய் ஐயா! 1

## கல்வி

இளமைமனம் அழகுதெய்வத் தன்மை இன்பம்
எல்லாமாய் உருக்கொண்ட முருக தேவே!
வளமையுறு வாழ்க்கைக்கு வற்றாச் செல்வம்
வகையான கல்விஎன வகுத்தார் ஆன்றோர்
இளமையிலே அக்கல்விச் செல்வம் ஈந்தே
இனிதாக அதன்நெறியில் என்றும் நின்றே
அளவையிலாப் பயன்பெற்றே அடியார் வாழ
ஆண்டவனே! பண்டிதனே! அருள்வாய் ஐயா! 2

## வலிமை

செந்நிறத்துக் கதிரவன்போல் சிவந்த மேனி
சிவனுக்கே உபதேசம் செய்த ஞானி
முந்நீர்போல் கருநீல மயிலின் தானி
முருகோனே! செய்செயலின் வலிமை பேணி
எந்நாளும் பயன்பெறவே இயற்றி மேலும்
எச்செயலும் வெற்றிகொள்ள ஊக்கம் தந்து
வன்மைமிகு பகைவனையும் வருந்த வைக்கும்
வலிமையினை வ்ழங்கியருள் புரிவாய் ஐயா! 3

## வெற்றி

தொடுத்தவெட்சித் தார்சூடிச் சிவனார் சொற்ற
தொகையான பூதபடைத் தலைமை பெற்றுக்

கடுத்ததுன்பம் செய்சூரன் தன்னைச் செற்றுக்
கடுஞ்சமரில் வெற்றிகொண்ட கந்த வேலா!
எடுத்தசெயல் யாவினுமே ஈந்து வென்றி
எவ்வழக்கு நேர்ந்தாலும் இனிதே வென்று
விடுத்தசொல் எண்ணமெலாம் வெற்றி யுற்று
வீறாக வாழ்ந்திடவே விதிப்பாய் ஐயா! 4

**நன்மக்கள்**

மலைசார்ந்த இடத்தோடு மலையுங் கொண்ட
மகிழ்வுதரும் குறிஞ்சிநில மக்கட் தேவா!
கலைசார்ந்த கோவில்களில் சிலையாய் நின்று
காட்சிதந்து காத்தருளும் சுப்ர மண்யா!
நிலைசார்ந்த புண்ணியப்பே(று) எய்து தற்கு
நெறிபிறழாப் பழிஇல்லா நேர்மை ஞானம்
தலைசார்ந்த நற்பண்பும் தகவே சேர்ந்த
தனிச்சிறப்பாம் நன்மக்கள் தருவாய் ஐயா! 5

**பொன்**

ஆக்கமதை அடியார்க்கே அருள வேண்டி
அயிலவன்தன் உடைமையெலாம் அகற்றி ஆண்டி
பூக்குமொரு பண்டாரப் பொலிவை ஈண்டி
பூதிதிகழ் ·தண்டபாணி! போதத் தோனே!
தேக்கும்பொன் பொருளிலையேல் சிறப்புண் டாமோ?
செல்வமதைத் திறமறிந்து தீமை இன்றி
ஊக்கமுடன் உயர்வாக ஒருங்கு தேட
உற்றஅற நெறிவழியில் உய்ப்பாய் ஐயா! 6

**நெல்**

குன்றுதொறும் குடியிருக்கும் குமர வேலா!
குழகனெனும் கார்த்திகேயன் குகனாம் பாலா!
மன்றுநடம் ஆடுநரின் மைந்தா! கோலா!
மண்மகளின் மருமகனாம் மகிமைச் சீலா!
நன்றாக உழுதுகாய்ந்த நிலத்தில் நெல்லை
நயமாகப் பயிரிட்டுப் பயனைப் பெற்றுக்



குன்றாத நெற்கொடையைக் கொடுக்கத் தக்க
கோடிவளம் பெருகிடவே கூட்டும் ஐயா! 7

**நல்லூழ்**

சரவணத்தில் கார்த்திகையாள் முலைப்பால் உண்டு
சங்கரியால் கந்தனென ஆகிப் பண்டு
பிரணவத்தின் பொருளறியாப் பிரமன் தன்னைப்
பெருஞ்சிறையில் அடைத்துவைத்த பெருமை
யோனே!
உரங்கொண்ட ஊழதனை ஆகூழ் ஆக்கி
உலைவில்லா முயற்சியினால் அறிவு யர்ந்து
தரணியிலே அடைந்தபொருள் அனுப விக்கத்
தக்கதொரு நல்லூழைத் தருவாய் ஐயா! 8

**நுகர்ச்சி**

கற்பியலும் களவியலும் கலந்தாற் போல
கன்னிதெய்வ யானைவள்ளி அம்மை தம்மைப்
பொற்புறவே திருமணத்தைப் புரிந்த வேளே!
பொருந்திவரும் இருவினைகள் நுகர்ச்சி நேர்ந்தும்
அற்புதமாய் இல்வாழ்வில் அகமே ஒன்றி
அருங்காதல் இன்பத்தின் நுகர்ச்சி யோடு
பற்பலவாம் நல்வழியின் இன்பம் எல்லாம்
படிந்தவற்றில் நுகர்ச்சிகொளச் செய்வாய் ஐயா! 9

**அறிவு**

அறிவினது சின்னமெனும் அயிலாம் வேலை
அன்னைதரப் படையாக அணிந்த காலை
பரிவோடு ஞானத்தைப் படைக்கும் சாமி!
பாதகங்கள் வாராமல் காக்கும் ஞானம்!
செறிவான நன்மைகளைச் சேர்க்கும் ஞானம்
சீரான மெய்ப்பொருளைக் காணும் ஞானம்
நெறியாக உலகொட்டி வாழும் ஞானம்
நிறைவான அறிவுகளை நிறைப்பாய் ஐயா! 10

## அழகு

அழகுகளே தவப்பயனால் அடைந்த கோலம்
அனைத்துமுள இளமைக்கே ஆதி மூலம்
பழவினைகள் பறந்தோடப் பண்ணும் பாலா!
பாரியாள்தன் கொழுநனையே பேணல் அந்தம்
பிழம்பில்லா நுண்மையிடைப் பெண்ணைப் போலப்
பிறழாத மொழிபேசல் நடைக்கே அந்தம்
வழங்குகின்ற பண்பொழுக்கம் வடிவில் எல்லாம்
வனப்புகளை வாய்க்கச்செய் வடிவேல் ஐயா! 11

## பெருமை

முந்நாளில் தனவணிகர் குலத்தில் வந்து
மூகைஉருத் திரசன்மன் ஆகத் தோன்றி
அந்நாளில் புலவர்களின் கலக்கம் தீர்த்த
ஆசானாம் செட்டிஎனும் அரனின் மைந்தா!
எந்நாளும் பனிந்தொழுகும் பெருமைப் பண்பே
எப்போதும் செருக்கின்றி இயங்கும் பண்பே
அன்னியர்தம் குறைபாட்டை மறைக்கும் பண்பே
ஆனபெரும் பெருமைப்பண்(பு) அளிப்பாய்
ஐயா! 12

## இளமை

என்றுமிளங் குமரனெனும் ஏற்றம் பெற்ற
ஈராறு புயங்கொண்ட எழிலும் உற்ற
மன்றாடி மாற்றுருவே! வள்ளி கேள்வா!
மகிதலத்தில் உயிர்வாழ்வு நிலையே இல்லை
என்றதனால் இளமையிலே அறங்கள் செய்தே
இன்புறவே என்றென்றும் இருக்க வேண்டி
குன்றல்செய் வறுமைநிலை கூடி டாமல்
குறையாத இளமைநிலை கொடுப்பாய் ஐயா! 13

## துணிவு

தந்தையார் தரவிருந்த பழத்திற் காக
தமதுமயில் இவர்ந்துலகை வலமாய் வந்த



கந்தமலை முருகேசா! கார்த்தி கேயா!
கட்டாயம் மிகஊக்கம் கருத்தில் கொண்டே
எந்தவொரு செய்கை, வழி, எண்ணிப், பின்பு
இதயத்தில் துணிவுடனே இயற்ற லோடு
சந்ததமும் வாழ்க்கையிலே ஊக்கம் என்னும்
சத்துடைமை கொண்டோங்கச் செய்வாய் ஐயா! 14

## நோயின்மை

மமகாரம் இல்லார்பால் மகேசன் வந்து
மகிழ்ந்தவர்க்கே அருள்புரியும் மாண்பு போல
குமரிவள்ளி தனைத்தேடிக் குறுகிக் காதல்
கொண்டவளை மணங்கொண்ட குமர வேலா!
சமமாக, உணவுகளைச் செரித்த பின்பு
சாப்பிட்டே நோயின்மை சார்ந்து நிற்க,
எமதுடற்கே ஏற்றஉண்டி இட்டே உண்ண,
எக்காலும் நோயின்றிக் காப்பாய் ஐயா! 15

## வாழ்நாள்

முற்றறிவு, வரம்பிலின்பம், முடிவே இல்லா
முழுதாற்றல், தன்வயம், பேர் அருளோ(டு)
இன்னும்
உற்றஇயல் அறிவென்னும் குணத்தின் சின்னம்
ஓராறு முகமாக உருக்கொண் டோனே!
பற்றறனும் பண்புகளும் படிந்த வாழ்நாள்
பாங்காக அறநெறியில் வாழ்ந்தோர் போலக்
குற்றமிலா நல்வாழ்வு கூட்டும் வாழ்நாள்
குடும்பநலம் நீளாயுள் கொடுப்பாய் ஐயா! 16

## நூற்பயன்

மங்காத புகழ்விளங்க மாண்பு ஓங்க
மணிமகுடத் தனவைசிய நகரத் தார்கள்
சிங்கைநகர்த் தண்டபாணிச் செவ்வேள் கோயில்
சீராகக் கட்டிதிருக் குடநீ ராட்டும்
இங்கிதமாய்ச் செய்தஅன்று வெளியீ டிட்ட
இந்நூலைப் பயின்றுபக்தி செலுத்து வோர்க்கு
மங்கலமாய்ப் பதினாறு பேறும் நல்கி
மயிலூர்தி பாலிப்பான் வாழ்க நீடே!

**பதினாறு பேறும் பாலிப்பாய் முற்றிற்று**

உ

# மாவை முருகன்

## பண்டிதர் க. சச்சிதானந்தன்

தம்பி முருகவேள் தாள்மேற் கவிபுனையத்
தும்பி முகனே துணை. 1

**அடியவருள் முதியவர்:**

சரணீர் கதிரோன் முளைத்தனன் செங்கதிர்
தொடத் தொடப் பொன்கரை பட்ட தெங்கின்
இலையும் குலையும் இலங்குதல் காணீர்!
மாவும் தெங்கும் வாழையும் கமுகும்
யாவும் ஈண்டி இன்முகங் கொண்டனள்
பார்மகள் என்னப் பசுமை பூத்துக்
காலைக் கதிர்கள் கரந்தீண்டக் காட்சியாய்
மேல்பால் தோன்றும் வியன்பதி காணீரோ. 2

**அடியவருள் இளையவர் ஒருவர்:**

அடியவர்களே, சுருள்முகில் போல அங்குப்
படிகுவது மெதுவெனப் பகருவீ ரின்னே. 3

**முதியவர்:**

புக்கென்று புகைகக்கிப் பூமி யதிர்வாக
மிக்ககரி யுண்டு குளமொண்டு பசிமேவி
மக்களையு முள்ள டக்கும் புகைவண்டி
கக்குபுகை காங்கேயன் துறையிலே காணீர் 4

**இன்னொரு அடியவர்:**

பள்ளிசெலக் கள்ளமுறு பையனென வாயில்
தள்ளுபுகை வெண்சுருட் டொன்று தான்வைத்து



மெள்ள வறியாது பதியீது புகைக்கின்ற
கள்ள மறியேன் சொல்லுவீர் கந்தனடியீர் 5

**முதியவர்:**

சீமெந்து செய்கின்ற சாலையிது வாகும்
மேல்வந்த புகைகனலி வேகுகையி னாலே. 6

**வேறு**

காற்று வந்து கலகல வென்னவே
கன்னிப் பெண்ணகை யோடொரு நாணமாய்
ஏற்ற பாரம தாக விறைஞ்சல்போல்
எங்கும் பாரிளஞ் செந்தினை சாயுதே. 7

மின்னி லங்கிடு வேலவன் தாள்தொழும்
மெய்கொ ளன்பரின் தாளிணை பட்டதோ
பொன்னி னாயது மாவைப் பதியினிற்
பூமி யாவும் பொலிந்துநன் றாகவே! 8

காவி வஸ்திர மாதவத் தோரெலாம்
கந்தன் கோயிலைச் சூழ விரும்பியோ
பூமி யானவ ளாடைகொண் டோர்க்கெலாம்
பொன்னை யள்ளிப் புழுதி யென்றாக் கிற்றே. 9

**வேறு**

தினையின்குரல் அசையுந்தொறு மிசையொன்றிது கேளீர்
சிறுகன்னியர் நகையின்குரல் இடைவந்தது கேளீர்
பனையின்தலை கலசம்நிறை பதனித்துளி சொட்ட
பருவச்சிறு குதலைத்தமர் சுவைகொள்வது காணீர். 10

நாகத்தணி யாகத்தணி பாகத்துமை யாளன்
நாடித்திரி தருவானெனத் தோளிற்கயி றோடு
வேகத்தொடு கூபத்திடை தண்ணீர்மொள வேகும்
வீரச்சிறு காளைக்குல மேகும்நிரை பாரீர். 11

**வேறு**

மடைபாய்வன நீரே மலர்பாய்வன தேனே
விடைபாய்வன மாடே விருந்தாவன தினையே
கொடையாளர்கள் போலே குலையானவை நீட்டிச்
சடைவாழைகள கூவும் தணியாவருள் பாரீர். 12

வாழைச்சிறு பூவின் மதுவின்துளி சிந்திக்
கீழிற்குனிந் தேநீர் கீறிச்சிறை யிடுவோர்
தோளிற்பட வோடித் துடைமேனியொ டெல்லாம்
சூழப்பட நுள்ளான் தொகையேறுவ காணீர். 13

**வேறு**

தொங்குவன கொடிகள் தூங்குவன கதிர்கள்
தங்குவன காய்கள் தாழுவன கிளைகள்
பொங்குவது மடைநீர் பூணுவது பூக்கள்
எங்கணுமே பசுமை எங்கணுமே பயிர்கள். 14

கதலியின் குலைகள் சாயக் கமுகினம் பாக்குத் தூக்க
மதுமலர் மரங்கள் தூவ வள்ளிகள் வளைந்து நின்று
புதுவித மண்ட பங்கள் புனைந்திட முருக்கு நீட்டி
விதம்வித மான பச்சை வெற்றிலை அளித்து நிற்க. 15

பச்சறு கணிந்த பாங்கர் பாகுறு குதலைச் செவ்வாய்க்
கச்சறு கொங்கை மாதர் காதலிற் கனிந்து நிற்ப
நச்சிய காளை வீரர் நங்கையர் மீது காதல்
இச்சையே தாலி யாக இனமணம் புரிதல் காண்பீர். 16

பட்டியி லுறங்கு மாயன் பகற்பொழு தறியா னாக
குட்டிகள் சென்று எம்மைக் கூட்டியே செல்க என்று
முட்டியும் முரணி நின்றும் முதுகினைத் தடவிக் கேட்டும்
கட்டியு மணைந்தும் நிற்கும் காட்சியைக் காணு வீரே. 17

வள்ளியாம் மகளைச் சேர மகன்மர வள்ளி பாங்கர்
சொல்லிய வாழை யாகும் சோதிடர் தமக்கு ஏழு
மெல்லிய விரற்கை நீட்டி விதியினைப் பார்க்குங் காட்சி
நல்லது காண்மின் காண்மின் நாதனின் அடியீ ரெல்லாம். 18



**வேறு**

அள்ளிய புதுப்புதைய லென்ன அடிகல்ல
வள்ளிகள் கிழங்குதரு வள்ளன்மை காணீர். 19

தூங்கு கமுகின் குலைகள் சொல்லு தமிழ்வாணர்க்(கு)
ஆங்கு முடியிட்ட பொன் னாகுவது காணீர். 20

முள்ளுறு பலாக்கனி வெடித்தசுளை மூந்திப்
பிள்ளையணில் கிள்ளைபிரித் துண்ணுவது காணீர். 21

நாகரிக மங்கையர்கள் காதணிகள் நாண
மாமர முலுப்புகிற வாசகனி காணீர். 22

வாழைகுருத் தாங்குழலை வாயின்மிசை வைத்துக்
கேளென விசைக்குமே கீதப்புகழ் மாலை. 23

அப்பப்ப னையனென ஆண்டமுறை சொல்லிக்
கப்பப் பணங்கேட்கு மூப்பனிவர் காணீர். 24

**வேறு**

சங்கத் தமிழ்வடித்துச் சாகாத தேன்கவியாய்
எங்கும் மணக்க இசைகூட்டித் தந்தமுன்றில்
விருந்து புரந்தந்து வேறுண்ட தென்றுமில்லா(து)
அருந்துவது கூழெனினும் அன்பூட்டு மில்லமிஃதே
மணிவாசகன் சொன்ன மாமறைகோர் மந்திரம்போல்
அணியான நல்லுரைகாண் பாரதியும் ஆங்குளன்காண்.
ஐம்மொழி யுணர்ந்த அந்த ணாளன்
பொய்ம்மொழி யறியாப் புரிநூல் மார்பினன்
பாலசுந் தரத்தின் கோல முன்றிலில்
மேலைப் பரீட்சைக்கு வேண்டிய தாகலின்
இருக்கு வேதமும் தருக்க நூலும்
குருக்கள் முறையும் கோயில் விதியும்
ஆசிரி யர்கள் அமைவுறப் பயில்தலின்
காசினி முழுவதும் கவின்பெற எழுந்த
வேத வொலியுங் கீதமுங் கேளீர்
உள்ளம் தொட்டு ஊனும் உருக்குதே!
கடைந்த குழலிற் கரந்தொடு வதனாற்
கடைந்த அமுதம் காற்றில் வந்து
நாதஸ் வரமெனக் காதிலு மினிக்குதே!

குழலேந்து வாயினர் குரலோங்கு நாவினர்
மழலையா ழேந்து மலர்ச்சிறு கரத்தினர்
பட்டில் போலக் கட்டிய கலப்பையர்
கொட்டு மேளக் கூடுபடு மெல்விரல்
காளான் நுதியெனக் கவின்பெற வுடையோர்
எங்கள் பெருமானுக் கிசைபாடு மரபினர்
வாழும் வீதியும் மறுகும் காணீர்.
இறைப்போர் பாடும் இன்னிசைப் பண்ணும்
துறைநீர் மோதிய சோவென் னிசையும்
மறையோர் வேதம் அறைந்த ஓதையும்
பள்ளிச் சிறுமியர் பண்பயில் மிடற்றோர்
மெள்ளத் தடவிய வீணையி னொலியும்
முற்றா மழலை மிடற்றெழுந் திசைக்கும்
நற்றே னிசையின் நடந்த சரிகம
ஓதையும் காளைகள் ஒன்றினை ஒன்று
முந்திட முட்டிய கூவிளி ஓதையும்
வந்தொருங் கிசையும் சந்தமிது நன்றே. 25

**வேறு**

கட்டி முடியாத மேல்கோபுர நிமிர்ந்து
காா்முகிலை யுந்தொடும் காட்சியிது பாரீர்
கொட்டிய குரக்கன் புட்டினை நிகர்த்த
கோபுரமுன் வாசலிடை தோன்றுவது பாரீர். 26

## அடியவர் முருகனைத் தொழுதல்:

**வேறு**

கோடி சூரியர் கூடிவந் தென்னத்
தேடும் மனத்தோர்ச் செஞ்சுடர் மேனியைக்
காயா கண்மலர்ந் தன்ன சாயல்
மணிநிற மஞ்ஞை அணிபெறக் கொண்டனை
அந்தி வானத்துச் சிந்திய செக்கர்
தோய்ந்தனைய செவ்வேல் ஏந்திய கரத்தோய்
மழலைக் குறுமுரல் மலர்வாய் விரிய
இளமை பூத்த அழகொழுகு நோக்கினை
அவிழ்ந்த வாசத் தரும்பிய கடம்பிற்



நிகழும் மார்பினை சேவற் கொடியினை
தொழுவார் விழுமந் துடைக்கக் குளிர்ந்து
அருளொழுக நோக்கும் திருவிழி யரசே
மங்கையர் நீங்கா மணவா ளாவென்
ஆருயிர்த் தலைவா அழகின் நிதியே
பேரொளிப் பிழம்பே பெரியோர் மனத்தோய்
''யாமே,
அண்டம் பறப்போம் அணுவூடு துளைப்போம்
எண்டிசை யாவும் இக்கணம் அழிப்போம்
ஆழிக் கடியினில் ஆழ்ந்து வசிப்போம்
கோளெலாம் சுற்றும் கோளமும் மாற்றுவோம்
பெண்ணா ளின்றிக் கண்ணாடிக் குழலிற்
பண்ணுவோம் குழவியை எண்ணுவோம் வானும்
வானிற் சிதறிய பானிரை மீனும்
உயிரென்ப தில்லை உடலின் அசைவே
உடல் மாய உயிரும் மாயும்
அடலே நீதி. அருளென்பது நோய்''
என்பன கூறும் புன்மதி யாளரொடு
அன்பிலா மேலை அஞ்ஞானி களோடு
பூதத் திறனன்றி நாதனை யறியா
வம்பரொடு சேர்ந்து மாய்ந்தனம்
உம்பரும் காணா ஒளியே, முதலே,
கோணக் கணக்கும் கோள்நிலைக் கணக்கும்
பூத வியல்பும் வேதி நூலும்
புலன்களா லளக்கும் பொருட்குண மன்றி
அணுவி லண்டமாய் அண்டத்துக் கப்பாலாய்
கற்பனை கடந்த அற்புத ஒளியாய்
நின்ற நின்னை அறிவரோ! மன்ற
அன்பு கண்ணாகநின் அருளே ஒளியாய்
இன்புற நோக்கின் எழுந்து வருமலையே
மணியே மனத்தில் ஊறும் தேனே
பிணியெலா மறுக்கும் பேரமுத மருந்தே
இல்லா மனமிடி அறுக்கும் செல்வா
எல்லா மளிப்பாய் ஏழையர் தாயே
உடலோ டழியும் உயிரும் என்ற
மடமை யாளர் வலைப்பட் டதனால்
தீமை நன்மை சிறிது மில்லை

யாவும் புலனின் நுகர்ச்சி யென்று
செய்வ தறியாது திசைதெரி யாது
உய்வழி காணாது ஒளிகாண் கிலாது
சித்தம் மயங்கித் திகைத்து நின்றோம்
அத்தா, அமரா, அடியார் கனியே,
சித்தத் தினித்த தேடாக் கரும்பே,
கேளா துடல்தந்த போளா மணியே.
மாளாதெனை யாண்டாய் மன்னவா மன்னவா
பாதப் பதமலர் பற்றிக் கொண்டோம்
நாதா, இனிநாம் நண்ணுவ தெங்கே
குறிஞ்சித் தலைவா, நறுஞ்சிலைக் கடம்பின்
ஆரந் தாழ்ந்த மார்பின் அழகா,
குளிர்ந்து தெளிந்து குதித்துக் கல்லிழிந்து
துளும்பி வழிந்து தவழ்ந்த தூநீரருவி
சலசல ஒலியுடன் தனிப்பண் ணிசைத்தல்கண்
டுன்குளிர் வதனத் தருளின்குளிர் காண்போம்
மலைதீப் படுவதேபோல் மலர்க்காந்தள் விரியநின்
கொலைவேற் குருதிநிறம் காண்போம் மலையோனே
மலைஒளித்த மதியம் கலைநிறைந் தொளிர்ந்து
நிலைநின் றசையா வெண்முகில் நிரையின்
கரையினைத் தொடத்தொடக் காலும் முத்தொளியில்
அரும்பிய முறுவல் அழகு கண்டோமே
உடைந்த தேனின் ஊற்றருவி யூரக்
கடைந்த அமுதக் கன்னித் தமிழ்ச்சுவை
அடியார் வாயில் வடிவது காண்போம்
பிளந்து சரிந்த பிலத்தொடு மலைகண்டால்
விழுந்தசூரன் புரண்ட மார்பென வியப்போம்
பச்சைப் பிஞ்சுத் தளிரின் அழகிலும்
கொச்சைக் குறவர் குழவிகள் தமிழிலும்
மோப்பக் குழையும் அனிச்சம் போலுறுத்துப்
பார்ப்பிற் குழையும் பச்சிளந் தினையிலும்
முருகா நின்றன் முற்றா இளமைகண்டு
உருகா நின்றோம் உரோமம் பொடித்தோம்
கண்கண்ட தெய்வமே விண்கண்ட முதலே
குன்றக் குறவர் குடிசை நடந்தவனே,
என்றன் மனக்குடியில் எழுந்தருள்க இனியே
கார்த்திகை மங்கையர் கரந்தொட் டணைக்கச்



சீர்த்திய தாமரைத் தவிசு கிடந்த
செல்வத் திருத்தாள் சிவப்ப என்கல்
உள்ளம் நடந்தால் உருகுமே யன்றி
யாவது செய்யினும் கனியாது முருகா,
முருகா எனுமொழி செவிசென் றடைதலும்
பயமும் பகையும் பவமும் பறக்கும்
நயமும் நகையும் மலரும் முகத்தே
உள்ளம் இனித்துத் தேனாய் உருகும்
கள்ளம் போகும் கண்ணீர் சுரக்கும்
மணக்குங் கடம்பின் மலர்த்தா ரோனே!
வணங்குந் தலையே கரங்கள் குவியும்
அரைகுறை யர்க்கினும் அரகரா அமுதம்
ஆதியைத் தொட்டெனுள் சோதியிற் கலந்து
உள்ளம் கிளர்த்தி உவகை வெறியேற்றி
விள்ளக் கண்ணீர் மேனிமயிர் பொடித்துப்
பதமலர் சிக்கெனப் பற்ற வைக்கிறதே
வள்ளி மணாளா, வருக வருக
உள்ளம் கொண்ட கள்வா வருக
குறிஞ்சித் தலைவா குமரா வருக
மாயோன் மருகா மாவிட்ட புரத்து
மன்னா வள்ளி மணாளா வருக
மனக்குடில் வந்து எனைப்பெரி தாண்டென்
உள்ள வறுமை நீக்குவாய்
வள்ளலே கடம்பா வடிவே லோனே.

**மாவை முருகன் முற்றிற்று**

உ

# முருகா சரணம்

## திருப்புகழ்மணி

முருகா சரணம் முருகா சரணம்
முருகா சரணம் முருகா முருகா
அன்பர்கள் நேயா அம்பிகை புதல்வா
துன்ப மகற்றிடும் சீலா பாலா 1

சிவகுமரா முருகா வருக
பரம புருஷா வரந்தர வருக
கலங்கா தெனையே காத்திடு முருகா
மலந்நான் அணுகா வரம்தா முருகா 2

காவா முருகா கார்த்திகைக் குமரா
வாவா முருகா சாகா வரம்தா
வாவா முருகா வினைதீர்த் திடவே
யோகா முருகா பகைமாற் றிடவே 3

பொன்னடி போற்றிப் பணிந்திடவே
சென்னியில் உன்னடி ஓங்கிடவே
தேடிய நலங்கள் செறிந்திடவே
பாடிய புகழ்கள் மலிந்திடவே 4

கூடிய அன்பர் கும்பிடவே
அன்பாய் அவர்தாள் சூடிடவே
முருகா சரணம் முருகா சரணம்
முருகா சரணம் முருகா முருகா 5

முருகா சரணம் முற்றிற்று



உ

# வீரவேல் வணக்கம்

## அ. சுப்பிரமணிய பாரதி

### திருப்பரங்குன்றம்

சீர்த்தியாய்த் துதிகள் பாடித் திருவடிக்(கு) மலர்கள் தூவி
ஆர்த்தியாய் வழிபாடாற்றும் அன்பரின் இதயக் கோயில்
மூர்த்தியாய் விளங்கும் எங்கள் முதிர்பரங் குன்றின் வாழ்வாம்
கார்த்திகே யன்கைவேலைக் காண்பதே யெமக்கு வேலை. 1

### திருச்சீரலைவாய் (திருச்செந்தூர்)

முறுவலிற் புரமெரித்த முக்கணன் தனக்கும் கும்பக்
குறுமுனி தனக்கும் போத குருவெனும் அரிய பேறு
பெறுமொரு சிறியன் தெய்வப் பிடிமகிழ் கணவன் செந்தூர்
அறுமுகன் கரத்துவேலை அடுப்பதே யெமக்கு வேலை 2

### திருஆவினன்குடி (பழனி)

மாதவன் மகிழ்ந்(து) அளித்த மடந்தையர் இருபால் மேவ
மேதகு மயிலின் மேல்ஓர் வெற்பினில் உதயமான
ஆதவன் எனவே போற்ற ஆவினன் குடியில் வாழும்
நாதன்செவ் வேளின் வேலை நாடுவ(து) எமக்கு வேலை. 3

திண்ணனார் சுவைத்(து) அளித்த தீஞ்சுவைக் கறிசுவைத்த
அண்ணனார் அணைத்துக் கண்ணே! அப்பனே! நீயே நேய
வண்ணமாம் பழம்என்று ஓத மகிழ்ந்துதென் பழனி வந்த
விண்ணவன் கரத்து வேலை விளம்புவ(து) எமக்கு வேலை. 4

### திரு ஏரகம் (சுவாமிமலை)

சென்னி ஆறும் தணிந்த சிவபரஞ் சுடர்க்கு, வேதம்
சொன்ன ஆசிரியனென்று தொல்லுலகனைத்தும் போற்றப்
பொன்னிசூழ் ஏரகத்துப் பொருப்பினிற் கோயில் கொண்ட
பன்னிரு கையன் வேலைப் பணிவதே எமக்கு வேலை. 5

### குன்றுதோறாடல் (திருத்தணி)

கொன்றைசேர் சடைகள் ஆடக் கொடியிடை உமையாள் காண
மன்றிலே ஆடல் கொண்ட மகதேவன் வியந்து வாழ்த்தக்
குன்றுதோ றாடல் காட்டும், குமரவேள் மலர்க் கரத்து
வென்றிசேர் சக்தி வேலை வேண்டுவ(து) எமக்கு வேலை. 6

### பழமுதிர்சோலை

புவனம்ஓர் மூன்றும் வாழப் புராரிதன் நுதற்கண் நோக்கில்
அவிர்சுடர் ஒளியாய்த் தோன்றி, அறுமுகத் தேவாய் அன்பர்
பவபயம் ஒழித்துக் காக்கப் பழமுதிர் சோலை மேவும்
சிவசுப்ர மண்யன் வேலைச் சேவிப்ப(து) எமக்கு வேலை. 7

**வீரவேல் வணக்கம் முற்றிற்று**



# ஆசிரியர் அகராதி

# பாட்டுடைக் கோவில் அகராதி

# பாட்டு முதற்குறிப்பு அகராதி